# போகர் ஏழாயிரம்

## (மூன்றாம் ஆயிரம்)





அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக்குழு
1975

வெளியீட்டுத் தொடர் எண்: 16

Bogar Elayiram-1000

# போகர் ஏழாயிரம்

## (மூன்றும் ஆயிரம்)





அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்
சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினருக்காக
கௌரவத் தலைவர்
டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,
அவர்களால் பதிப்பிக்கப்பெற்று
தமிழ்நாடு அரசுக்கு நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

கி.பி. 1975 விலை ரு. 8-60

முதற் பதிப்பு: 1975



அச்சிட்டோர்:
ரத்தினம் கிளை அச்சகம்,
65. திருப்பள்ளித் தெரு,
சென்னை-600001.

# அருள்மிகு
# பழநி தண்டாயுதபாணி சுவாமி
# திருக்கோயில்



# அருள்மிகு
# பழநி தண்டாயுதபாணி சுவாமி
# திருக்கோயில்

டாக்டர் ப. சிற்சபை, ஆர்.ஐ.எம்.பி.,
துணைத் தலைவர்,
இந்திய மருத்துவ மத்தியகழகம் ... உறுப்பினர்

திரு. இரா. அர்ச்சுனன், பி.ஏ.,
நிருவாக அதிகாரி, அருள்மிகு பழநி
தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்,
பழநி. ... உறுப்பினர்

டாக்டர் பு. மு. வேணுகோபால், எச்.பி.ஐ.எம்.,
இந்திய மருத்துவத்துறை இயக்குநர், சிறப்பு
சென்னை-600029. ... அழைப்பினர்

## சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழு

### உறுப்பினர்கள்

1. டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்., பொறுப்பு அலுவலர், சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம், சென்னை-600029. ... தலைவர்

2. டாக்டர் பு. மு. வேணுகோபால், எச்.பி.ஐ.எம்., இயக்குநர், இந்திய மருத்துவத்துறை. சென்னை-600029. உறுப்பினர்-செயலர்

3. டாக்டர் சி. எஸ். உத்தமராயன், எச்.பி.ஐ.எம்., முன்னாள் இயக்குநர், இந்திய மருத்துவத்துறை, சென்னை-600005. ... உறுப்பினர்

4. டாக்டர் எம். சண்முகவேலு, எச்.பி.ஐ.எம்., முன்னாள் மருத்துவப் பேராசிரியர், இராமநாதபுரம். ... உறுப்பினர்

5. டாக்டர் கே. இராதாகிருஷ்ணன், எல்.ஐ.எம்., மருத்துவ அலுவலர், ஊராட்சி ஒன்றிய மருந்தகம், காவேரிப்பாக்கம், வட ஆர்க்காடு. ,,

6. டாக்டர் எ. சிறில் ஹென்றி, எல்.ஐ.எம், ஓய்வுபெற்ற மருத்துவ அலுவலர், நகராட்சி மருந்தகம், திருச்சி. ,,

7. டாக்டர் ஆ. ஆனந்தகுமார், ஜி.சி.ஐ.எம்., தலைவர், இந்திய மருத்துவ மத்திய கழகம், சென்னை-600005. ... உறுப்பினர்

8. டாக்டர் ப. சிற்சபை, ஆர்.ஐ.எம்.பி., துணைத்தலைவர், இந்திய மருத்துவ மத்திய கழகம். ,,

9. பண்டிட். பெ. முத்துக்கருப்ப பிள்ளை, ஆர்.ஐ.எம்.பி., தலைவர், சித்த மருத்துவ சங்கம், மதுரை. ,,

10. டாக்டர் டி. வி. கல்யாணசுந்தரம், ஆர்.ஐ.எம்.பி., தலைவர், சென்டிரல் சித்தா மெடிக்கல் கவுன்சில், சென்னை-600012 ,,

11. டாக்டர் என். சேது ரகுநாதன், தமிழ்ப்பேராசிரியர், விருதுநகர். ,,

12. திரு. நி. கந்தசாமிப்பிள்ளை, முன்னாள் செயலர், தஞ்சை சரசுவதி மகால் நூலகம், சென்னை-600020. ,,




### சிறப்பு அழைப்பினர்கள்

1. டாக்டர் பொன். குருசிரோன்மணி, பி.ஏ.,ஜி.சி.ஐ.எம்., முதல்வர், அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி, பாளையங்கோட்டை.

2. டாக்டர் மு. வே. ரமணன். எல்.ஐ.எம்., பேராசிரியர், மேல் பட்டப் படிப்பு, அரசினர் இந்திய மருத்துவக் கல்லூரி, பாளையங்கோட்டை.

3. டாக்டர் டி. வி. சுப்பாரெட்டி, கௌரவ இயக்குநர், இந்திய மருத்துவ வரலாற்று ஆராய்ச்சி நிலையம், ஐதராபாத்.

4. டாக்டர் இரத்தினவேலு சுப்பிரமணியம், பி.எஸ்ஸி., எம்.டி., எம்.ஆர்.சி.பி. (லண்டன்), சென்னை-600010.

---



## மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர்

### மாண்புமிகு

### பேராசிரியர் க. அன்பழகன், எம்.ஏ., அவர்கள்

அளித்த

# அணிந்துரை

முன்தோன்றிய—மூவா முதன்மொழியாம் தமிழுடனும் அதன் நாகரிகத்துடனும் பிறந்து வளர்ந்த—சித்த மருத்துவத்தின் நன்மையும் மேன்மையும் உலகம் என்றும் இழந்துவிடாது காப்பது நம் கடன். தமிழகத்திலும் பிற தென் மாநிலங்களான திராவிடத்திலும் சித்த மருத்துவம் இன்றும் பலரால்—வழிவழியாகவும், கற்றறிந்தும்—கையாளப்பட்டு வரினும் அதன் சிறப்பும் புகழும் நிலைபெறுதற்கு நாம் ஆற்றவேண்டிய பணிகள் பலவாகும். தமிழக அரசின் ஆதரவாலும் இத்துறை வல்லுநர்களின் முயற்சியாலும்—மருத்துவ முறைகளுள் சித்த மருத்துவமும் இடம்பெற்று வளருகிறது. எனினும், அதன் தனிச் சிறப்புகள் அறிவியல் ஆய்வாளர்கள் ஒப்புக்கொள்ளுமாறு ஆய்வுகள் மூலம் நிலைநிறுத்தப்பட்டாகவேண்டும். அந்தநிலை உருவாவதற்கு—ஓலைச் சுவடிகளாகவும் ஒருகாலத்திலே அச்சேறியும் இன்று கிடைத்தற்கரிதாகியும் உள்ள நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள் உடனடியாகப் பதிப்பிக்கப்படவேண்டும். இவை வெளிவந்தால்தான் இன்று சித்த

மருத்துவம் பயிலும் மாணவரும் இளம் மருத்துவரும், அவற்றைப் பயின்று பயன்பெற இயலும். மருந்து செய்முறைகளை ஒப்புநோக்கி உண்மை தெளியவும், மருந்துகளின் தரத்தை உறுதிப்படுத்தவும், அரிய மூலப்பொருள்கள் கிட்டாதவிடத்து மாற்று மூலப்பொருள்களைக் கொண்டு மருந்து செய்திடவும், மருந்து உற்பத்தியைப் பல மடங்காகப் பெருக்கி மக்களுக்குப் பரவலாகக் கிடைக்கச் செய்யவும் வாய்ப்பாகும் ; பரவலாக எங்கும் எளிதில் கிடைப்பதால் செல்வாக்குப் பெற்றுள்ள அலோபதி மருந்துகட்கு ஈடுகொடுத்து மக்களிடம் செல்வாக்குப் பெறவும் முடியும்.

எனவே, சித்த மருத்துவ நூல்கள் வெளியிடும் முயற்சிக்குத் தகுந்த நிதி உதவி வேண்டுமென்னும் எனது வேண்டுகோளை இசைவுடன் ஏற்று அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவல் குழுவினரும்—அதன் முந்நாள் தலைவர் திரு. பு. மனோகரன் அவர்களும்—இதற்காக இரண்டு லட்சம் ரூபாய் நிதி ஒதுக்க முன் வந்ததுடன் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென டாக்டர், இரா. தியாகராசன், எல்.ஐ.எம், அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்துச் செயல்படுத்தலாயினர்.

இக்குழுவின் தலைவரும், உறுப்பினர்களும் ஆர்வத்துடன் ஈடுபட்டு ஆற்றிவரும் நற்பணியும்—பல்வேறு வகையிலும் அவர்கட்குத் துணைநிற்போர் ஆற்றும் பணியும்—இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் அவர்களின் இயக்குவித்திடும் திறனும் எனது பாராட்டுக் குரியனவாகும்.

அருள்மிகு பழநி திருக்கோயில் அறங்காவலர் குழுவினருக்கும், அக்குழுவின் தலைவருக்கும் எனது நன்றியும் பாராட்டும் உரியவாகும்.

இந்த நூல் வெளியீட்டுக் குழுவினரால் தேர்ந்தெடுக்கப்பெற்று முதலில் வெளியிடப்படும் நூல் வரிசையில் போகர் ஏழாயிரத்தில் தற்போது கிட்டியுள்ள முதல் மூன்று ஆயிரங்களாகும். அவற்றுள் முதலிரண்டு ஆயிரங்கள் திரு. வே. கங்காதரத் தேவர் அவர்களால் 1898-ல் பதிப்பிக்கப்பெற்று அந்நூல் கிடைக்காததாகி விட்டது. மேற்படி நூலின் மூன்றாமாயிரம் இதுவரை



அச்சேறுததாகும். அத்தகைய நூலை நூலின் தொன்மையையும், மேன்மையையும், பயனையும் கருதி "தன் வருத்தம் பாரார் பசிநோக்கார், கண்துஞ்சார்" என்ற பாட்டின் எடுத்துக்காட்டாக உழைத்து இரண்டு கைப்படிகள் எடுத்துத் தன் கன்மமே கண்ணாயினார் என்பதை மெய்ப்பித்த சென்னை, சைதாப்பேட்டை, காலஞ்சென்ற திரு. தணிகாசல வைத்தியரை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். அவரிடம் கிடைத்ததான இரு சுவடிகளின் படிகளையும் தனித்தனியே எடுத்தமை அந்நூலைச் சரிவர ஒப்புநோக்கித் திருத்தமான பாடத்தைக் கண்டுகொள்ள வாய்ப்பு அளித்தமை குறிப்பிடத் தக்கதாம். அரிதிற் கிடைத்த பெரிய கருவூலமாகிய இந்நூலைத் தந்நல நோக்குடனே ஒளித்திடாமல் "கரவாதளித்திடும் கருமுகில்போல்" எல்லோருக்கும் பயனாகும் வகையில் இந்நூல் வெளியீட்டுக் குழுவினரிடம் ஒப்படைத்தமை மேற்படி தணிகாசல வைத்தியரின் தொண்டைச் சிறப்பித்ததோடல்லாமல் 'பிறர்க்குரியாளர்' என்ற பெரும்பெயரை அவருடைய திருமகனார் டாக்டர் திரு. த. தங்கவேலு அவர்கள் பெற்றுத் திகழ்கிறார் என்றால் அது மிகையாகாது. அத்தகைய மனப்பான்மை யாவரிடத்தும் ஓங்கவேண்டுமென்று ஒரு வேண்டுகோள் விடுத்து அவருக்கு என் மனமுவந்த பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மிகக் கொடிய நோய்களையும் அறத் தீர்க்கும் பற்பம், செந்தூரமாகிய முறைகள், நமது நாட்டு மருத்துவத்தில் இருப்பதுபோல மற்ற மருத்துவத்தில் இல்லையென நமது மருத்துவநூல் பயிற்சியுள்ள ஐரோப்பிய மருத்துவர்கள் மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிறார்கள். ஆங்கில மருத்துவம், நாட்டு மருத்துவம் ஆகிய இரண்டிலும் சிறப்புப் பயிற்சியுள்ளவர்களான சிறந்த பண்டிதர்களின் தீர்மானமாவது :—

"அறுவை செய்தல் முதலிய இரண மருத்துவத்தில் ஆங்கில முறை வைத்தியம் மிகவும் மேலானது. மற்ற நோய்களின் மருத்துவத்தில் தற்கால சாந்தியாகச் செய்வதிலும் ஆங்கிலவைத்தியமே அதிகம் சிறந்தது ; ஆனால் நாட்பட்ட நோய்களையும் பெரிய நோய்களான குன்மம், நீரிழிவு, சயம், எருவாய் நோய், பாண்டு, மந்தாக்கினி,

மேகம், தாது இழப்பு முதலிய கடின நோய்களையும் அறத் தீர்ப்பதற்கு நாட்டு மருத்துவ முறைகளே மிக மேன்மையானவை. அவற்றுள்ளும் முறைக் கிரமமாகச் செய்யப்பட்ட பற்ப, செந்தூரங்களே மிக மேன்மை பெற்றவை.'' என்பதே.

இந்த அபிப்பிராயமானது மிகவும் சரியானதெனவும், உத்தமமானதெனவும், அதிகம் வாய்மையானதெனவும் சிறந்த மருத்துவர்களான ஒவ்வொருவரும் முழுமனதோடு ஏற்றுக்கொள்வார்கள்.

இக்கூற்று உண்மையாவதை, நவீன கருவிகள் வளர்ச்சியால் ஆலென வளர்ந்து அடர்ந்து நிற்கும் அலோபதி மருத்துவமும் ஏற்கும் வண்ணம் நடைமுறையில் செயல்படுத்தி எண்பிக்கும் வல்லமையும், ஆராய்ச்சி முறையில் சான்றுகளை உருவாக்கும் முயற்சியும் ஓங்க வேண்டுமென்பதே எனது பேரவா.

இந்த உயர்ந்த நோக்கத்துக்கு உறுதுணையாகுமாறு இவ்வரிய நூலைப் பதிப்பித்து வழங்கியுள்ள அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவநூல் வெளியீட்டுக் குழுவினரின் முயற்சி பாராட்டுக்குரியதாம்.

இவ்வெளியீடு மேலும் பல நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளோரை ஊக்கப்படுத்துவதற்குத் துணைசெய்வதாகுமென நம்புகிறேன். அவர்கள்தம் முயற்சிவளர வாழ்த்துகிறேன்.

சென்னை
20—8—1975

க. அன்பழகன்.

## முன்னுரை

உலக மொழிகளில் மிகப் பழமையானது தமிழ் மொழி; தமிழ் மருத்துவ முறையும் அத்தகைத்தே. இம் மருத்துவ முறையைத் தோற்றுவித்தவர் சித்தர்கள் எனப்படுவர். ஆகையால், இம்மருத்துவத்திற்குச் சித்த மருத்துவமென்று பெயர் அமையலாயிற்று. அச் சான்றோர்கள் தாம் கண்ட உண்மைகளையும் மருத்துவ நுணுக்கங்களையும் மருந்துச் சரக்குகளின் குணம் முதலானவைகளையும் மாணவர்கள் பலரை ஏற்று ஓதியும் ஓதுவித்தும் பற்பல ஏடுகளில் பதிவு செய்தும் உலகோர்க்கு உதவிசெய்து தம் மருத்துவ முறைகளைப் பரப்பி வந்தார்கள்.

காலப்போக்கில், சிறிது சிறிதாய் இயற்கையின்—நிலநடுக்கம், கடல்கோள் போன்ற—சீற்றம் காரணமாகவும், வெளிநாட்டார் படையெடுப்பு, சிதலை, இராமபாணம் போன்றவைகளின் தாக்குதலாலும் பல ஏடுகள் அழிந்தவை போக மிகுந்தவைகளில் சில மேலை நாட்டு நூல் நிலையங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டனவெனக் கூறப்படுகின்றது. இன்னும் எஞ்சியுள்ள ஏடுகளாலும், அம்மருத்துவக் கலையைத் தொன்றுதொட்டுக் கையாண்டுவரும் மருத்துவர்கள் வாயிலாகவும், பல நூற்றாண்டுகளாக அதன் அடிப்படை உண்மை, தனித்தன்மை காரணமாகவும் சித்த மருத்துவம் அழியாது நிலைபெற்றிருக்கிறது.

தஞ்சையையாண்ட மராட்டிய மன்னர் சரபோஜி அவர்களின் ஆட்சிக் காலத்தில் சித்த, ஆயுள்வேத, யூனானி மருத்துவ ஏடுகள் எல்லாம் சரசுவதி மகால் நூல்நிலையத்தில் அரியணை ஏறின. மருத்துவப் புலவர்களின் அனுபவங்கள் ஏடுகளில் ஏறி ஏமமுற்றன. மருத்துவம் செய்முறையும், பிணித் தீர்வும் அவர் ஏற்படுத்திய தன்வந்திரி மகாலில் மறுமலர்ச்சியுற்றன. அவர் ஆட்சிக்குப்பின் சித்த மருத்துவம் அரசு ஆதரவை இழந்து பழையபடி குடிமக்களின் ஆதரவு கொண்டு ஆங்காங்கு வழக்கில் இருந்துவரலாயிற்று.

மிக அண்மையில் வெள்ளையராட்சிக் காலத்தில் நீதிக்கட்சி சார்பில் முதல் அமைச்சராகப் பணியாற்றிய பானகல் அரசர் 1924-ல் இந்திய மருத்துவப் பள்ளியைத் தோற்றுவித்து,

பல கிராம மருத்துவ மனைகளையும் அமைத்து இயங்கச் செய்து சித்த மருத்துவம் முதலான இந்திய மருத்துவ முறைகளின் மறுமலர்ச்சிக்கு வித்தூன்றினர். அக்காலத்தில் மேற்படி கல்வி நிலையத்தில் பயிலும் மாணவர்களுக்கு அமைந்த பாடத்திட்டப்படி கற்பிக்கப் போதிய பாடப் புத்தகங்களும் முதல் (மூல) நூல்களும் இல்லாக்குறையை ஓர்ந்து பாடப் புத்தக ஆக்கக்குழுவை அரசு அமைத்தது. அந்நாள், சித்த மருத்துவத்துறைத் தலைமை ஆசிரியராய் இருந்த பண்டிட், வைத்திய ரத்தினம், மருத்துவ சிரோன்மணி காலஞ்சென்ற க. ச. முருகேச முதலியார் அவர்கள் குணபாடம் (மூலிகை வகுப்பு) என்னும் நூலைத் தன் சொந்த முயற்சியால் இயற்றி அரசினர்க்கு நன்கொடையாக அளித்து வெளியிடச் செய்தும், குழுவினர் அரசுவழி வெளியிட்ட நஞ்சுநூல், பாலவாகடம் என்னும் நூல்களைப் பார்வையிட்டும் உதவினர். அக்குழுவினர் நூற்றுக்கு மேற்பட்ட மருத்துவச் சுவடிகளையும் அச்சிட்ட நூல்களையும் சேகரித்து ஒரு நூல்நிலையம் ஏற்படுத்தினர்.

மேற்படி பள்ளி, கல்லூரியாக மிளிர்ந்தபோது, அந்நாள் கௌரவ இந்திய மருத்துவ இயக்குநராகப் பணியாற்றிய டாக்டர் ம. ரா. குருசுவாமி முதலியார் ஊக்கம் கொடுத்தமை காரணமாக 1950-ல் சித்த மருத்துவம், மருத்துவாங்கச் சுருக்கம், நோயில்லா நெறி, குணபாடம் (மூலிகை வகுப்பு), குணபாடம் (தாது சீவ வகுப்பு) என்ற நூல்களும் அப்போது பணிபுரிந்து வந்த கல்லூரி விரிவுரையாளர்களைக் கொண்டு எழுதுவித்து அரசுவழி வெளியிடப் பெற்றன.

அக் கல்லூரி நிகழ்ந்த காலத்திலும் பின்னர்ப் பாளையங்கோட்டைக் கல்லூரி தோன்றிய பின்னுங்கூட, பாட நூல்களும் துணை நூல்களும் நிரம்பாமை பெருங்குறையாக நீடித்துவருவதாயிற்று.

ஆகவே, பண்டைய சித்த மருத்துவ ஓலைச் சுவடிகளையும், கையேடுகளையும், ஒருமுறை அச்சாகிப் பின் விற்பனைக்குக் கிட்டாத புத்தகங்களையும் சேகரிக்கவும், மருந்து செய்முறை அட்டவணை தயாரிக்கவும், பாட நூல்கள் வெளியிடவும் ஆகிய பணிகள் செய்ய (Pharmacopea Committee, 1966 G.O.M.S. 2163 Dt. 23—8—60) ஒரு குழுவும், சித்த மருத்துவக் கல்வி மற்றும் பாட நூற்குழு என்று (G.O.M.S. No. 1060 Health Dt. 13—6—66) ஒரு குழுவும், திருவருட்பா, திருப்புகழ் முதலியவைகளில் உள்ள மருத்துவப் பகுதிகளை ஆய்வதற்காக ஒரு குழுவும் எனத் தமிழக அரசு குழுக்களை ஏற்படுத்தியது. அதன் விளைவாக அறுவை மருத்துவம், சூல் மருத்துவம் என்ற நூல்கள் வெளிவந்தன.



மீண்டும் விரைவில் பயன்காண வேண்டி 1973ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 15ஆம் நாள் தமிழக அரசினர் மேற்கூறிய குழுக்களை ஒருங்கிணைத்துச் சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக்குழு என்னும் ஒரு குழுவைத் (G.O-M.S. No. 2571 of 23—10— 3) தோற்றுவித்தார்கள். அக் குழுவின் பணிகளாவன: சித்த மருத்துவ அரிய சுவடிகள், கையேடுகள், அச்சாகிய பழைய நூல்கள் ஆகியவைகளைச் சேகரித்துப் பாதுகாத்தல்; ஓலைச்சுவடிகளை ஆய்ந்து கையெழுத்துப்படி, தட்டெழுத்துப்படி முதலியவைகளை எடுத்து அச்சியற்றி வெளியிடல்; ஒருமுறை அச்சில் வெளிவந்து விற்பனையில் கிடைக்கப் பெறாத நூல்களை மீண்டும் வெளியிடல்; இதுவரை அச்சிடப்பெறாத நூல்களை வெளியிடல் என்பனவாம். அதன்படி இக்குழுவினர் இதுவரை 400 சுவடிகளையும் 100 கையெழுத்துப்படிகளையும், ௨௬0 அச்சான பழைய நூல்களையுப் சேகரித்துள்ளனர்.

இக்குழுவினர் தாம் மேற்கொண்ட பணிகளைச் செயலாற்ற, இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகத்தில் ஒரு தனி அலுவலரையும் அவர்க்கு உதவியாளர்களையும் நியமித்துள்ளனர். அவர்கள் நூல்களைப் படியெடுத்துத் திருத்தம் செய்து அச்சியற்றத் தக்க வகையில் செய்துவருகின்றனர்.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் நிதியிலிருந்து சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்கென்று ஒதுக்கப்பட்ட இரண்டு இலட்சம் ரூபாயைக் கொண்டு மேற்படி நூல்களை, நடைமுறைச் சிக்கல்களைத் தவிர்த்து வெகு விரைவில் வெளியிட மேற்படி சித்த மருத்துவ அறிவியல் வளர்ச்சிக் குழுவிலுள்ள உறுப்பினர் சிலருடன் அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் அறங்காவலர்க்குழுத் தலைவர் அவர்களையும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரியையும் கொண்டு அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு ஏற்படுத்தப்பட்டது. அக்குழு முடிவெடுத்தபடி முதல் வெளியீட்டு வரிசையில் தற்போது கிட்டியுள்ள போகர் ஏழாயிரத்தின் முதல் மூன்று ஆயிரங்களும் இடம் பெறும். மேற்படி நூலின் ஆசிரியர் போகர் என்னும் சித்தரென்பது வெளிப்படை. இவரைப் பதினெண் சித்தரில் ஒருவரென்பர். இவர் போகர் நிகண்டு, மூலிகைத் தொகுப்பு, கற்பம்முந்நூறு, வர்மநூல் முத

ளிய பல அரிய நூல்களை யாத்தளித்துள்ளாரென்பது தெரிகிறது. இவரது ஆசான் காலாங்கிநாதரென்றும், இவரது பாட்டனார் திருமூலரென்றும் இவரது பாடல்களிலிருந்து புலப்படுகிறது. இவருடைய சீடர் புலிப்பாணி யென்பர். இவர்தம் சீடருடன் பழநியில் வாழ்ந்து பல சித்து விளையாடல்கள் செய்த காரணத்தால் பழநியைச் 'சித்தன் வாழ்வு' என்று பல நூல்கள் கூறும். அத்தகைய விளையாட்டில் ஒன்றுதான் பழநி மலைமீதுள்ள ஞான தண்டாயுதபாணித் திருவுருவம் என்பது பலர் கருத்தாகும். இவர் உலக நாடுகள் பல சுற்றிக் கண்டும் ஆய்ந்தும் அதன் பயனாகப் பல மொழிகளில் புலமை பெற்றும் பல கலைகளில் வல்லுநராகவும் திகழ்ந்தாரென்று அறியக்கிடக்கின்றது.

இவருடைய வரலாறுகளைப் பல நூல்களில் பற்பல விதமாகக் காணலாம். அவைகளை இங்கு விவரிக்க இடமில்லையாதலால் இம்மட்டோடு நிறுத்திக்கொண்டு இவரியற்றிய ஏழாயிரமென்னும் நூலின் முதலிரண்டு ஆயிரங்களை 1898-ல் பாண்டேச்சுரம் வே. கங்காரத் தேவரென்பவர் அச்சியற்றி உதவியதையும், சென்னை, சைதாப்பேட்டை காலஞ்சென்ற திரு. தணிகாசல வைத்தியர் திருமகனார் திரு. டாக்டர் த. தங்கவேலு அவர்கள் கொடுத்துதவிய இரண்டு கையெழுத்துப் படிகளையும் ஒப்புநோக்கித் தனிப்பிரதி யெடுத்தும் மேற்படி நூல்களுக்குக் குறிப்புரையும், அருஞ்சொல்லுரையும் எழுதி இணைத்தும் தனித்தனிப் படிகளாக பதிப்பித்தளிக்க முன்வந்துள்ளோம். அவற்றுள் முதலாம் ஆயிரத்தின் முற்பகுதி அட்டாங்கயோக நூலாம், பிற்பகுதி காயகற்ப நூலாம். இரண்டாம் ஆயிரத்தின் முற்பகுதி சரக்குவைப்பு முறைகளையும், பிற்பகுதி இயற்கைச் சரக்குகளின் விவரங்களையும் கூறும் நூலாம். இம் மூன்றுமாயிரம் அறுபத்துநாலு வகைப் பாடாணங்களின் வைப்பு, இயற்கை முதலியன கூறும் நூலாகும்.

மேற்கண்ட அரிய நூல்களின் வெளியீட்டுப் பணிக்கு பெருந் தொகை தேவைப்படுவதால், இப்பெரும் பணியை விரைவில் செயல்படுத்த உளங்கொண்ட நம் தமிழக அரசின் நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் உயர்திரு. க. அன்பழகன், எம்.ஏ., அவர்கள் பேரார்வங்கொண்டு மேற்படி பணி முட்டின்றி முடிவதற்கு அரசு நிதியிலிருந்து ஆண்டொன்றுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் வழங்க ஆணை பிறப்பித்தார். மேலும், அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி கோயில் அறங்காவலர் குழு முந்நாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்களைக் கொண்டு முதல் தவணையாக மேற்படி திருக்கோயில் கருவூல நிதியிலிருந்து இரண்டு



இலட்சம் ரூபாயை ஒதுக்கி வழங்கச் செய்தமையும், சித்த மருத்துவ நூல்கள் விரைவில் வெளியாக வாய்ப்புத் தேடித் தந்தமையும், காலஞ்சென்ற திரு. டாக்டர் ஜி. டி. நாயுடு அவர்களைக் கொண்டு காலஞ்சென்ற திரு. டி. வி. சாம்பசிவம் பிள்ளையவர்கள் தொகுத்து வைத்திருந்த மருத்துவப் பேரகராதியின் முதல் மூன்று பகுதிகளையும் பிற சித்த மருத்துவ இலக்கிய நூல்களையும் அச்சிட்டு வெளியிடச் செய்தமையும் அமைச்சர் பெருமகனார் சித்த மருத்துவ மறுமலர்ச்சிக்கு முழு மனத்துடன் ஆற்றிவரும் செயற்கரிய ஆக்கச் செயல்களாகக் கூறிப் பெருமிதமடையலாம். இதற்குத் தமிழகம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

அருள்மிகு பழநி தண்டாயுதபாணி திருக்கோயில் அறங்காவலர் குழுவின் முந்நாள் தலைவர் உயர்திரு. பு. மனோகரன் அவர்கள் தமக்குள்ள பற்பல அறப்பணிகளுக்கிடையேயும் இக்குழுவின் கூட்டங்களில் பங்கு கொண்டு, நூல் வெளியீட்டுக்கான பற்பல வழிமுறைகளையும், ஆலோசனைகளையும் வழங்கி வெளியீட்டுப்பணி ஊக்கமும் ஆக்கமும் பெற்றுத் தங்குதடையின்றி நூல்கள் வெளிவர, மேற்படி திருக்கோயில் நிதியிலிருந்து மேற்படி அறங்காவலர் குழுவினரைக் கொண்டு முதல் தவணையாக இரண்டு இலட்ச ரூபாய் வழங்கச் செய்ததோடு, சித்த மருத்துவக் கல்லூரி ஒன்று பழநியில் தோற்றுவிக்க உடன்பட்டமைக்கும் சென்னையில் மத்திய சித்த மருத்துவ நூலகமொன்றை நிறுவக் கட்டடம் கட்டித்தர முயன்றமைக்கும் இக்குழுவினரும், இதில் பணியாற்றி வருபவர்களும் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

மேற்படி அறங்காவலர் குழுத்தலைவர் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து ஒத்துழைத்து வரும் மேற்படி திருக்கோயில் நிருவாக அதிகாரி அவர்களுக்கும், இப்பணிகள் நிறைவுபெற ஆக்கிய தீர்மானங்களுக்கு ஒப்புதல் அளித்து வரும் இந்து சமய அறநிலையப் பாதுகாப்புக் குழுத் தலைவர் உயர்திரு. கே. எஸ். நரசிம்மன், ஐ.ஏ.எஸ்., அவர்களுக்கும் இக்குழுவினரின் உளங்கனிந்த நன்றி உரித்தாகுக.

இக்குழுவினர் பணியாற்றுவதற்கு ஏற்ற இடவசதியும், பிற வசதிகளும் தம் அலுவலகத்தின் ஒரு பகுதியில் கொடுத்து, பணி இடையீடின்றி நடைபெற வேண்டிய ஆலோசனைகளும் ஊக்கமும் அளித்துவரும் இந்திய மருத்துவத்துறை இயக்குநர் டாக்டர் பு. மு. வேணுகோபால் எச்.பி.ஐ.எம்., அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

அச்சடிக்கும் தாள்கள் அடக்க விலையில் திருவாளர்கள் சேஷசாயி பேப்பர் மில்சிடமிருந்து மிக விரைவில் கிடைக்கும்படி செய்த முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களுக்கு இக்குழு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளது.

மற்றும் இந்நூல்களை அச்சியற்ற ஏற்றவண்ணம் மூலப்படிகளைத் திருத்தம் செய்வித்தும், அச்சுப்படிகளைத் திருத்தம் செய்தும் இக் குழுவுக்குத் துணை புரிந்துவரும் தனி அலுவலர் டாக்டர் வி. விசுவநாதன், எல் ஐ.எம்., அவர்களையும் அன்னாருக்குத் துணைபுரிந்துவரும் புலவர்கள் மு. சௌரிராசன், வி. செ. விநாயகம், வை. முரு. முத்துக்குமாரசாமி ஆகியவர்களையும் இக்குழு மனமுவந்து பாராட்டுகிறது.

மேற்கண்ட பணிக்குத் தேவையான அச்சுப்படியும் கையெழுத்துப்படியும் (போகர் ஏழாயிரம்—முதலாம் ஆயிரம், மேற்படி இரண்டாம் ஆயிரம்—கையெழுத்துப் படிமட்டும்) கொடுத்துதவிய டாக்டர் திரு. டி. வி. கலியாணசுந்தரனுருக்கும், மேற்படி போகர் ஏழாயிரம்—மூன்றும் ஆயிரத்தின் இரண்டு கையெழுத்துப்படிகளைக் கொடுத்துதவிய சென்னை, சைதாப்பேட்டை திரு. தணிகாசல வைத்தியர் திருமகனுர் திரு. டாக்டர் த. தங்கவேலு அவர்களுக்கும் மேற்படி குழுவின் சார்பில் நன்றி கூறப்படுகிறது.

இந்நூலைக் குறுகிய காலத்தில் அழகிய முறையில் அச்சியற்றிய இரத்தினம் கினை அச்சகத்தாரின் சேவைக்கு இக் குழு மனமுவந்து பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சான்றோர் மிகுந்த இவ்வுலகு இந்நூலில் காணும் குற்றங் கண்டு முனியாது நனியாதரவு தந்து எம்மை ஊக்குவிக்குமென்ற துணிவுடன் இந்நூல்களை வெளியிடுகின்றனம்.

டாக்டர் இரா. தியாகராசன், எல்.ஐ.எம்.,
தலைவர்,
அருள்மிகு பழநி தண்டாயுதபாணி சுவாமி, திருக்கோயில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக்குழு.

இந்திய மருத்துவத்துறை இயக்குநர் அலுவலகம், சென்னை-600029.

---

# பொருளடக்கம்

---

# போகர் ஏழாயிரம்

# மூன்றும் ஆயிரம்

---

## குருபரம்பரை வணக்கம்

திரயமாங் காண்டத்தைச் செப்பு தற்கு
    சித்தமனோன் மணித்தாயார் பாதம் போற்றி
திரயமாம் சிவனுடைய பாதம் போற்றி
    நித்தியராம் குருநந்தி பாதம் போற்றி
முரயமாம் பாட்டதிரு மூல நாதர்
    முத்தியாம் பாதமெந்தன் சிரமேல் வைத்து
கரயமாங் காலாங்கி பாதம் போற்றி
    கடாச்சித்த சனகாதி பதங்காப் பாமே. 1

அருஞ்சொற் பொருள் :—திரயமாம்=மூன்றுவதாம் ; கடாச்சித்த= கடைக்கண்ணால் பார்த்தருளிய; சனகாதி (நால்வர்)=சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்.

சனகாதி நால்வருடைப் பதத்தைப் போற்றி
    சித்தான சிவயோகி பாதம் போற்றி
புனகாதி தட்சிணாமூர்த்தி பாதம் போற்றி
    புத்திசொன்ன தவயோகி பாதம் போற்றி
பனகாதிப் பாடாணப் பிறப்பைத் தானும்
    பண்பெல்லாம் சொல்லிவிட்டேன் குறையைக் கேளு
துனகாதி தொட்டியென்ற பிறப்பைக் கேளு
    சிலாகையாம் மந்தாரை மேரு தானே. 2

(அ.பொ.) :—தட்சிணாமூர்த்தி=சிலர் அகத்தியரையும் இவ்வண்ணம் கூறுவர் ; சிவன்.

## தாருகாசூரன் இரத்தம் தொட்டிப் பாடணமாயிற்று

தானென்ற மேருவான கிரஞ்ச கிரியில்
    தாருகாசூ ரனவனிட்ட சண்டை தன்னில்
வேனென்ற கிரஞ்சகிரி முழையில் புக்கி
    வீரவாகு வன்தன்னை மோகம் பண்ணி

கோனென்ற குமரவேள் சத்தி யாலே
கிரவுஞ்ச கிரிதன்னை தான்து ளைத்துத்
தூனென்ற தாருகாதி சூரன் தன்னைச்
சுத்தியடுத்துச் சத்திதனால் துணித்திட் டாரே. 3

(அ.பொ.) :—கிரஞ்சகிரி = கிரவுஞ்ச மலை ; முழை = குகை ; மோகம்=மயக்கம் ; சத்தி=குமரக்கடவுளின் கைவேலுக்குப் பெயர் ; துணி=வெட்டு ; கூறுபடுத்து.

## தொட்டிப்பாடாண மெழுகு

துணிக்கவேரத் தமதுகிரி தனிலே சிந்த
சுடைக்கித்து தொட்டியென்ற பாடா ணமாச்சு
பிணிக்கவேவெ டியுப்புநீர்ச் சுருக்கும் இட்டு
பிலத்ததுவோர் சாரநீரில் சுருக்குப் போட்டு
பணிக்கவேதான் பால்திருதிச் சுருக்குப் போட
பணிக்கான மெழுகாகும் பரசி யேமம்
கணிக்கவேதான் சரக்கெல்லாம் கட்டிப் போகும்
காயசித்தி கடிசிலாகுங் கண்டு கொள்ளே. 4

(அ.பொ):—சுடைக்கித்து=திரிந்து (பால் திரிந்தால் அது சுடையும் தண்ணீருமாம் போல இரத்தம் திரிந்தாலும் அவ்வண்ணமாகும் இது கண்கூடு) ; பால்திருதி=செய்முறை இரண்டாம் ஆயிரம் பா எண் 914, 915, 916இல் காண்க ; பணிக்கான=(வேதை) வேலைக்கான.

## வேதாந்தம்

கண்டுகொள்ளு இருட்டேது இரவியே யேது
கடுவெளியாய் என்னாளும் இருப்ப தன்றோ
விண்டுகொள்ளு வெளியிற்குள் வெளியைப் பாரு
விளங்கியதோர் ஒளியுட்குள் வொளியைப் பாரு
மண்டுகொள்ளு மருட்டேது ஒன்று மில்லை
மகத்தான வெட்டவெளி மகத்தாம் போதம்
இண்டுகொள்ளு ஏற்றியுண்ணுங் குருவே யானால்
இதமறியார் சகச்சால மயமா வாரே. 5

(அ.பொ.) :—கடுவெளி=பராகாசம் ; வெளிக்குள் வெளி=சிதாகாசத்தில் பராகாசம் ; ஒளிக்குள் ஒளி=வெளியொளிப்பாழில் ஒளி பிழம்பாகிய உன் மனையைக் குறித்தது ; மருட்டு=அச்சுறுத்தல்.

இயம்புறது யென்னவவர் சொல்லக் கேளு
ஏத்தமாம்வித் தையதுநான் பிரம மென்று
உயம்பினது உலகமெலாம் பூரணம் தானென்று
உத்தமமாம் நான்முகத்தா னென்று சொல்லி



மயம்பினதும் மலைக்கிறதும் எனக்கு ளென்று
மகத்தான வுபதேச மிதுதா னென்று
இயம்பினதும் செப்பினதும் இரண்டுங் கண்டால்
தெளிந்ததுவாய் நின்றதுதான் பரமென்று காணே. 6

(அ.பொ.) :—மயம்பினது=குழம்பிய தன்மை ; மலைக்கிறது=தன்னாற்றலில் ஐயங்கொண்டு விழித்தல். "நான் பிரமம்", இது ஒரு மகா வாக்கியம்.

## உலககுருவும் சற்குருவும்

காணவேநற் சொல்லரிய உலக வாசான்
கருதியவன் பணம்பறிக்க எத்துப் பண்ணி
நீணவேநெ டிதாகச்சி வமுண்டு பண்ணி
நிலையாமல் சீடனுக்குப் பிறப்புண் டாக்கி
ஊணவேவு லகமெலாமிப் படியே போச்சு
உக்கியந்த மாயத்தே உழன்று போனார்
தாணவேதான் தாள்திறந்தா லவனே யாசான்
சமர்த்தான குருதேடி சார்பு கொள்ளே. 7

(அ.பொ.) :—எத்து=ஏமாற்று வித்தை ; தாள்=கீழ்த்தாடை (இது இன்றும் உலக வழக்கிலுள்ளபடி காண்க) சமர்த்தான=திறமையுள்ள ; சார்பு=அணுகுதல்.

## பொய்க்குரு

சார்வுறல்தான் சொல்லறியான் உலக வாசான்
சமரசமாய்ப் பணம்பறிக்கச் சாங்கம் சொல்வான்
நாவுறவே நாள்போக்கிச் செபத்தைப் பண்ணி
ஞானியென்று பெயரிட்டுக் கொண்டு தானும்
பாரிலேதான் சஞ்சரிப்பார் சையோ கிப்பார்
பரிந்துகுடி கெடுப்பார்கள் பொய்யும் சொல்வார்
ஓர்வுறவே வேடங்கள் மிகுதி பூண்பார்
உருட்டுவார் உலகத்து ஞானி தானே. 8

(அ.பொ.) :—சமரசமாய்=சமாதான முறையில் ; சையோகிப்பார்=தகாத பெண்களிடம் உடலுறவு கொள்வார் ; ஓர்வுற=உணர்ச்சியைத் தூண்டத் தக்கபடி ; உருட்டுவார்=சொல்லாலும் செயலாலும் மாறி உலகத்தவர்களை நிலைகுலையச் செய்வார்.

ஞானியென்ற பொருளாறு பூரண மாறு
நாடாமல் ஒன்றிலுந்தான் திரியே னென்பார்
வேணியென்ற விழியுடைய பெண்ணைக் கண்டால்
மிகமயங்கி அவளருகில் சரணஞ் செய்வார்

நானியென்ற தீனியினின் சுவையைப் பார்ப்பார்
சேர்த்திடுவான் திரவியத்தைச் செகம்பொய் என்பான்
சாணியென்ற செடமேது நமதல் லென்பான்
சற்றேநோய் வந்தக்கால் உளறு வானே. 9

(அ.பொ.):—பொருளாறு=பொருளின் வழி; பூரணமாறு=ஞான பரிபூரண (யோக) மார்க்கம்; திரியேன்=மாறுபடமாட்டேன்; வேணி=இது கண்ணனைக் குறிக்கும். வேணு=(மூங்கிலாலாகிய) குழலை யுடையவன் வேணி என வழங்கினர் போலும்). சரணஞ்செய்வார்=காலில் விழுந்து வணங்கிக் கெஞ்சுவர்; தீனி=உணவு (இகழ்ச்சிக் குறிப்பு); திரவியம்=செல்வம்; சாணி=கழிவுப்பொருள்; சடம்=உடல்.

உளறுவான்ஞா னமென்னவந் துபோச்சு தென்பார்
உசந்ததோர் வாதமென்ன வாய்ப்பேச் சென்பார்
உளறுவாரெ டுத்தோடும் குளிகை யுண்டோ
கெட்டியாய்ச டமிருக்கச் சித்தி யுண்டோ
கழறுவார்யோ கம்பொய்கெ வுனம்பொய் என்பார்
கைகண்ட சுகமென்ன அனுபவ மென்பார்
அளறுவரா ணவத்தையா மற்றே மென்பார்
அடித்துமயிர் பிடித்துமவர் அலறு வாரே. 10

(அ.பொ.):—உளறுவான்=விளங்காவகை பேசுவான்; கெவுனம்=(ககனம்) விண்வழிச் செல்லும் சித்து.

பிடித்துமேஇப் படியேஇவ் உலக ஞானம்
பேசியேதா னனேகம்பேர் மாண்டு போனார்
கடித்துமேகண் டவராவர் சித்த யோகி
கைகண்டு அறிந்தார்கள் ஞான மார்க்கம்
துடிதுடித்தே நொந்தார்கள் அனேகங் கோடி
சொக்கினவர் பூரணத்தி லனேகங் கோடி
உடித்ததுமே வுலகத்து ஞானந் தன்னில்
உழலாதே பிறவியினி லூனு வாரே. 11

(அ.பொ.):—கைகண்டு=தேர்ச்சிபெற்று; சொக்கினவர்=மயங்கினவர் (ஆழ்ந்தவர்); ஊனுவாரே=ஊன்றுவாரே (நிலைத்திருப்பார்).

## குதிரைப்பல்பாடாண உற்பத்தி

ஊணவேதான் குதிரைப்பல் பாடா ணத்தின்
உற்பத்திதன் னைநன்றாயு ரைக்கக் கேளு
மூணவேதான் ராட்சசனும் வீர சிங்கன்
முனைந்துமேதான் சகலரையும் ஏவல் கொண்டு



ஆணவத்தால் அடித்தேதான் குத்திக் கொன்று
அநியாயம் மிகப்பண்ணி அதட்டிச் செய்தான்
தோணவேதான் சிவனறிந்து 'வீர வாகு
சீக்கிரத்தில் செயம்பண்ணி வா'வென் றாரே. 12

(அ.பொ.):—முனைந்து=செருக்குற்று; ஆணவம்=அகம்பாவம்; செயம்=வெற்றி.

வாவென்று சொல்லவுமே வீர வாகு
வாளெடுத்து ஐந்நூறு வெள்ளஞ் சேனை
தேவென்று சீக்கிரத்தில் வெட்டிப் போட்டு
திறல்வீர சிங்கனையும் வெட்டிப் போட்டு
கோவென்ற குதிரைகரி சிங்கம் யாளி
குடல்சரிந்து ஆறுபோலே குருதி யோட
மாவென்ற மலையெல்லாம் பரவிப் பொங்கி
மக்கியேதான் குதிரைப்பல் தானு மாச்சே. 13

(அ.பொ.):—வெள்ளம்=பெரிய எண்ணிக்கைக் காட்டும் (எண்ணளவைச்) சொல்; யாளி=துதிக்கை, சிங்க உடல், சிறகுடைய ஓர் விலங்கு என்பர்; குருதி=இரத்தம்.

## குதிரைப்பல்பாடாண மெழுகு

ஆச்சேதான் அஞ்சழகு வண்ணத் தோடே
அடுக்கடுக்காய் குதிரைப்பல் தோன்ற லாச்சு
தோச்சுமேதான் இதையெடுத்து சுண்ணஞ் சுத்தி
சூட்டிவெடி யுப்புநீர்ச்சு ருக்குப் போடு
தாச்சுமேதான் சாரநீர்ச்சு ருக்குப் போடு
சைலமாவு தகத்தைச்சு ருக்குப் போடு
பாச்சுதேபால் துருதிசு ருக்குப் போடு
பாங்கான மெழுகாகும் நூற்றுக் கொன்றே. 14

(அ.பொ.):—வண்ணம் = நிறம்; சுண்ணம் = கற்சுண்ணாம்பில் (வைத்துத் தாளித்தல்) வெடியுப்பு நீர், சார நீர், இவை செய்நீர்கள் (செய்முறையை இவருடைய) இரண்டாம் ஆயிரத்தில் காண்க. பா. எண். 75—78, 133—139; சைலமா உதகம்—இரண்டாம் ஆயிரப் பா. எண் 390.

மெழுகுக்குள் சூதம்விடு கட்டிப் போகும்
மிடுக்கான சரக்கெல்லாம் கட்டிப் போகும்
நழுக்குள்ள வீரமது மயன மாகும்
நாடியதோர் சாதிலிங்கம் வெண்ணெ யாகும்

தளுக்குள்ள சாரமது மெழுகு மாகும்
தளுக்கான நாகத்தின் புகையே போகும்
கழுக்குள்ள கல்லுப்புக் கட்டிக் கொண்டு
கவசமிட்டு வாட்டினாலே களங்க தாமே. 15

(அ.பொ.) :—மயனம்=மெழுகு.

களங்கமான கல்லுப்பால் சிந்தி யாகும்
கடிசான சத்தெல்லாம் சவனை யாகும்
வளங்கான சரக்கினுட ஊரல் போக்கும்
மாசற்ற நவலோகம் மடிந்து போகும்
புளங்கான காயத்தி லூறி நின்ற
புளிப்பெண்ணெய்ச் சுண்ணமாகப் பொருமிப் போகும்
விளங்கான கல்லுப்பு மெழுகி னாலே
வியனான சரக்கெல்லா மெழுகு தானே. 16

(அ.பொ.) :—சவனை=தீட்சை; பொருமி=பொங்கி.

## யோகம் கூறல்

மெழுகான வெளியுள்ளுள் ரேகை பாரு
விதமறிந்து சுழிக்குள்ளே வன்னி பாரு
கழுகான கால்கொம்பில் நாத விந்தை
காட்சியாயே யற்றவிடம் நின்று பாரு
ஒழுகான ஒளிக்குள்ளே ஒளியைப் பாரு
உன்னதமாய் ஒளிகடந்து வெளியைப் பாரு
தழுக்கான தவமேது உருவை யேது
தள்ளியிதை மேல்நோக்கித் தாக்கிப் பாரே. 17

தாக்கியதை உண்கிறது யாரு மைந்தா
தனித்துநின்ற மனமல்லோ மணித்தா யாகி
பாக்கியமா யமென்றப சுபாசந் தீர்த்து
பதியினுள்ளே சாதகமாய் பரிந்து சேர்ப்பான்
தேக்கியேதான் நாள்தோறும் செபித்தும் துதித்தும்
சிற்சொருப மாஞ்சத்தி கொண்டு நோக்க
நீக்கியேதான் அந்நியமாய் நில்லா ளாத்தாள்
நிசமாக அவரவர்க்கு முன்னிற் பாளே. 18

(அ.பொ.) :—பசு=சீவான்மா; பாசம்=பிணைப்பு (கட்டுகள்); அந்நியமாய்=வேறாக.



முன்னின்ற பூரணியே அகண்ட ரூபி
மிக்கசச்சி தானந்த வெள்ளத் தாயே
பின்னின்ற பேய்ப்பிள்ளை பெற்றிட் டப்பின்
பேச்சுண்டோ பிரித்துனக்கு சொல்லத் தானும்
உன்னின்ற வெளிமுதலாய் வாயு வன்னி
உருவெடுத்து வுதித்தநீரே பூமி யென்றும்
மன்னின்ற மாயமென்றும் கருவி யென்றும்
வாசனையாம் ஆசையென்ற வலையிட் டாயே. 19

(அ.பொ.) :—வெளி=ஆகாயம்; வன்னி=தீ; மாயம்=மாயை.

வலையிட்டு நீயென்றும் நானென்று மெண்ணி
மாயமான பிறவியுனக் காச்சு தென்றாய்
தலையிட்டுத் தாயென்றும் பிள்ளை யென்றும்
சகலமுநீ யாகியல்லோ சம்சா ரியாகும்
கலையிட்ட வித்தென்றும் காயே என்றும்
கட்டையாம் மரம்போலே பிறவி யாச்சு
மலையிட்டு மறையினுட அந்தம் நின்றோர்
மறித்துமேதான் ஒருநாளும் பிறவார் தாமே. 20

(அ.பொ.) :—சம்சாரி=இல்லறத்தார்; மறையினுட அந்தம்=உபநிடதம்; மறித்தும்=மறுபடியும்.

மறியாமல் காயத்தை வேட்பார் கோடி
மறுபடியும் பிறவாமல் வேட்பார் கோடி
திரியாமல் குளிகையிட்டா டவேட்பார் கோடி
செந்தூர மதியமிர்தம் வேட்பார் கோடி
பிரியாமல் சையோகம் வேட்பார் கோடி
பிரட்டுவித்தை பெரியவித்தை என்பார் கோடி
நரியாமல் ஆசைவித்தை வேட்பார் கோடி
நாட்டம்போல் அவரவர்க்குக் கொடுத்தாய் தாயே. 21

(அ.பொ.) :—வேட்பார்=விரும்புவார்; மதியமிர்தம்=சிதாகாசப் பெருவெளியில் (மதிமண்டலத்தில்) பொழியும் அமுதம்; பிரட்டு வித்தை=ஏமாற்றுவித்தை; நாட்டம்=விருப்பத்தைப்போல.

தாயேநீ அவரவர்க்கு முன்பாய் நின்று
தங்கியபின் நல்வினைதீ வினையு மானாய்
ஆயேநீ யுனைப்போற்ற பிறப்பே கோடி
அனந்தவரை எடுத்தல்லோ பணியக் கிட்டும்

நீயேதான் ஆட்கொண்டா யருளி னாலே
நிச்சயமாய் பிறவியைவே ரறுக்க வில்லை
மாயேதான் மோகத்தில் காமஞ் சேர்ந்து
மயங்கினவர் வத்துவினால் தியங்கி னாரே. 22

(அ.பொ.) :—பணிய=வணங்க ; கிட்டும்=கிடைக்கும் ; தியங்கி னார்=கலங்கினார்.

தியங்கினோர்தான் சத்திதனின் சையோ கத்தால்
தியக்கமொடு மயக்கத்தால் வரவு தப்பி
மயங்கினவர் மயக்கமிஞ்சி வாந்தி யாகி
வடிவுகண்ட பெண்ணின்மோ கத்தால் கெட்டார்
தயங்கினார்தாம் சுற்றிநின்ற தாயைப் போல
தவ்வியேதான் கரணமென்ற ஆலிங் கனத்தால்
முயங்கினார்தாம் முத்தியென்ற பெண்மோ கத்தில்
மோட்சத்துக் கேதுவில்லா மூடர் தானே. 23

(அ.பொ.) :—மிஞ்சி=மிகுத்து ; வடிவு=அழகு ; ஆலிங்கனம்= கட்டித் தழுவல்; முயங்கினார்=உடலுறவு கொண்டோர்; ஏது=காரணம், ஆதாரம்.

மூடர்தான் வாமியென்றால் தோடம் மெத்த
முத்தான இருடிசித்தர் வாமி யாச்சு
சீடரான சிவயோகி வாமி யாச்சு
தேசிகராம் பஞ்சகர்த்தாள் வாமி யாச்சு
நாடர்ஞா னிசத்தான வாமி யாச்சு
நாதாந்தி வேதாந்தி வாமி யாச்சு
வேடந்தான் வாமியென்றால் பாவ மெய்தும்
ஈகைதான் பசுவென்ற நாமந் தானே. 24

(அ.பொ.) :—வாமி=வாமசாரம் கொண்டவர் ; தேசிகர்=குரு ; பஞ்சகர்த்தர்=ஐந்து தொழில் செய்பவர் (ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல்).

நாமந்தான் உன்றனையே போற்ற வல்லார்
நளினமாம் வத்துவிற்குச் சாபம் போக்கி
வாமந்தான் மாதுருகா நியாசம் பண்ணி
வத்துவிற்குச் சந்திராதி கலையை யூட்டி
ஆமந்தான் பாத்திரத்துள் சித்துப் பண்ணி
அசையாமல் சமாதியிலே இருந்து கொண்டு
சாபந்தான் போனபின்பு பரத்தி லுன்னி
தனித்திருப்பார் சிவயோகி சித்தர் தானே. 25



(அ.பொ.) :—நளினம்=அழகு ; மாதுருகாநியாசம்=ஆகமவிதிப் படி அங்கக்கிரமாதிகளில் ஐம்பூதாதி நிலைகளை நிறுத்தி (ஆவானம் முதலி யன செய்து) ; சந்திராதிகலை=வாசியோகப்படி வத்துவுக்கு வீரியம் ஏற்றி ; பரத்திலுன்னி=மேலுலக ஞானத்தில் மனம் நிலைத்து.

சித்தருக்கும் வாதிக்கும் பூசை சொன்னேன்
சிவயோகி இருடிகட்கு எடுத்த பூசை
மத்தருக்கும் மவுனிக்கும் எடுத்த பூசை
மறையோர்க்கும் சைவருக்கும் எடுத்த பூசை
பத்தருக்கும் முத்தருக்கும் எடுத்த பூசை
பாலையாம் காயசித்திக் கெடுத்த பூசை
பித்தருக்குப் பூசைவிதி சொல்ல லாகா
பொருந்தியேதான் சொன்னவர்க்கு நரகம் காணே. 26

(அ.பொ.) :—மத்தர்=சிவன் (பித்தன்) ஊமத்தைப்பூசூடி ; பாலை யாம்=வாலிபம் பெறும்.

## சங்குபாடாண உற்பத்தி

காணவேதான் சங்குப்பா டாணந்தானும்
கலந்தெங்கே வுற்பத்தி என்றால் கேளு
தாணவேதான் சரவணமாம் பொய்கை தன்னில்
சங்கரனார் மைந்தனவர் அறுமு கந்தான்
ஊணவேதான் சிவனுடைய பிரகா சத்தை
உற்றுமேதான் வருணனொடு வாயு தானும்
ஈணவேதான் எடுத்துவந்து இருமூன் றிதழில்
ஏற்றமாய்த்தான் வைத்திட்டார் எழிலாய்த் தானே. 27

## பராசரரிஷி சாபம் பெற்றது

தானான சிவனுமையும் வந்து பார்த்து
மகிழ்வுமிகத் தானடைந்து ஆவ லோடே
நானான வயிரத்தால் சங்கு வைத்து
நளினமான முலைப்பாலைக் கறந்து போட்டுத்
தேனான துளிமுலைப்பால் திவலை தன்னைத்
தெரித்திடவே சலந்தன்னில் மலையில் சிந்த
பானான பராசரராம் இருடி தன்னைப்
பாரமடு தனில்மச்ச மாகென் றாரே. 28

(அ.பொ.) :—திவலை=துளி ; தெரித்திட=சிந்திட ; பாரமடு= பெரிய நீர் நிலை (சரவணப் பொய்கை) ; மச்சம்=மீன்.

என்றவரே சாபமிட்டார் பூர்வீ கத்தில்
 எறிந்ததுளி சலந்தன்னில் மச்ச வாயில்
மீண்டுமேதான் விழுந்திடவும் சாபம் நீங்கி
 முன்போலே இருடியாகி மோட்ச மானுர்
மண்டுமதே மலைதன்னில் திவலை தானும்
 வைரத்தின் சங்கினின்று விழுந்த தாலே
தன்றுவமே சங்குமாபா டாண மாச்சு
 தாயாரின் கைத்திவலை தன்னில் தானே. 29

(அ.பொ.) :—பூர்விகத்தில்=மிகப் பழைய காலத்தில்; எறிந்த துளி=சிதறிய (முலைப்பால்) துளிகள்.

## பிரவி சங்குபாடாணக் குணம்

திவலையினுல் ஆகின்ற சங்கு நஞ்சு
 சீருமல் பச்சையிலே வேதை யாகும்
கவலையினுல் மனதுசற்றும் காணுெட் டாது
 கற்பாந்த காலத்தில் மாளொட் டாது
புவலையினுல் வச்சிரத்தின் ஒளியாங் காயம்
 பொடிபண்ணி விசமெடை பாவி லுண்ணு
சவலையது போகாது தனுக்காம் மேனி
 சந்திரனே சூரியனே வென்பார் தானே. 30

(அ.பொ.) :—சீருமல்=(கோபியாமல்) திரியாமல்; விசம்=பதி ஞறில் ஒரு கூறு.

காணுத பொருளெல்லாம் பராப ரைக்கே
 கருவான கருத்தெல்லாம் கண்டு சொன்னுர்
ஏனுத பராபரைத்தான் மக்கட்குச் சொன்னுர்
 ஏழுலட்சம் விரிவாச்சு எடுத்த பேர்க்கு
ஊனுத இருடிசித்தர் யோகி யெல்லாம்
 உகந்துவந்தே சேர்ந்தமட்டும் பாடி னுர்கள்
பூணுத கருவையெல்லாம் பார்க்கப் பார்க்க
 பொருள்வேறு வெவ்வேறு கருவு மாச்சே. 31

(அ.பொ.) :—ஏனுத=நெருங்க இயலாத (எட்டாத).

கருவிலேதான் வெவ்வேறு கவரோ கோடி
 கண்டதிலே இனங்கோடி காட்சி கோடி
குருவிலேசுண் ணமொடுசெந் தூரங் கோடி
 கொடிதான செய்நீரோ புகைநீர் கோடி



இருவினிலே கரையுமில்லை இலக்க மில்லை
 ஏத்தமதாம் நாதாக்கள் சொன்ன நூலே
திருவினிலே கடுநீச்சு நிலைகா ணுது
 செப்பார்கள் உட்கருவை மறைத்தார் பாரே. 32

(அ.பொ.) :—கவர்=கிளைகள் (துறைகள்); இனம்=வகை; காட்சி காணப்படுவது; புகைநீர்=திராவகம்; கரை=எல்லை; உட்கருவை= உண்மையான உயிர்ப்பொருளை.

## நூல்மறைப்புத் தெரியாமற்போனுல் வேதை தலைகீழாகும்

மறைப்பான நூலினுட வர்மம் பார்த்து
 வகைவகையாய்ச் சுட்டாலும் கருக்கா ணுது
தறைப்பான தலைகாணில் கால்தான் காணு
 சாத்திரங்கள் பண்ணிவைத்த சதியாம் மார்க்கம்
அறைப்பான மலையெய்தும் அம்பைப் போலே
 அருகாக வைத்திலரே வல்லோர் தானும்
கறைப்பான வழியில்லாக் காடு தன்னில்
 கண்கட்டி விட்டதொரு கதைபோ லாச்சு. 33

(அ.பொ.) :—வர்மம்=மர்மம், இரகசியம்; சதி=கெடச்செய்யும் முயற்சி.

கதையாகும் விட்டிடமும் தெரியா தாகும்
 கருதப்பில் வேதையொன்றும் காணு தாகும்
சுதையாக கட்டினமும் சூட்ச மில்லை
 சுட்டதொரு களங்குக்கு மட்டு மில்லை
வதையாக அலைக்கழிந்து வாதங் காணுர்
 மாட்டுகிற கருவிதென்று வகைசொல் லார்கள்
அதையாக ஆச்சுதென்பார் செம்பி விட்டு
 அதட்டித்தான் ஊதிடவே அகன்றுப் போமே. 34

(அ.பொ.) :—சுதை=அமுதம்; அலைக்கழிந்து=பாடுபட்டுச் சீர் கெட்டு.

## கௌரிப்பாடாண உற்பத்தி

அகன்றதுவோர் கௌரிதோற்றம் சொல்வேன் கேளு
 அம்மன்தான் சிவனருகே வந்து நின்று
தகன்றநனி தக்கனுக்கு மகள்நா னல்லோ
 தகப்பன்தான் வேணுமென்று தாயார் சொல்ல

விகன்றதுவோர் அகோரமுகம் தானு மாக
மிருந்தகோ பாக்கினியில் வீர பத்திரர்
புகன்றதோர்பி றக்கலுமே சிவன்தா னப்போ
போநீயே தக்கனையே கொல்லென் றுரே. 35

(அ.பொ.) :—அகோரமுகம்=ஈசனின் ஐந்து முகங்களில் தென் திசையிலுள்ள முகமாம்.

## பார்வதி தோற்றம்

என்றமொழி கேட்டதுமே வீர பத்திரர்
எடுத்ததுமே ஆயுதங்க ளெல்லாங் கொண்டு
வன்மொழிவேட் டக்கனைத்தான் வாளால் வீசி
மலையரையன் மகளாகப் பிறவு மென்ன
சென்றமொழி சீரியநற் கிரியி னுள்ளே
திறமான மலையரையன் மகளா கத்தான்
தன்றமொழி தாமரையின் இதழுக் குள்ளே
தரிக்கவுமே மலையரையன் கண்டிட் டானே. 36

(அ.பொ.) :—வன்மொழி=வசைமொழி ; வேட்டக்கன்=வேள்வி செய்யும் தக்கன்.

மலையரையன் தானெடுத்து கண்ணி லொத்தி
மனைவியவள் தன்கையில்தான் கொடுத்திட் டானே
மலையரையன் மகளாக வளர்த்திட் டானே
மங்கையென்னும் பருவத்தில் சிவனுர் வந்து
மலையரையன் மகளாரை மணமே செய்ய
மறையோதும் பெரியோனுய் வேடங் கொண்டு
மலையரையன் மகளாரை உளஞ்சோ தித்து
மாசற்றத் திருமேனி காட்டி னுரே. 37

காட்டிடவே சோதிமின்னல் ஒளிபோ லாச்சு
கண்டதுமே விகாரத்தா லப்பா லேக
மூட்டிடவே ருதுவாச்சு சுரோணி தந்தான்
மீறியேதான் மலைதனிலே தெரித்து விழ
பாட்டிடவே பரிதியினின் கிரணத் தாலே
பட்டவிட மெல்லாமே கெவுரி யாச்சு
தாட்டிடவே கன்னிருது வானத் தாலே
தனதிமய கெவுரியென்ற நாம மாச்சு 38

(அ.பொ.) :—விகாரத்தால்=வேறுபாட்டால் ; பரிதி=ஞாயிறு.



## கௌரிப்பாடாண மெழுகு

ஆச்சென்ற கௌரியைத்தான் சுத்தி பண்ணி
ஆதிவெடி யுப்புநீர்ச்சு ருக்குப் போடு
தாச்சென்ற சாரநீர்ச்சு ருக்குப் போடு
தயங்காமல் மாவுதகச் சுருக்குப் போடு
தீச்சென்ற திராவகத்தால் சுருக்குப் போடு
திரும்பவுந்தான் பால்துருதி சுருக்குப் போடு
மூச்சென்ற மெழுகாகும் ஆயிரத்தி லொன்று
மூட்டிடவே நவலோகம் ஏமந் தானே. 39

(அ.பொ.) :—பால்துருதி செய்முறையைப் போகர் இரண்டாம் ஆயிரம் பா. எண் 914 முதல் 916 வரை கண்டு செய்க. மாவுதகம்= இரண்டாம் ஆயிரம் பா. எண் 890ல் காண்க,

## கௌரி மெழுகால் 64 பாடாணமும், 120 உபரசமும், கட்டும் ; சத்துகளுமாகும்.

ஏமமதே யாச்சுதென் றெண்ண வேண்டாம்
இம்மெழுகால் அறுபத்து நாலுங் கட்டும்
ஓமமேயு பரசங்கள் நூற் றிருபதும்
உருகியேதான் ஈயம்போல் சத்து மாகும்
தூமமேச ரக்குகளை யெல்லாங் கட்டும்
சுயமான லவணங்கள் கட்டிப் போகும்
சேமமாக வைத்தெடுத்த செல்வம் போலே
சீக்கிரத்தில் சித்தியுமாம் தெளிந்து கொள்ளே. 40

(அ.பொ.) :—தூமம்=புகை; லவணம்=இலவணம்=உப்பு (வகை).

கொள்ளவுமே வல்லோர்கள் சொன்ன நூல்தான்
கோடியுண்டு சூத்திரத்தை மறைத்து வைத்துத்
தள்ளவேவெ குவானசாத் திரத்தைச் சொன்னுர்
தனியான கருப்போக்கும் குருவும் மறைத்து
வள்ளவேதான் சுத்தரச வாதி யானுல்
வரிசையாய்த்தான் இனங்கண்டு சேர்த்துக் கொள்வான்
துள்ளவேதான் வெட்டவெளி யாகத் தானும்
சொன்னதொரு பாவெல்லாஞ் சிக்குந் தானே. 41

(அ.பொ.) :—வெகுசாக=பெரும்பாலும் ; கருப்போக்கு=மர்மவழி ; குரு=கட்டு, களங்கு, சுண்ணமெல்லாம் செய்யத் திறவுகோல் போன்ற முக்கிய மான மருந்து. சிக்கும்=கிடைக்கும்.

சிக்காகப் பாட்டனென்ற மூல நாதர்
செப்பியதோர் மந்திரந்தான் திருகல் மெத்த
பிக்காக பொருள்மறைத்துச் சொன்னா ரென்று
பொருளோடே ஆறுமேழுங் காண்டஞ் சொன்னேன்
தித்தாகச் சொன்னாக்கால் சித்தர் தாமும்
திகைப்பார்கள் என்றெண்ணி கறந்த படியாய்ப்
பத்தாகப் பழுப்பதற்கு வெள்ளைப் பாட்டாய்
பாடினேனே பலபேரும் பிழைக்கத் தானே. 42

(அ.பொ.) :—திருகல்=சுழற்சியுடையது. பத்தாகப் பழுப்பதற்கு=பத்து மாற்று காண்பதற்கு.

பிழைக்கவுமே எழுகாண்டப் பொருளோ டருளும்
பிரித்துமே ஒவ்வொன்றாய்ப் புகழ்ந்து சொன்னேன்
தழைக்கவேதான் சரக்கெல்லாம் வைப்புச் சொன்னேன்
தைலவகை களங்குமுதல் சுண்ண மார்க்கம்
புழைக்கவுமே செய்நீரும் சத்து மார்க்கம்
குருக்கிடைச் சிராவணமும் புகைநீ ரோடு
உழைக்கவேதான் செயரசமும் பால ரசமும்
உண்மையாக உலகோர்க்கே உரைசெய் தேனே. 43

(அ.பொ.) :—புகைநீர்=திராவகம்; செயரசம்=நெருப்புக்கு ஓடாத வெற்றிகொண்ட இரதம்; பாலரசம்=வாலையில் வைத்திறக்கிய இரதம்.

## துத்தப்பாடாணந் தோற்றம்

உரைசெய்த துத்தபா டாணந் தன்னை
உரைத்திடவே உற்பத்தி இனத்தைக் கேளு
மறைசெய்த மயூரகிரி பருவ தத்தில்
மாசற்ற ரவிபட்டுப் பொங்கி நீற்றுப்
பறைசெய்த பலகைபோலே அடுக்க டுக்காய்
பாடாணம் மலைசந்து தனிலுற் பத்தி
குறைசெய்து குளிகையிட்டு எடுத்து வந்தால்
கொடுஞ்சுருக்கு பரிசிக்க ஏம மாமே. 44

(அ.பொ.) :—மயூரகிரி=மயிலம் என்னும் முருகன் திருப்பதியும் மலையும்.

## பிரவித் துத்தப்பாடாணப் பண்பு

பரிசிக்க நவலோகம் ஏம மாகும்
படுமுன்னே சூதமிட்ட விபோ லாகும்
தரிசிக்கில் முத்தியுண்டு மோட்ச முண்டு
கணத்திலேதான் காயசித்தி தீர்க்க மாகும்



குருசிக்கில் குருகோடி சுண்ணங் கோடி
குளிகையிதில் செய்தாக்கால் கொடிய சுருக்கு
விரிசிக்கில் ஆயிரத்தின் மேலே யோடும்
விடுபட்ட யானைதன்னை இதிலே கட்டே. 45

(அ.பொ.) :—பரிசிக்க=தொட.

கட்டியேதான் கைக்குள்ளாய்ச் சொன்ன தெல்லாம்
கருத்தாகச் சொன்னாரே மூல நாதர்
வெட்டித்தான் இப்படிபோ வென்றுஞ் சொல்லி
விதம்பிரித்துச் சொன்னார்கள் இல்லை இல்லை
பெட்டியிலே வைத்ததனம் போலே யானும்
பிரித்துமேதான் வகையாகக் கணக்காய்ச் சொன்னேன்
பட்டியபை களிலேவைத் தபொருள் போலே
பாடினேன்ப லபேர்க்கும் உதவி தானே. 46

## பலன்றுகப் பாடாணந் தோற்றம்

உதவியாகப் பலன்றுகமா பாடா ணத்தை
உத்தங்கே உற்பத்தி எங்கே என்று
விதவியாய் விந்தமகா பர்வ தந்தான்
மேன்மையாக இருக்கின்ற பக்கு வத்தில்
வதவியாக நாரதரும் வந்து நின்று
பார்த்துமேதான் பர்வதத்தைப் பருப்ப மாக
நிதவியாய் நீயிருந்த பலந்தா னென்ன
நினைத்ததொரு வுந்தனையே மதிக்கி லாரே. 47

(அ.பொ.) :—தவி=உயர்வு (தவிசு=உயர்ந்த ஆதனம்) எனவே விதவி=அதற்குமேல் உயரமில்லாதது (எல்லா மலைகளையும்விட உயர்ந்தது); நிதவி=குட்டையாக; பலன்=நலன் (அ) தீங்கு.

மதித்துமேதான் மகாமேரு பர்வ தத்தை
வானவர்கள் கின்னரர்கள் கிம்பர் சித்தர்
துதித்துமேதான் சந்திரசூ ரியர்கள் தாமும்
தோத்தரித்து யென்னேரம் தொழுது போற்ற
உதித்துமேயுன் னையொருவர் சிந்திப் பதில்லை
ஊமைபோலி ருந்துவிட்டா ரென்று சொல்லிக்
குதித்துமேதான் நாரதரும் கூறிப் போனார்
குறைவந்து நெஞ்சுதனில் கோப மாச்சே, 48

(அ.பொ.) :—கிம்பர்=கிம்புருடர்.

## விந்தகிரியின் கர்வத்தை அகத்தியர் அடக்கியது

கோபமாக வளர்ந்தோங்கி முகடு மட்டும்
குடதிசைக்கே போகாமல் சந்தி ராதி
சோபமாக வழிமறித்துக் கொண்டு நிற்க
சுருதிமறை வேதியர்கள் வானோ ரெல்லாம்
தாபமாக சிவனருகே முறையிட் டார்கள்
தாட்சியாக விந்தகிரி தன்னா லென்றும்
ஆபமாக அகத்தியரைத் தாம ழைத்து
அடக்கிடுவாய் நீயென்று சிவன் சொன்னாரே. 49

(அ.பொ.):—குடதிசை=மேற்குத்திசை; தாட்சியாக=தாழ்ச்சியாக (குறுகுகவென்று).

சொன்னமொழி தப்பாமல் அகத்தி யர்தான்
துடுக்குத்தான் செய்வானே என்று சொல்லி
கன்னமொழி கைதனையே வைத்த ழுத்தக்
கட்டையாகத் தானழுந்தித் தாழ்ந்து போச்சு
முன்னமொழி முன்போலே இருக்க வென்று
மோட்சந்தா னருளுமையா வென்று கேட்க
அன்னமொழி முன்போலே ஆவா யென்று
அகத்தியரு மப்பாலே ஏகி னாரே. 50

(அ.பொ.):—கன்னமொழி=இனிய (கற்கண்டுபோன்ற) மொழி உடைய அகத்தியர்.

அப்பாலே போனபின்பு நடுக்கந் தீர்ந்து
அழன்றதுவோர் வேர்வெழும்பி இளக்க மாகி
இப்பால்தான் அழுந்தினதால் கையி னாலே
இருந்திடந்தான் அங்கங்கே பலன்று கமாச்சு
தப்பாமல் குளிகையிட்டு எடுத்து வந்து
சுருக்காக மூன்றுநாளுட் கொண்டா யானால்
முப்பால்தான் அகத்தியர்போல் சிரஞ்சீவி யாகி
மூவுலகும் சஞ்சரித்துத் திரிய லாமே. 51

(அ.பொ.):—அழன்றது=வெதும்பியது; சிரஞ்சீவி—எப்போதும் வாழ்பவர்.

## பலன்றுக பாடாண வேதை

ஆமென்ற பலன்றுகம்பச் சையில் வேதை
அகத்தியர்கை படப்பலன் றுகமே யாச்சு
தாமென்ற அகத்தியுட பழுப்புச் சாற்றில்
தனிலுறைத்துப் பலன்று கம்நவலோ கத்தில்



வேமென்ற தகடடித்து மேலே பூசி
வெய்யிலிலே போட்டிடவே ஏம மாகும்
தூமென்ற தாமிரத்தில் வேதை யாகும்
சொல்லரிது பலன்றுருகந் தன்னைத் தானே. 52

(அ.பொ.):—பச்சையில் வேதை—எரிப்பு, புடம் முதலியன இன்றியே வேதை செய்யும் சரக்கு.

பலன்றுருகந் தன்னுடைய மாற்றைக் கேளு
பாங்கான அறுபத்து நாலு மாற்று
திவன்றுருகஞ் சித்தருக்கும் யோகிக் காகும்
செகச்சால மனிதனுக்குப் பத்து காணும்
நிலன்றுருக இருடியர்க்கு நூறு காணும்
நிலையினிற்கும் பெரியோர்க்கு இருபத் தைந்து
கலன்றுருக்குக் காமாதி கண்டா னால்
கண்கெட்டுச் செவிடாகிக் கலங்கு வானே. 53

கலங்காமல் ஒன்றாகக் கண்ட பேர்கள்
காட்சியேதான் மெய்ஞ்ஞானக் காட்சி யாகும்
நலங்காம விரண்டாகக் கண்ட தென்ன
நாட்டியேதான் யோகத்தி லிருக்கும் பேர்கள்
நிலங்காமல் நின்றதென்ன குணமாம் நேர்மை
நிறைந்தபதஞ் சவிகுருவே சொல்ல வேணும்
விலங்காமல் வெல்வதென்ன ஐம்பு லனைத்தான்
வேதாந்த அந்தமென்ற விளக்கம் பாரே. 54

## வேதாந்தம்

விளக்கமாய் நோக்குவதே எவ்வா றென்றால்
வேதாந்த நுட்பத்தை விரைந்து கேளு
புளக்கமாய்ப்பு ருவமைய மேல்மூலம் நின்று
புகழாக்கீழ் மூலக்குண் டலியைப் பாரு
களக்கமாய் நடுமூலக் கண்டம் பாரு
கலங்காமல் எட்டி னுட கருவுங் காணும்
துளக்கமாய்த் துவாதசத்தின் மேலே பாரு
தொடர்ந்தநூல்தான் போட்டதொரு ஏணி யாமே. 55

ஆமென்ற வெளிகடக்க அகண்ட வீதி
அதிகமேதான் இவையெல்லாம் மனசுண் டானால்
ஓமென்ற ஒளிகடக்க அந்த போதம்
உன்னியேதான் எட்டிப்பார் அதுவும் பேசும்

நேமென்ற நிலைகடக்க முப்பால் தாண்டி
நிலைத்துமேதான் ஏறுபவன் குளிகை ஞானி
மோமென்ற வெளிகடக்க வொன்று மில்லை
மூச்சில்லை பேச்சில்லை முழுநோக் கில்லை. 56

நோக்கான பெண்ணிவள்தான் பிரபஞ் சமேயாம்
நொடிக்குளுண் டாக் கித்தானே யழிப்பாள் பாரு
ஆக்கான படைத்தழிக்க யாரா லாகும்
ஆதியான ஆத்தாள்தான் மணியா லாகும்
தேக்காகப் படைப்பிக்க யாரா லாகும்
செகசத்தி என்றதொரு தாயா லாகும்
வீக்கான விடுகிறது யாரா லாகும்
வேதாந்த வுன்மணியா லாகுந் தானே. 57

## காந்தபாடாணத் தோற்றம்

காணவேதான் காந்தபா டாணந் தன்னைக்
கருமைநிறம் வாயுகாலன் சனிய ளுகும்
பூணவேதான் புருவத்தில் சிவன்தான் தானும்
பெரியமகா மேருவுக்குத் தென்மேற் காக
மாணவேதான் மலையடியில் இருடி தேவி
மகத்தான பேர்கண்டு அவர்கள் முன்போய்
தாணவேதான் டவமாடிப் பதத்தைக் காட்டச்
சர்ப்பந்தான் அசைவற்று விடங்கக் கிற்றே. 58

(அ.பொ.) :—வாயுகாலன்=மிக்க மந்தநடை ; சர்ப்பம்=பதஞ்சலி முனிவர் என்பாரும் உண்டு.

கக்கியதோர் விடந்தானும் கல்லில் வீழ்ந்து
கதிரோன்தன் ஒளிபடக்காந் தப்பா டாணம்
திக்கியதோர் ஆதிமூர்த்தி சொருப மாகும்
சேர்ந்தநவ லோகமெல்லாம் தீனி யாகும்
மக்கியதோர் சூதத்தைச் சுழற்றிக் கொண்டு
மணிபோலே நின்றுடும் கரியி னுள்ளே
சொக்கியதோர் குருக்கோடி சுன்னங் கோடி
சுருதிமுடிந் திடம்போலே சித்தி யாமே. 59

(அ.பொ.) :—கதிரோன்=சூரியன் ; தீனி=(ஆகாரம்) மடித்து விடும் ; மக்கியதோர் சூதம்=இறுகிக் கட்டிய இரசம்.



## புத்தி கூறல்

சித்தியாங்கு ருபதத்தைக் காப்பாய் நித்தம்
திறமாக வகையெல்லாங் காட்டு வார்பார்
பத்தியாய்க் குருவின்மேல் பற்று வைத்தால்
பரிவாகக் கண்முன்னே இருந்தா யானால்
முத்தியாஞ் செகமாதிலட்சி யத்தைக் காட்டி
முப்பாழின் வெளிகடக்கக் குளிகை ஈவார்
புத்தியாய் அண்டமென்ற தமரி லோட
பொருள்காட்டி யிப்படித்தா னென்பார் காணே. 60

காணவேதான் நிர்மலத்தி லிதுதா னென்பார்
காயசித்தி கோடியுக மிருக்கச் செய்வார்
நாணவேதான் ஞானத்தின் நிலையைச் சொல்வார்
நளினமாக மனஞ்சென்றால் ஏக மேகம்
தோணவேதான் சோதியுட வரையைச் சொல்வார்
சூட்சமாக சுருக்கியேவே தாந்தஞ் சொல்வார்
தாணவேதான் சாத்திரங்கள் எல்லாங் கீழாம்
தருக்கலாமே சித்தருட பெருக்கந் தானே. 61

(அ.பொ.) :—ஏகமேகம்=இரண்டறக்கலந்த நிலை (சாயுஜ்ஜியம்); தருக்கலாம்=செருக்கடையலாம் ; பெருக்கம்=மேன்மை.

பெருக்கவேதான் உலகத்து யோக ஞானி
பிலத்ததுவோர் கடினமெத்த யேதென் றக்கால்
தருக்கவேதான் நோயாலே சடமி ளைத்து
தாட்சியாக லட்சியத்தைத் தரிக்கொட் டாது
உருக்கவேதான் ஊணவென்றால் எண்ணம் போலாம்
உற்றதோர்வ றுமைவந்தால் ஊனெட் டாது
தருக்கவேதான் உலகத்து ஞானந் தானும்
தனிக்கோடி பேரினிலே ஒருவன் தானே. 62

(அ.பொ.) :—ஊனெட்டாது=மனம் ஊன்றிக் குவியாது.

கோடியிலே ஒருவன்தான் ஞானி யாகும்
கூர்ந்துமேபார் இலட்சத்தில் ஒருவன் சித்தன்
நாடியிலே ஏமசித்தி யானால் மைந்தா
நலமான யோகசித்தி ஞான சித்தி
வாடியிலே மலைதோறும் நாதர் சித்தர்
வைத்திட்ட முதலான நூலோ சித்தி
ஆடியிலே வாதசித்தி யான பேர்கள்
ஆச்சுதேதாம் நவகோடி சித்தர் தானே. 63

நவகோடி யாச்சுதய்யா சித்த ரென்பார்
நாடியபேர் எத்தனையோ எண்ணக் கூடா
புவகோடி யுலகத்தைப் போலே ரெட்டி
பூமியெல்லாம் சித்தர்மய மெத்த வாச்சு
திவகோடி உலகத்தார் சேரச் சேர
சித்தர்மய மெத்தவாய் வளர்ந்து போச்சு
உவகோடி உலகத்தில் மூல வர்க்கம்
உகாந்தமாய் மலைதோறும் மெத்த வாச்சே. 64

மெத்தவேதான் உண்டானு லுலகோர் போல
மிகுந்துமேதான் நிர்விகற்பத் துறைந்தோர் கோடி
பெத்ததோ வென்ருக்கால் பெண்ணுறவே யல்ல
பேரின்ப ஞானத்தில் பிலக்கும் பந்து
பத்தவே வென்ருக்கால் பெத்துறவோ வல்ல
பாய்ந்துமேதான் ஒருநொடியில் குளிகை யிட்டோர்
உத்தவே உறவென்ருல்வங் கணமே யல்ல
உன்னிநின்ற வாசியுட வுறவு தானே. 65

## உலகுருநு ஞானம்

உறவென்ற உறவுக்குள் சேர்ந்தா லல்லோ
உகந்துமேதான் விகற்பங்கள் சாரொட் டார்கள்
துறவென்ற தலமாறும் சூட்டு வார்கள்
துரிதமாங் குருபதத்தி லூட்டு வார்கள்
மறவென்ற மதியமிர்தம் பூட்டு வார்கள்
மகத்தான வித்தையெல்லாம் தெரிவிப் பார்கள்
கறவென்ற கடந்தபொரு ளிதுதா னென்று
காட்டுபவர் குளிகையிட்டு ஒட்டு வாரே. 66

ஓட்டுவார்தான் உலகத்தார் பார்த்தா ராளுல்
உயர்ந்தமரத் தேறிபூங்கொம் பெல்லாந் தேடி
பாட்டுவார்தான் அதீதமென்ற பழத்தைக் கண்டு
பருகினதால் தனக்கொக்கும் உலக போகம்
கூட்டுவார்தாம் குருசொல்லத் தெரிந்தா ளுல்
கொடியான புருவமையக் கொம்பில் நின்று
பூட்டுவார்தாம் பட்சியைப்போல் பழம்பு சிப்பார்
புத்தியாய்தான் கேசரியாம் முத்திக் காட்டே. 67

மூத்தியான சித்தரென்ருல் முத்த ளுக்கி
முனிந்துமேதான் காயசித்தி பண்ணி வைப்பார்
சித்தியாக மதியழகும் கெகன வீதி
சுற்றவேதான் அண்டமெல்லாம் சோடி செய்வார்



நித்தியமா நிர்விகற்ப யுகமு நிற்க
நேரான பிரம்மனீரு முடிவு காண
உத்தியாக மனக்கயிற்ருல் வாசி தன்னை
மகத்தான கேசரத்தில் மருவு வாரே. 68

(அ.பொ.) :—கெகனவீதி=விண்வழி ; சோடி=அழகுபெறச் செய்வர் ; நித்தியம்=நிலையாக. கேசரம்=சகஸ்ராரம் என்னும் (மூ)தானம்.

## இலிங்கபாடாணத் தோற்றம்

மருவுகின்ற லிங்கமாபா டாணந் தானும்
வண்மையான உற்பத்தி யெங்கே யென்ருல்
திருவுகின்ற சிவன்தானும் முப்பு ரத்தைச்
சினத்தெரிக்க வெந்துமேதான் எரிந்து போச்சு
உருவுகின்ற ருத்திரமூஞ் சப்போ தானுர்
உயர்ந்தநெற்றிக் கண்ணினுலே பொரியை வீசி
நருவுகின்ற ரசகந்தி நிலத்தே வீழ
நடுங்கியேதான் லயமாகி லிங்க மாச்சே. 69

(அ.பொ.) :—லயம்=ஒன்றிக்கலத்தல்.

லிங்கமென்னும் பாடாணம் மேருக் கீழால்
லபித்துரச கெந்தியுமே கட்டி யாகி
வங்கத்து மலையடியில் அண்டிக் கொண்டு
மலைதோறும் லிங்கப்பா டாண மாச்சு
பங்கமான பச்சையிலே தொடவே பொன்னும்
பணவெடைதான் பாலினிலே கொண்டா யாளுல்
முங்கமான முருக்கம்பூ போலாந் தேகம்
முனிந்துமேதான் இதைத்தேடி யுண்டி டாயே. 70

(அ.பொ.) :—அண்டி=நெருங்கி.

## ஞானயோகம் கூறல்

உண்டிடவே கேசரந்தான் சரமாய்க் காணும்
உயர்ந்ததுவோர் அண்டமெல்லாம் கைக்குள் ளாகும்
அண்டிடவே கேசரந்தான் பறவைப் போலே
அடியேது மேலேது சித்த ருக்கு
கிண்டிடவே கேசரந்தான் விசும்பா மன்ரே
கிளறியேதான் இதனுலே ஐந்து மாச்சு
பண்டிடவே கேசரத்தில் சஞ்ச ரித்தால்
பாங்கான ரசவாதி சித்தன் தானே. 71

(அ.பொ.) :—விசும்பு=விண் ; ஐந்தும்=பஞ்சகிருத்தியம். ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல்.

ரசவாதம் வந்ததினல் கீர்த்தி யென்ன
நலமான வாசியென்ற யோகம் வேணும்
நிசவாதம் வந்ததனல் கீர்த்தி யென்ன
நிலையான ஞானத்தில் நிலைக்க வேணும்
கெசவாதம் ஏமசித்தி யானு லென்ன
ககனத்தி லண்டமெல்லாம் சுற்ற வேணும்
துசவாதம் சுன்னவித்தை வந்தா லென்ன
சுற்றியேமே லேழுங்கீ ழேழும் பாரே. 72

(அ.பொ.) :—கீர்த்தி=புகழ் ; நிசம்=உண்மை ; கெசவாதம்= பெரிய வேதைகள் செய்யும் வித்தை ; துசம்=துவசம்=கொடி ; பெருமையைக் காட்டக் கொடிகட்டி நிலைநாட்டுவது பண்டுதொட்டுள்ள பழக்கம். துசவாதி என்ருல் வேதை செய்து வெற்றிகொண்டு கொடி நாட்டியவன் என்பது பொருள்.

### குருட்டுவாதிகள்

பார்த்திடுவார் நன்மையுற்ற வாதி யானுல்
பாடாண்டி வாதிக்குப் பூர்வப் பற்றுய்
சேர்த்திடுவான் பெண்ணேடே மாயைக் கூட்டி
சிந்தித்தே மோகிப்பான் வியப்பான் கோடி
ஏர்த்திடுவான் இருவினையின் பாசஞ் சிக்கி
எழுந்துமேதான் சுழலுகின்ற பொறியே சுற்றிக்
காத்திடுவான் சோற்றிற்குத் தேற மாட்டான்
கடைகெட்டுத் தான்திரிவான் வாதி தானே. 73

(அ.பொ.) :—பாடாண்டி=பாஷாண்டி (கன்மவாதிகள் கன்மாவை விட்டவர்களை இங்ஙனம் அழைப்பர். விதிப்படி துறவுபூண்டவர்களையும் இங்ஙனம் கூறிப் பழிப்பர்). தேறமாட்டான்=ஆக்கம் கொள்ளமாட்டான் ; கடைகெட்டு=கீழ்த்தரமாய்க்கெட்டு.

வாதிகள்தான் இப்படியே கெட்டுப் போனுர்
மகத்தான வுலகமெலாம் ஊழ லாச்சு
ஞாதிகள்தான் ஞானமென்ற சாங்கம் போச்சு
நாடியொன்றில் நில்லாமல் மனம்பே யாச்சு
கேதிகள்தான் உலகவா சனையில் கூடி
கெட்டார்கள் கிரியையிலே உழன்ருர் கோடி
சாதிகள்தான் சரியையிலே நின்று ழைத்து
தயங்குகிற கானலைப்போல் தியங்கி னுரே. 74

(அ.பொ.) :—கேதிகள்=கேடிழைப்பவர்கள் ; உலக வாசனை= இகப்பற்றுகள் ; (மண் பெண் பொன் ஆசையால் ஏற்படும் பற்றுகள்) ; தியங்கும்=அலையும் ; தயங்கு=மயங்கு.



தியங்கினுர்தாம் மாயத்தே லோகத் தோர்கள்
சினந்துவிட்ட தகனுலேயே மனம்பே யாச்சு
உயங்கினுர்சித் தர்கள்தான் கும்பத் துள்ளே
உன்னவேதான் சித்தரென்ற நாம மாச்சு
தியங்கினுர்தாம் இருடியெல்லாம் விகற்பத் துள்ளே
நிசமாக குளிகையிட் டோடி னுர்கள்
நயங்கினுர்தாம் மெய்ஞ்ஞானி அகண்டத் துள்ளே
நயந்துரைத்த விடமதுதான் உயர்த்தி தானே. 75

(அ.பொ.) :—உயங்கினுர்=முயன்ருர். கும்பத்துள்=(குறுக்கல்) கும்பகத்துக்குள்.

உரைத்தவிடம் உயர்த்தியென்ன தாழ்த்தி யென்ன
ஒருமைதான் கைநீச்சு ஒருவர் தெப்பம்
இறைத்தவிடம் பின்னெருவர் ஓட வேற்றம்
எப்படிப்போம் எவண்கரை இறங்கச் சேர்க்கும்
மறைத்தவிட மென்னவென்ருல் மனமு யர்த்தி
மாட்டுறதும் ஓட்டுறதும் மனதி னுலே
முறைத்தவிடம் மும்முறையைப் பாராமல் கெட்டு
மூச்சான வாய்ப்பேச்சால் முனிந்தார் பாரே. 76

(அ.பொ.) :—எவண்=எப்படி, எங்கு ; மும்முறையைப் பாராமல்= மூன்ருகிய சரம், யோகம், ஞானமென்னும் வழிமுறைகளைக் கவனிக்காமல் ; முனிந்தார்=வெறுத்தார்,

முனிந்துமேயே நீங்களுந்தான் உலகு சென்று
முயற்சியேதான் படுகுழியாம் பாழாம் மாய்கை
வினிந்துமே சூழ்ந்துதென்ருல் விவேகம்போச்சு
மேன்மையாம் பஞ்சிவிட்ட தீப்போ லாச்சு
துணிந்துமேதான் சொன்னுலும் செவிகே ளாது
துத்தியேதான் அரவுகடித் தலைக்கு ளேறி
மனிந்துமேதான் மலையேறும் சித்த ரோடே
மார்க்கவழி வித்தையெல்லாம் வருகுந் தானே. 77

(அ.பொ.) :—மாய்கை =(உலக வழக்கு) = மாயை ; விவேகம்= பகுத்தறிவு.

### சரக்காண்ட பாடாணத் தோற்றம்

வருகின்ற சரக்காண்ட பாடா ணந்தான்
மார்க்கமதாம் உற்பத்தி சொல்லக் கேளு
பருகுகின்ற பாண்டவர்கள் யுத்தந் தன்னில்
பதினுலாம் நாள்தன்னில் சபதம் வந்து
தருகின்ற சயத்திரதன் தலைய றுத்து
தரியாமல் வாயுவாதி ரத்தி னுலே

கருகின்ற அருச்சுனன்தன் கணைக ளாலே
காண்டீபம் தனில்தொடுத்து காசி தன்னில்
திருகின்ற சிந்துபதி செபத்தில் நிற்கில்
சிரசைத்தான் கையில்விழ போட்டிட் டானே. 78

(அ.பொ.) :—தரியாமல்=தாங்காமல் ; கருகின்ற=மனத்தில் சினங் கொண்ட ; கணை=பாணம் ; காண்டீபம்=அருச்சுனனுடைய வில்.

போட்டிடவே சிந்துபதி நிலத்தி லிட்டான்
பொடியாகச் சிரம்வெடித்து மடிந்து போனான்
தீட்டிடவே சிவன்கொடுத்த பாணத் தாலே
சிரமறுத்து சரங்கொண்டு போன தாலே
மாட்டிடவே சிரமறுத்து குருதி சிந்த
மலைதோறும் திவலைபட்டு ரவியி னாலே
தூட்டிடவே காய்ந்ததுபா டாண மாச்சு
திரமான சரத்துநின்று சிந்தித் தானே. 79

(அ.பொ.) :—சரம்=பாணம்.

சரத்திநின்று திவலைசிந்தி வில்லா லெய்யச்
சாங்கமாக வந்துசரக் காண்ட மாச்சு
தரத்திநின்ற சரக்காண்ட பாடா ணந்தான்
சாங்கமாக மலைதோறும் மிகுதி யுண்டு
பரத்திநின்ற பாடாணம் சிவப்பு வெள்ளை
பண்பாக அம்புபோலே வீழ்ந்தி ருக்கும்
புரத்திநின்ற காண்டீபந் தணையொப் பாகும்
பொன்பிறந்த கற்பகமாம் விருட்சந் தானே. 80

(அ.பொ.) :—கற்பகமாம் விருட்சம்=கற்பகம் என்னும் தேவநாட்டு மரம் ; (இது கேட்டதை யெல்லாம் தரும்).

தானென்ற பாடாணந் தணையெடுத்து
தங்கத்தின் மேல்தடவிப் புடத்தைப் போட
ஆனென்ற அலரிப்பூப் போலே யாகும்
ஆயிரத்திற் கொன்றிடவே அன்ப தாகும்
வேனென்ற காயசித்தி மிடுக்கு மாகும்
மீறியதோர் சுவாசத்தை யுள்ள டக்கும்
தேனென்ற மொழியுடைய சிவகா மித்தாய்
சொன்னபடி சொல்லிவிட்டேன் சூட்சி யாமே. 81

(அ.பொ.) :—அன்பது=(பரவைவழக்கு) ஐம்பது (50) ; மிடுக்கு= வலிமை.



சூட்சியான பாடாண மனாதி வித்தை
சிவனுடைய கணையாலே வந்த தாது
ஆட்சியான எண்விதலட் சுமியாய் நின்று
ஆடியேதான் கூத்தானால் அகில மெல்லாம்
மீட்சியான செகச்சால மிவளுக் குள்ளே
மூன்றுலக மெல்லாந்தான் மிரட்ட லாகும்
தாட்சியால் முகடிவந்து மூண்டா யானால்
சலிப்பெய்தி மூதேவி வறுமை தானே. 82

(அ.பொ.) :—அனாதி = தொடக்கங்கூறொண்ணாதது ; எண்வித லட்சுமி=ஆதி, தன, தான்ய, சந்தான, வீர, மகா, கஜ, ராஜலட்சுமிகள்; அகிலம்=உலகம் ; மூன்றுலகம்=விண், மண், கீழ் (பாதலம்) உலகங்கள்.

## நடுமாற்றவாதி இலக்கணம்

மூதேவி முன்னிற்கில் உலக வாதி
முனிந்துமேதான் சுட்டாலு மொன்று மில்லை
சீதேவி சிறுமையினால் சுட்ட லைந்தால்
செப்புகிற குருவேணும் குருமுன் வேணும்
பூதேவி பொறுமையுற்ற சாந்தி வேணும்
பிரியாமல் சிவயோகம் பூட்ட வேணும்
நீதேவி நிருமையினால் ஞானம் வேணும்
நிலைக்குமது வாதந்தான் நேராய்க் காணே. 83

(அ.பொ.) :—சீதேவி=இலக்குமி ; பூதேவி=உலகமாதா ; சாந்தி= அமைதி.

காணவேதான் ஆணவத்தில் சுடுவார் கோடி
கைமுறைதான் கேட்பதேனோ வென்பார் கோடி
ஆணவேதான் அடவியிலே அலைவார் கோடி
அரைப்பார்கள் சாறுவிட்டு எரிப்பார் கோடி
தோணவேதான் குருக்காணோ மென்பார் கோடி
சூட்டுகிற வரிசையினிற் சுழன்றோர் கோடி
வீணவேதான் மொழிகேட்டு சுடுவார் கோடி
விரண்டுமேதான் கெட்டதிந்த திறந்தான் காணே. 84

(அ.பொ.) :—அடவி=வானம், காடு.

காணவேதான் நிறையபேர் காரஞ் சாரம்
கண்டுமேதான் தெரிந்துகொண்டேன் சிக்கிற் றென்று
பாணவேதான் பாடினதோர் பாட்டைப் பார்த்துப்
பரிந்துமேதான் ஒன்றோடே ஒன்றைச் சேர்த்துத்

தோணவேதான் கட்டவில்லை தப்பிற் றென்று
  சூட்சமிது வல்லவென்று பின்னே தேடி
ஊணவேதான் உன்னிமறு படியுந் தேடி
  ஊரிஞே டுலகமெல்லாம் அலைகின் ருரே. 85

(அ பொ.) :—தப்பிற்று=தவருகிவிட்டது.

உலைந்துமேஇவ் வுலகத்தில் வாத மில்லை
  உத்தசெம்பு பொன்னுமோ பொய்தா னென்பார்
தொலைந்துமே விணைதொலைந்தால் சிக்கு மென்பார்
  சொன்னுக்கால் சூட்சமெல்லாம் வாத மென்பார்
குலைந்துமேதான் கருவினுலே தானே யெண்ணி
  கூட்டியே குறுக்குவழி யாக வொன்றை
அலைந்துமேதான் சுணங்கன்போல் அனேகம் பேர்கள்
  அழன்றுழன்று பார்த்துமேதான் அலைகின் ருரே. 86

(அ.பொ.) :—உலைந்து = வருந்தி ; உத்த = வெற்று = தனித்த : குலைந்து=கெட்டு ; சுணங்கன்=நாய் ; அழன்று=மனம் புழுங்கி : உழன்று=இன்னலுற்று.

பார்த்துமே உலகத்தே வாதமில்லை என்பார்
  பழுக்குமோ நவலோக மதுவொன்ருய்த் தானும்
ஊற்றுமேதான் ஊதுவா ரொருகாசுங் காணுர்
  உறைத்ததோர் வெகுநெருப்பில் ஓடிற் றென்பார்
பூத்துமேதான் புடம்போட்டு ஆறெட் டாமல்
  பொட்டெனவே தானெடுத்து புட்டுப் பார்த்து
நேற்றுமவே இப்படித்தான் இருக்க வில்லை
  நெருப்பிவிட்டு பார்த்தவுடன் புகைந்து போமே. 87

(அ.பொ.) :—புட்டு=உடைத்து ; (பிள்=பிள என்பதன் அடியாய் உலகவழக்கில் இவ்வண்ணமாயது).

புகைந்துபோமே குருசொல்லா வாத மெல்லாம்
  பேராத சாத்திரத்தைப் பேணிப் பார்த்து
வகைந்தும்தான் நூலினுட வர்ம மெல்லாம்
  வகையோடே ஆசான்தன் வர்மங் கெட்டு
விசைந்தும்தான் வழியோடே பார்த்து நீயும்
  விவேகமாகச் செய்யாமல் விழலாய்ச் செய்வான்
நகைந்துமேதான் காமப்பால் வித்தை தன்னை
  நாடினவன் நாய்கடித்த எலும்பு மாமே. 88

(அ.பொ.) :—பேணி=ஆதரித்து ; வர்மம்=மர்மம்=(இரகசியம்) மறைப்பொருள்கள் ; வகை=முறை ; விழல்=வீண்.



## தாளகத்தின் உற்பத்தி

ஆமென்ற தாளகத்தின் பிறவி கேளு
  ஆத்தாள்தான் தேவகங்கை தன்னில் தானும்
வாமென்ற மண்ணெடுத்து தாளம் போலே
  வகையாகப் பிடித்துமேதான் தாளங் கொட்டி
ஓமென்ற புவர்லோகத் தெறிந்து போட
  உருண்டுமேலே கந்தகந்தான் விளையும் பூமி
தானென்ற தனுக்குள்ளே விழ்கத் தானும்
  தாளகந்தான் உற்பத்தி யான வாறே. 89

## தாளக வேறுபாடு

உற்பத்தித் தாளகத்தி விரண்டே யுண்டு
  உயர்பத்தி ரப்பிண்டித் தாள கம்தான்
புற்பத்தி பிறப்பிதழி தழாக நிற்கும்
  பெரிதான சத்துண்டு ஈய முண்டு
விற்பத்திப் பிண்டித்தா ளகத்தைக் கேளு
  விளங்கத்தா னில்லாமல் அற்ப சத்தாய்
கற்பத்தில் கட்டியாய்க்க னகமாய்த் தோணும்
  கருமசந்தா னமெத்தவுண்டு கருதி யாடே. 90

கருதியேநீ தாளகந்தான் பலத்தை வாங்கி
  கற்சுண்ணச் சீலையிலே சுருட்டி வைத்து
திருகியேதான் கீழ்மேலும் கல்லை வைத்து
  சீலையிலே பிடித்துமேவெந் நீரில் முக்கு
பருதியேயி ருபத்துமூன்று முறைது வைக்க
  பாடாண ஊறெல்லாம் கழன்று!போகும்
துருதியே வெடியுப்புநீர்ச்சு ருக்குப் போடு
  துடியான சாரநீரிற் சுருக்கும் போடே. 91

(அ.பொ.)!:—கல்லை=சுண்ணும்புக்கல்லை ; முக்கு=தோய், முழுக் காட்டு : துருதியே=வாலையில் வடித்த. வெடியுப்புநீர்=திராகவம் ; துடியான=காரமான.

## தாளகச் சத்து

சுருக்கிடுவாய் மகாவுதக சலத்தா லேதான்
  துடியான திராவகமும் சுருக்குப் போடு
முறுக்கிடுவாய் பால்துருதி சுருக்குப் போடு
  முன்னூற்றுக் கொன்றிடவே மாற்று மாகும்

உருக்கிடுவாய் உபரசங்கள் ஐய மாகும்
உத்தமமாம் தங்கமது குருவு மாகும்
மறுக்கிடுவாய் மலைக்கல்லி லெல்லாம் ஐயம்
மனோன்மணியாம் தாளகத்தின் ஆட்டு தானே. 92

(அ.பொ.) :—மகா உதகம்=போகர் இரண்டாம் ஆயிரம் பா. எண் 890ல் காண்க ; பால்துருதி ஷெ நூல் 914, 915, 916 பாடல்களில் காண்க; மறுக்கிடுவாய்=காய்ச்சி னாற்றினால்; ஆட்டு=வேதை (வித்தை.)

## அறிவுரை கூறல்

ஆட்டான வாதமெல்லா மேதா லாச்சு
ஆதியாம் ரசத்தையே வேதிக்க வேணும்
பூட்டான போதமெல்லா மேதா லாச்சு
பிறளாமல் மனதையல்லோ செயிக்க வேணும்
வேட்டான வேதாந்தம் பார்த்தா லென்ன
வேதாந்த சாரத்தில் சார வேணும்
நாட்டான நாதமென்று லேதுக் காச்சு
நாதாந்த யோகத்தில் நாடில் நன்றே. 93

(அ.பொ.) :—பிறளாமல்=பிறழாமல், தவறான மாறுதலடையாமல்; சார=சார்ந்தொழுக.

## வேதாந்தக் கருத்து

நாடினால்நல் வினையும்தீ வினைக ளில்லை
நானுமில்லை நீயுமில்லை நடனம் பார்த்தால்
ஊடினால்தான் ஒன்றுமில்லை யிரண்டு மில்லை
உறைந்திட்டால் உன்னுகிற மனமு மில்லை
மூடினாலே வாயுமில்லை மூக்கு மில்லை
முயன்றதுவோர் பரிசமில்லை சத்த மில்லை
பாடினால்தான் பண்டுமில்லை பழக்க மில்லை
பராபரமாம் ஞானமது பலிக்கும் நேரே. 94

(அ.பொ.) :—நாடினால்=ஆராய்ந்தால் ; நடனம் பார்த்தால்=சாமிபப் பதவி கொண்டால் ; ஊடினால்=வைராக்கியம் கொண்டால் ; உறைந்திட்டால்=மனம் அடங்கினால் ; மூடினால்=கும்பகத்தில் நிலைத்தால்.

நேராக இந்தமுறை பார்க்க வென்றால்
நித்தியமாம் குருபதத்தில் காத்தி ருந்து
சீராகக் குருசொல்ல துறையைக் காணும்
சுட்டாக்கால் ஒன்றுமில்லை தோட மெத்த



தூரான கருக்கண்டால் மூடியுஞ் சுண்ணம்
சூட்சந்தான் ஆசானுன் சொல்ல வேணும்
காராகக் கருக்கண்டால் தொட்ட தாகும்
காட்டாட்டால் கருச்சொன்ன நூலைப் பாரே. 95

பாரென்றன் நூல்தன்னில் மனதை யுன்னி
பலப்பலவாம் பரிநாமம் வெளியாய்ப் போகும்
போரென்றே யலையாதே நூலில் லாட்டால்
பொருந்தியேதான் குருபதத்தில் தொண்டு பண்ணு
சீரெந்தன் மனமகிழ்ந்தால் குருதான் சொல்வார்
திரிந்துவிட்டால் நாய்போலே சூட்சம் சொல்வார்
ஆருமெந்தன் அலைந்ததினால் வாத மாமோ
அறியலாமே காப்புமுதல் கடையும் பாரே. 96

(அ.பொ.) :—பரிநாமம் — வேறு பெயர்கள் — (பரியாயப்பேர்) குழூஉக்குறி : காப்புமுதல்—கடையும்—கடவுள் வணக்கம் முதல் கடைசிவரைக்கும்.

பாருமேநீர் வாதிகிட்டே காத்தி ருந்து
பாங்கையெல்லாம் பார்த்திருந்தே னென்று சுட்டு
ஆருமேதான் சரக்கெல்லாம் மணலில் போட்டு
ஆகாமல் சுட்டெரித்து பணம்போச் சென்று
சேருமேதான் சேர்த்துவைத்தால் சொத்துக் காகும்
செலவழிந்து போச்சுதென்று விசார மாகி
வாருமேதான் வாதமது கடிசு யென்றும்
மகத்தான யோகிக்கா மென்பார் தானே. 97

(அ.பொ.) :—விசாரம்=ஏக்கம்.

ஆமென்றே சொன்னாக்கால் யாங்கண் சொல்வார்
அரிதாகும் நிழலைப்போல் காத்தால் சொல்வார்
நேமென்றே பொய்ச்சொல்லார் நிலைத்த வாதி
நிறைநிறையாய் நினைவதனை சோதிப் பார்பார்
தோமென்ற சொற்பேச்சுப் பொய்யாய்ப் போனால்
துப்பிடுவாய் அவன்முகத்தில் சுணங்க வாதி
ஓமென்ற வொருமொழிதான் நிசவா திக்கு
ஒருக்காலும் அவர்பதத்தை மறந்தி டாதே. 98

மறந்திடாதே அவர்பதத்தில் வணங்கிக் காரு
மரத்ததிலே வேதையொன்றுங் கேட்க வேண்டாம்
பறந்திடாமல் தொண்டுபண்ணித் திரியும் நாளில்
பக்குவந்தான் செய்திடுவார் பார்த்துக் கொள்ளு

இறந்திடாதே வுழுதுதா னுழைத்தா லல்லோ
அல்லார்க்கும் சீவனமா மென்றா னுந்தான்
கரந்திடாமல் குருபதத்தைக் காத்தா லல்லோ
களங்கோடு குருமுறைகள் காட்டு வாரே. 99

(அ.பொ.) :—கரந்திடாமல்=வஞ்சனை இல்லாமல்.

## மனோசிலைத் தோற்றம்

முறையான மனோசிலையுற் பத்தி கேளு
முதல்வர்தான் மன்மதனை யெரித்துப் போட்டார்
பிறையான ரதிதேவி சிவயோ கத்தில்
பிரண்டுமேதான் சாம்பலிலே அலறும் போது
குறையான குங்குமத்தின் பொடியு மஞ்சள்
குலுங்கியழும் போதுதாள கத்தின் பூமி
துறையாக விழுந்திடத்தன் தனத்தில் தானே
தரித்திட்டு மனோசிலையுற் பத்தி யாச்சே. 100

(அ.பொ.) :—முதல்வர்=அரன் : அலறும்=அழும்.

## மனோசிலை சத்துதனைத் தாளகச்சத்துபோல் செய்க

உற்பத்தி மனோசிலையில் மூன்றே யுண்டு
உருட்சியான செயமாங்கி என்ப தொன்று
நற்பத்திர தாங்கிஎன்ப தொன்று மாகும்
நலமான பீதவர்ணீ யென்ப மூன்றும்
முற்பத்திர செயமாங்கி முக்கோ ணந்தான்
முனிந்தபசுந் தேசிகப்பா யிருக்குங் காணும்
கற்பத்திர தாங்கியென்ப ததுவுந் தானும்
கனிந்தரத்த வர்ணமா யிருக்குந் தானே. 101

(அ.பொ.) :—பசுந்தேசிகப்பாய்=பச்சை நிறத்தில் செந்நிறம் கூடியதாய் ; கனிந்த ரத்தவண்ணம்=சுத்தமான சிவப்பு நிறம்.

இருக்குமேதான் பீதவர்ணீ சுத்தி யானால்
ஏத்தமாக செம்புநிறம் கருஞ்சி வப்பாம்
பருக்குமேதான் காரிய பற்ப மாக்கும்
பாங்கான தாளகம்போல் பத்தம் பண்ணி
பெருக்கவேதான் நவலோகத் திட்டா யானால்
பேரான மாத்ததுவும் உயர்த்தி மெத்த
தருக்குமேதான் காயசித்தி கணத்தி லாகும்
சதுர்யுகமும் வாதசித்தி யாட லாமே. 102



(அ.பொ.) :—ஏத்தமாக = மேலானதாக ; பத்தம் = பந்தம் = கட்டுதல்.

## வேதாந்தங் கூறல்

வாதசித்தி யென்றாக்கால் எளிதல் லகாணும்
மகத்தான எடுத்தசடம் தவத்தா லெய்தும்
சூதசித்தி கண்டாக்கால் காய சித்தி
சுத்தியாம்தான் யோகசித்தி யெட்டு மாகும்
நாதசித்தி கண்டாக்கால் ஞான சித்தி
நாடியேதான் மனஞ்செயிக்கும் குளிகை யாகும்
போதசித்தி கண்டாக்கால் வினைக ளேகும்
பொருளில்லை என்றாக்கால் புலம்பு வானே. 103

புலம்பினாலே தான்வருமோ மகத்தாம் சித்தி
பிரித்தந்த நூல்பார்த்தும் பொருளோ காணார்
அலம்பினால்தான் வேதாந்த நூலைப் பாரு
அமிர்தமான யோகத்தி லண்டிப் பாரு
உளம்பினால்ஒண் டிப்பார்வெட் டவெளி யாகும்
ஒதுக்காகச் சொல்லவில்லை மறைப்போ இல்லை
திளம்பினால்தான் ஒருவேதை கணத்தி லாடும்
சிக்கினால்நீர் நுனிமட்டும் தொடர்ந்து போமே. 104

(அ.பொ.) :—அலம்பினால்=அமைதி கெட்டால் ; அண்டி=நெருங்கி ; உளம்பினால்=மனம்திரிந்தால் ; ஒதுக்காக=தனித்து ; திளம்பினால்=நிறைவுபெற்றால்.

தொடராமல் போவதுதா னெதினா லென்றால்
துரிதமாய் ஆயிபதம் துதிக்காத் தாலே
அடராமல் போலதுதா னெதனா லென்றால்
ஆசையென்ற மாயத்தில் அழுந்தி னோர்க்குப்
படராமல் போவதுதான் எதனா லென்றால்
பலப்பலவாம் வேதாந்தம் பாரா தாலே
இடராமல் போவதுதா னெதனா லென்றால்
ஏற்றமான யோகசித்தி யெய்யார் காணே. 105

(அ.பொ.) :—அடராமல்=நெருங்காமல் ; படராமல்=பரவாமல் ; இடராமல்=தடை இராமல்.

சித்தியில்லா மூடரொரு கோடா கோடி
சீரறிந்து பாராத கசடர் கோடி
புத்தியில்லா புகழ்பூணா மூடர் கோடி
பூசைவிட்டுத் திரிகிறதோர் வீணர் கோடி
பத்தியில்லா ஞானமெங்கே என்பார் கோடி
பார்த்துமேதான் பூணாமல் பிறகென் பார்கள்
சத்தியில்லாச் சாங்கமென்றும் பார்ப்பார் கோடி
தரியாமல் போதத்தைப் பாரார் பாரே. 106

(அ.பொ.) :—சீர்=பெருமை ; பூணா=பெறாத ; சத்தியில்லாச் சாங்கம்=உறுதிப்பாடில்லாத சடங்குகள் ; போதம்=ஞானம்.

பாராமல் ஞானத்தில் என்ன தேகம்
பசுமத்தில் பாசத்தில் கணமே தானும்
சேராமல் கண்மூடிப் போதம் பார்த்து
சிவமுற்றும் உறுதியெல்லாம் அறுந்து போச்சு
கூறாமல் மாயத்தில் மனதைத் தட்டி
புகுந்துவல்லோ பார்க்கவுன்னி நற்பி றப்பு
தாராமல் உண்டுடுத்தி சையோ கித்து
சடமான சென்மத்தை தள்ளா காதே. 107

தள்ளவேதா னாகாது நற்சென் மத்தைத்
தவம்செய்து அனேகநாளெ டுத்த சென்மம்
தள்ளவேதா னாகாது ஞானம் புக்கு
சடத்தோடே மூன்றுலகம் சாதித் தாடு
தள்ளவேதா னாகாது அதனால் பிறவி
சமர்த்தாக ஞானத்தில் தனித்து வுன்னி
தள்ளவேயா காதுகாய சித்தி பண்ணு
தவறாமல் யோகத்தைக் கண்டு தேறே. 108

உண்ணவேதான் என்றாக்கால் உண்ணப் போமோ
உகந்துமேக விட்டுறையத் தன்னா லுண்ணும்
தெண்ணவேதான் மனமொன்றில் தேறப் போமோ
செகச்சால மொழிந்தாக்கால் தேற லாகும்
அண்ணவேதா னாங்கார மாற லாமோ
ஆணவந்தா னற்றாக்கால் கர்வம் போகும்
மண்ணவேதான் மனமாறில் மாறு வரனோ
மாயத்தால் பாசமெல்லாம் மாறுந் தானே. 109

(அ.பொ.) ஆங்காரம்=சினம் ; ஆணவம்=செருக்கு.



தானென்ற பாசமற்றால் பிரம ஞானம்
தனியான பதியில்நில் பரம போகம்
நேனென்ற நேசமற்றால் நிர்வி கற்பம்
நினைவழிந்தால் நிராதார மான தாகும்
நானென்று அற்றதல்லோ குணத்தின் வீதி
நல்வினைத்தீ வினையிரண் டுநாச மாகும்
கோனென்ற குருவானோர் குருட்டை நீக்கி
கூடல்கண் டகுறிபோல் கூர்ந்து பாரே. 110

(அ.பொ.) :—நிர்விகற்பம்=பேதமற்ற நிலை ; நினைவழிந்தால்=மனம் குவிந்தால்.

காணவேநீ எல்லாந்தான் கண்டு தேறி
கலங்காமல் லட்சியத்தைக் கருதி யுன்னி
ஊணவேதான் உண்டுடுத்த தெல்லாம் பொய்யாம்
ஒன்றுமில்லை வெட்டவெளி யொக்கு மொக்கும்
பூணவேபி றவிவந்து வாய்க்கா மல்தான்
பிடுங்கிடவே வாதாரம் புக்கி யேறு
மூணவேமொண் டிறைக்குமே கசலம் போலே
முளைக்குமே பிறவியென்ற பிறப்பு தானே. 111

பிறவியைத்தான் முளையிலேயே பிடுங்கிப் போடு
பிலத்துமேதான் வேருணில் பிடுங்கப் போகா
மறவியைத்தான் மழைதன்னில் படர்ந்த கூற்றை
வாசனைதான் வந்துசுற்றி மாய மெய்தும்
துறவியைத்தான் பெண்மாய்கைச் சுற்றிக் கொள்ளும்
சுருக்காக முலைபார்ப்பார் தளுக்கைப் பார்ப்பார்
பிறவியைத்தான் பாசத்தால் மரிக்க னன்றோ
பாங்கான ஞானத்தில் பரிந்து கூடே. 112

(அ.பொ.) :—பிறவியை=(இந்த) சென்மத்தை ; மரிக்கல்=சாகச் செய்தல்.

## ஔபலப் பாடாணத் தோற்றம்

பரிந்துதான் ஔபல பாடாணந் தானும்
பாங்காக உற்பத்தி யெங்கே யென்றால்
திரிந்துவுமே திரிபுரத்தில் தகனம் பண்ணும்
சிவன்தானும் திருவாலங் காட்டின் முன்னே
பரிந்துமேதான் மாலீலா விலாச மாகி
பாண்டவ நாட்டியமாகி வாது தன்னால்
வரிந்துவட வாக்கினிபோல் கொடூரக் காளி
வாதுக்குச் சிவனோடே யாடி னாளே. 113

ஆடியதோ ராட்டையெல்லாம் சிவன்தான் பார்த்து
ஆலமரந் தான்கீழே விசுவ ரூபம்
வாடியதோர் வலதுபதம் தரையி லூன்றி
மாசற்ற இடதுபதம் உயரத் தூக்கி
நாடியதோர் நடனந்தான் பண்ணப் பட்ட
நடனத்தை யனைவோரும் தரிசித் தார்கள்
கூடினதோர் மகிழ்ச்சிமிகத் தான டைந்து
கூற்பாடு கொடுரகா ளியைத்தான் கேளே. 114

காளிமிக வெட்கமது தான டைந்து
கடிந்துமே பிரளயகாலாக் கினியே போலே
கூளித்தாயும் பெருமூச்சை வெளியே காட்டி
கோபமாய்த்தான் ஔபலமாய் ருதுவாய்ப் போனாள்
சூளியம்மை ஆலகால நஞ்சைப் போலே
சுரந்துமேதான் மலையடியிற் பரந்து போச்சு
வெளியான ஔபலத்தில் வந்த தாலே
வெட்கியேதான் மலைதோறும் படிந்து போச்சு. 115

(அ.பொ.) :—பிரளயம்=அழிவு ; பரந்து=பரவி.

## ஔபலப் பாடாணத்தின் செய்கைகள்

படிந்துமேதான் ஔபலப் பாடாண மாச்சு
பத்திரமா காளியின்தன் ருதுதன் னாலே
கடிந்துமேதான் கறுப்பென்றும் சிவப்பே யென்றும்
கனத்துமேதான் மெழுகூர்ந்து அவிழ்த மாகும்
திடிந்துமதை சிவப்புக்குள் திலதம் பண்ணி
சென்னிதன்னில் வைத்துமதை யிட்டுச் சென்றால்
இடிந்துமேதான் இரும்பான கதவெல் லாந்தான்
எற்றினாலே திறந்துபோகும் கண்டு கொள்ளே. 116

(அ.பொ.) :—திலதம்=திலகம்=நெற்றியில் இடும் பொட்டு (குறி); சென்னி=தலை; இங்கு நெற்றியையும் குறிக்கும் ; எற்றினால்=இடித்தால்.

திறந்துபோகும் கறுப்பேதான் செம்பில் வேதை
திறமாக வாயிரத்திற் கொன்றே போதும்
கறந்துபோகும் எள்ளளவு பாவி லுண்ணு
கற்பாந்த காலமெல்லா மீண்டுண் டாகும்
இறந்துபோகும் இளமையெல்லா மீண்டுண் டாகும்
ஏற்றமாகும் என்னாளும் பாலை யாவான்
பறந்துபோகும் ககனமதி லண்ட மெல்லாம்
பாரேழுஞ் சுற்றியேதான் திரிய லாமே. 117



(அ.பொ.) :—கற்பாந்த காலம் = பிரமனுடைய ஆயுட்காலம்; பாரேழு=ஏழு கண்டங்கள் கொண்ட உலகு ; பிசகு=குற்றம் ; தப்பு ; பாலை=இளையன்.

திரிவார்கள் நாதாக்கள் இருடி சித்தர்
சேர்ந்துமேதான் நீங்களெங்கே காணப் போரீர்
பிரிவார்கள் இனங்கண்டு சேர்ந்து ஆடில்
பிசகாகிப் போகாது யுகாந்த கல்பம்
அறிவார்கள் மணியாலே யகண்ட வீதி
அசக்கினாலே யசையாது விட்டால் நீளும்
பரிவார்கள் இகழ்ச்சியெல்லாம் நீக்கிப் போட்டு
பரிமான போதத்தி லிருந்து வாழே. 118

வாழ்ந்தாக்கால் சிவயோகி சித்த னாகும்
வாழாட்டால் கடைகெட்ட நாய தாகும்
ஆழ்ந்தாக்கா லாக்கினியா லுண்ணு முண்ணும்
அப்பவேதான் சிவனுடல் விட்டுப் போனால்
தாழ்ந்தாக்கால் பின்னுமிந்த சடமுண் டாமோ
தருக்கியேதான் நில்லாமல் புக்கி யேறு
மாழ்ந்தாக்கால் வாக்குதன்னால் மனது தன்னால்
மகத்தான பூரணத்தில் மருவி டாயே. 119

(அ.பொ.) :—தாழ்ந்தக்கால்=தாழ்ந்து வணங்கி வேண்டினக்கால்;

மருவியே காணவென்றால் சிவனைப் பூசி
மகத்தான வைந்தெழுத்தை மவுன மோது
உருவியேதான் காணவென்றால் வாமம் நில்லு
உச்சரித்து வஸ்துவுடன் சுற்றிக் கொள்ளு
மருவியேகாண வென்றால் ஞானவழி கூடு
பாங்காகத் தலங்கண்டு சிவத்தி னின்று
நருவியேகா ணவென்றால்பார்த் துண்ணு வாசி
நலக்கமாக விட்டாக்கால் ஞானம் நீச்சே. 120

(அ.பொ.) :—வஸ்து=(பரவஸ்து) செம்பொருள் ; சுற்றிக்கொள்= ஆழ்ந்து பற்றிக்கொள்; நலக்கம்=சோம்பல்; நீச்சே=(நீத்தே) நீங்கியது.

ஞானந்தான் நீச்சென்று அருள் தான் செய்து
நாதாந்த நிர்க்குணமே மகனே கேளு
மோனந்தான் நாலுவண்ண நீச்சர் கண்டோம்
முயற்சியாக வாதவித்தை யாடி னார்கள்

னந்தான் சொன்னாரே என்ன மாயம்
இகழ்ச்சியாய்ச் சொல்விடுமோ வேதந் தானும்
ஆனந்தான் வாச்சென்று சொல்லு வார்கள்
அவருடைய கிரிகையெல்லாம் அறிந்து கொள்ளே. 121

கிரிகையெல்லாம் பார்மைந்தா பொதுவாம் பூசை
கேட்டதுமே வாமமவன் கூடச் செய்வான்
மரிகையிலே மறிந்துசென்று வாசி பார்ப்பான்
மனமுவந்து ஞானத்தின் வழியிற் செல்வான்
இரிகையிலே இதைவிட்டால் பின்னொன் றெண்ணான்
ஏழையான பொய்வாதி ஒன்று மில்லை
சுருகையிலே சிரங்குகொண்டு வறுமை கொண்டு
சுத்தியேதான் ரசதோடம் மாளு வானே. 122

(அ.பொ.) :—ரச தோடம்=இரத்தத்தாலேற்படும் நஞ்சுக் குணம்.

## சிவன் விந்தாகிய சூதத்தைக் கட்டவேண்டுமேயொழிய சுடக்கூடாது சுட்டால் நரகமெய்தும்

மாளாமல் இருக்கவென்றால் சொல்லக் கேளு
மகத்தான சூதமென்ன சிவனின் விந்து
கேளாமல் இதைச்சுட்டால் நரக மெய்தும்
கெட்டியா யிதைக்கட்ட சொர்க்க மெய்தும்
தூளாமல் கெந்தியது பரைக்கு நாதம்
சுட்டாக்கால் ரவிகோடி நரகங் காணும்
வேளாமல் உபரசங்கள் கார சாரம்
வெந்தாக்கால் கடைத்தேறான் துரோகி தானே. 123

(அ.பொ.) :—பரை=பராசக்தி.

தானாக இதையறிந்து வல்லோ ரெல்லாம்
சமர்த்தான குருசொல்ல வறிந்து செய்வான்
ரனாக இல்லாட்டால் நூவின் செய்வான்
இடும்பாகச் செய்யார்கள் நல்லோர் கண்டாய்
வானாக வஸ்துவுண்டு உமையைக் கேட்பார்
வல்லமையாம் சிவயோகி இருடி சித்தர்
தானாக சோமப்பால் உண்டு பார்ப்பார்
சத்தான ரசவாதம் சித்தி யாமே. 124

(அ.பொ.) :—நூவின்=நூல்வழி; இடும்பு=மிடுக்கு; சோமப்பால்=சோமன்=சந்திரன் (இது சிதாகாசத்தில் காணும்) ; பால்=அமுதம்.



## சாலங்கப் பாடாணத் தோற்றம்

சித்தியான சாலங்க பாடா ணந்தான்
சிறப்பாக உற்பத்தி சொல்லக் கேளு
உத்தியாக தேவேந்தி ரனாயு தத்தால்
மலையெல்லாம் சிறகறிந்து வீசிப் போட
மத்தியான மைநாகப் பருவ தந்தான்
மகத்தான கீழ்க் கடலில் தானி ருந்து
பத்தியாக பறந்துமேற் கடலில் தானும்
பயந்தொளிக்கில் வியர்வையும்தான் பரந்த தன்றே. 125

(அ.பொ.) :—தேவேந்திரன் ஆயுதம்=குலிசம் (வச்சிரப்படை).

பரந்துமேதான் மலைதோறும் நிலத்தின் கீழே
பட்டவிடம் சூரியனின் கிரணம் தங்க
கரந்துமேகாய்ந் துதான்பூமி மலைகள் தோறும்
கபடியாய்சா லாங்கப்பா டாண மாச்சு
துறந்துமேதான் இதையெடுத்துச் சுருக்குப் போடு
செம்பான நவலோகத் தீந்தா யானால்
சுறந்துமேதான் பத்தரைதான் ஆணிக் கொக்கும்
சூட்சத்தில் காயசித்தி யாகும் பாரே. 126

(அ.பொ.) :—கரந்து=மறைந்து; பத்தரைதான் ஆணிக்கொக்கும்=பத்தரைமாற்று ஆணிப்பொன்னுக்கு ஒப்பாகும்.

## அம்பாளைப் பூரிக்க வாதமுதல் கற்பம்வரை சொல்வாள்

பார்க்கவெல்லாம் சித்திக்கும் சிவயோ கிக்கும்
பரிவாக காயசித்தி பண்ணி னோர்க்கும்
மார்க்கவேம னோன்மணியாம் சத்திக் குத்தான்
மனதானால் மார்க்கத்தில் வாத மீவாள்
சேர்க்கவேதான் சிவயோக வழியும் சொல்வாள்
சுற்றுதற்கு குளிகைதந்தும் ஆடச் சொல்வாள்
மூர்க்கவேதான் ஞானவழி இதுதா னென்பாள்
முத்திக்கு வித்தான சித்துத் தாயே. 127

(அ.பொ) :—பரிவாக = அக்கரையோடு ; மனதானால் = உளம் கனிந்ததானால் ; குளிகை=கமனக்குளிகை.

தாயான பராபரியை நித்தம் போற்றி
சத்தையாக முத்திபத்தி வேணு மென்றால்
சேயான சிவன்தனையெப் பொழுதும் போற்றி
செகமெல்லாம் சுற்றுதற்கே ஆசை யானால்

தீயான மேனியில்குண் டலியைப் பாரு
தீயதைப்போல் பளிச்சென்று சிறந்தே யோங்கும்
ஓயாத திசைநாதம் குருவைக் காணும்
உயர்ந்தேதான் மதியமிர்தம் உண்டி டாயே. 128

(அ.பொ.):—சத்தையாக—(சிரத்தையாக)=மிக்க அக்கரையோடு.

மதியமிர்தம் முண்டாக்கால் சித்தி யாகும்
மாசற்ற பொற்சிலைபோல் தேக மாகும்
புதியமிர்தம் உள்ளவரை பனிரெண் டாண்டு
பாங்காக இருக்கையிலாம் ஞான சித்தி
துதியமிர்தம் தென்கடலும் வடக்குங் காணும்
சிறந்தமகா மேருவுக்கு வடக்கே போகும்
நதியமிர்தம் உண்டவனே ஞான சித்தன்
நாட்டினுல் சித்தரோடு யோகி யாமே 129

யோகியென்றும் சித்தரென்றும் வாதி யென்று
முரைக்கிறதோர் மகிமைவந்த உறுதி கேளு
பாகியென்ற சிவன்விந்தைக் கட்டி னுலே
பதிவான மூவருக்கும் கீர்த்தி யாச்சு
நேதியென்ற புத்தரென்றும் முத்த ரென்றும்
நேரான அவர்களுக்கு வாத சித்தி
போகிபுத்த சமணரென்றும் வேறே யென்றும்
போற்றியே ஆயியைத்தான் பூசிப் பாரே. 130

ஆயியைத்தான் பூசிப்பார் கோடி சித்தர்
அகமான பொற்பூவால் யோகி யாவர்
ஆயியைத்தான் போற்றியேவா சிப்பா ரப்பா
அனுதினமும் மெய்ஞானி யோகம் செய்வார்
மாயையைத்தான் தோத்தரித்து ஆயிப் பாலை
மகிழ்ந்துகொண் டலகிரியின் கண்டத் தேத்து
மாயையைத்தான் சோடசமா முபசா ரத்தாலே
வருந்தவேதான் வாதசித்தி யீவாள் தானே. 131

(அ.பொ.):—அகம்—மனம்; வாசிப்பார்—வாசியோகம் செய்வார்; சோடசம்—பதினாறு.

வாதசித்தி வந்திடவே பூசை பண்ணி
மனதைச்சுத் தசைதன்னி யமாகப் பாரு
நீதசுத்தி முக்குணமே தூய தென்று
நிறைந்ததோர கண்டபரி பூர ணந்தான்



சூதசித்தி வரவேணும் தாயே யென்று
தோத்தரிக்க வாவென்பான் மணிபூந் தாயை
போதசித்தி மனங்கூடிச் சென்றே ஏறு
பிறவியற்றுப் பூரணத்தில் சாரு வாயே. 132

## கர்ப்பரிப் பாடாணத் தோற்றம்

சாரவேதான் கர்ப்பரிப்பா டாணந் தானும்
சாங்கமான உற்பத்தி தன்னைக் கேளு
சூரவேதான் முன்னாளில் முப்பு ரத்தை
முனிந்துமேதான் சிவன்தானும் எரிக்கும் போது
மாரவேம காமேரு பருவ தத்தை
வளைத்துமேதான் வாசுகியை நாணி யேற்றி
ஆரவேதான் அரியைத்தான் கருவி யாக்கி
அரன்தானும் எய்யவேயவ் அம்பு பட்டுப்
பாரவேமுப் புரந்தானே பட்டுத் தீயாய்ப்
பற்றியேன் எரிந்துமேவெண் நீருப் போச்சே. 133

போச்சென்ற மகாமேரு கிரிவில் லாகி
பிநாகமான பாணியென்ற பேரு மாச்சு
கேச்சென்ற கிரியில்நின் றுதூணி சிந்த
கெட்டியாக மலைகளிலே வீழ்ந்த போது
மாச்சென்ற மலைவெதும்பிப் புழுக்க மாகி
மகத்தான கர்ப்பரிப்பா டாண மாச்சு
பாச்சென்ற பசுமஞ்சள் நிறமு மாகப்
பாரமாகக் கட்டியாக இருக்கும் பாரே. 134

(அ.பொ.):—பிநாகம்=வில்.

இருக்குமேக ருத்தவன்தன் வில்ல தாலே
ஏற்றமான கர்ப்பரிப்பா டாண மாச்சு
பருக்குமேதான் பச்சையிலே தூம வேதை
பணவெடைதான் பாலிலுண்ணு பால னுவாய்
சொருக்குமேக லேபித்தால் சரக்கெல் லாம்சாம்
சோர்ந்துமேதான் கல்லாகும் சூதந் தானும்
தருக்கெல்லாம் உசரசங்க ளெல்லாம் செம்பாம்
சாற்றரிது இதன்வேதை தரிக்கு டாதே. 135

(அ.பொ.):—தூமம்—புகை.

கூடாத கர்ப்பரிப்பா டாணத் தாலே
குறுக்கினாலே அந்நூற்றில் எட்டு மாற்று
பாடாத பாதையிதில் கோடா கோடி
பாங்கையெல்லாம் சொல்லுதற்கு என்னால் கூடா
தாடாத தங்கமது செம்பு மாகும்
தாக்கினாலே கொடுஞ்சுருக்கு ஏமச் செம்பு
வாடாத மலையினின்று படிந்த தாலே
மகத்தான உயர்த்தியாக வாத மாச்சே. 136

(அ.பொ.) :—அந்நூற்றில்=(500-ல்) ஐந்நூற்றில்.

வாதத்தில் சுறுக்குப்பா டாண வித்தை
வகையிதற்குப் பெருமைவந்த வீறாப் பென்ன
போதத்தில் சிவனோடு தேவி தானும்
பேராங்க ணூதக்குங் கிலியத் தேவர்
ஆதத்தில் இருடிசித்தர் முனிவர் சிலர்
அசுரயட்ச ராட்சதசு ரர்களோடு
சாதத்தில் சந்திரசூ ரியகோள் நாள்கள்
தரித்திருந்த படியாலே வீறாப் பாச்சே. 137

வீறான நாதமது சத்தி யாச்சு
விரைந்துநின்ற சுக்கிலமுஞ் சிவமே யாச்சு
சேரான பிறப்பதிலே சீவ கோடி
சித்தமுனி இருடியோகி இதனால் தேகம்
கூறான இதுரெண்டும் குவிந்து பார்க்கில்
குறியான வகாரமொன்று சிகார மொன்று
வாரான இவையிரண்டால் வாத மாகும்
வைக்கவிடங் கொள்ளாது வரைந்தி டாதே. 138

வரைந்திடாத வாதவித்தை சிவயோ கிக்கும்
மவுனமான இருடிசித்தர் வாமிக் காகும்
பரைந்திட்ட காயசித்தி பண்ணி னாரே
பாசமுற்ற காமியென்றால் சடத்தைக் கொல்லும்
கரைந்திட்ட காமியென்றால் இங்கி தம்போம்
காரணமர்ம் பிறவியிலே தள்ளிப் போகும்
இறைந்திட்ட ஆணவத்தை யடித்துத் தள்ளி
எழும்பாமல் வாசனையைக் கொன்றார்க் காமே. 139

(அ.பொ.) :—இங்கிதம்=பண்பு ; வாசனை=முற்பிறவியின் விட்ட குறை தொட்டகுறையால் காரணமும் கற்பிதமுமின்றி யெழும் மன வெழுச்சி.



## கற்பாடாணத் தோற்றம்

வாசனையாம் கல்லினுட பாடா ணத்தின்
வகையான வுற்பத்தி சொல்லக் கேளு
தூசனையாய்த் துடுக்கான அசுரன் தானும்
சிவன்தன்னை வெகுநாளாய் அர்ச்சித் தேத்திப்
பாசனையாம் மாவரங்கள் பேறும் பெற்றுப்
பதினாலு உலகோர்க்குப் பயமுண் டாக
பூசனையாம் பூமியைத்தான் வைக்கோல் போலே
போற்றுமேதான் கக்கத்தில் இடுக்கி னானே. 140

(அ.பொ.) :—துடுக்கான=துணிந்த துட்டனான ; பேறு=பதினாறு வகை நற்பேறுகள்.

இடுக்கியேதான் பாய்போலே சுருட்டிக் கொண்டு
எளிதாகக் கடல்தன்னில் ஒளித்துக் கொண்டான்
நடுக்கியேதான் வானோர்கள் திசைக லங்கி
நறுந்துழாயார் விட்டுணுவின் பாதம் போற்றி
நிடுக்கியேநி சாசரன்தான் இரணி யாட்சன்
நிலமெல்லாம் பாய்போலே சுருட்டிக் கொண்டு
கடுக்கியேதான் கடலுக்குள் ஒளித்தா னென்றார்
கண்முன்னே சொல்விடவே பார்த்திட் டாரே. 141

(அ.பொ.) :—நிசாசரன்=இராக்கதன்.

பார்த்திட்டு ஏனமாக உருவெ டுத்து
பாறையைத்தான் உழுதுசீராப் பண்ணிக் கொம்பால்
சேர்த்திட்டு நிசாசரனைக் குத்திக் கொன்று
திரட்டினதோர் பூமியெல்லாம் முன்போ லாச்சு
ஏர்த்திட்ட இரணியாட்சன் சிரசின் ரத்தம்
எங்குந்தான் தெரித்திடவே மலைகள் தோறும்
பூர்த்திட்டக் கல்லாகி நஞ்சா யாச்சு
பேரான மலைதோறும் உண்டு பாரே. 142

(அ.பொ.) :—ஏனம்=பன்றி.

உண்டுமேகல் பாடாணந் தன்னைத் தானும்
உடைத்துமேதான் கட்டியாக வெடுத்துக் கொண்டு
பண்டுமதை முன்போலே சுருக்குப் போடு
பாங்கான மெழுகாகும் பதத்தில் வாங்கி

உண்டுமேந வலோகத்தா யிரத்திற் கொன்று
ஊட்டவேதான் பசும்பொன்னும் உண்மை சொன்னேன்
கண்டுமேதான் காயசித்தி கருங்கல் லாகும்
காயந்தான் கருங்கல்லு தனையொப் பாமே. 143

## ஞானயோகங் கூறல்

ஒப்பான லட்சியந்தான் மும்மூ லத்தே
உன்னியந்த கேசரியை யூணிப் பாரு
கொப்பான கீழ்மூலம் பளிச்சென்று கண்டால்
கூடியுமே மேலாறுங் குப்பென் றுகாணும்
கப்பான நடுமூலக் கண்டம் நின்றால்
கழிகிறதோர் பன்னிரெண்டில் நாலுங் காணும்
துப்பான மேல்மூலப் புருவம் நின்றால்
சோதியான துவாதசத்தின் வழிச்செல் வாமே. 144

(அ.பொ.) :—மும்மூலம்= அடிநடுமுடி என்னும் மூலாதாரம், அநாகதம், சகஸ்ராரம் என்பன.

செவ்வையான வழியோடே வாசிகண் டுதிச்
சிதறாமல் மனதுன்னிக் கருதி யேறு
மவ்வையாக ஏறுமட்டும் மனந்தா னுசான்
மனம்புக்கில் வெளியோடே ஒன்று மில்லை
உவ்வையாக வெளியோடே வொளிதான் கூடும்
உகந்துமேதான் மூன்றுவரைக் கடந்து சென்றால்
தவ்வையான வுன்மணித்தா யங்கே நிற்பாள்
சதாகோடி ரவிமதியாம் காந்திக் கொப்பே. 145

மதியினாலே மயங்காதே மாதாப் போற்று
மனதூணித் தமரோடே சென்றே ஏறு
ததியிலேதான் நின்றந்த அகண்டம் பாரு
தானான தொன்றுமில்லை நீயு மில்லை
எதியினிலே நிர்மலத்தி லடங்கி னாப்போல்
ஏகமாய்நின் றதொன்றுமின் னென்று மில்லை
வழியினிலே விழுந்தாற்போல் மாயா லோகம்
மயக்கத்தை விட்டுவிட்டு மலையி லேறே. 146

## அஞ்சனப் பாடாணத் தோற்றம்

மலையினிலே அஞ்சனப்பா டாணந் தானும்
மருவியேதான் உற்பத்தி மார்க்கங் கேளு
தொலையிலேதான் பூர்வத்தில் சிவனே தானும்
திரிபுரத்தை தகனந்தான் பண்ணும் போது



கலையிலேந கைசெய்யக் கால்தீ தோன்றிக்
கடந்தமுப்பு ரந்தானும் எரிந்து போக
விலையிலேகா டோடுநா டுமலை யெல்லாம்
வெந்துமேதான் மலையுருகித் தாது வாச்சே. 147

(அ.பொ.) :—தகனம்=எரிப்பு ; கால்தீ=காற்றும் நெருப்பும்.

வெந்துமேதான் அஞ்சனபா டாண மாச்சு
விளக்கமாக கணத்துமேதான் கறுத்துக் காணும்
பந்துமேதான் உபரசத்தில் பட்டா லியம்
பாங்கான சூதமது கட்டிப் போகும்
சிந்துமேக சரக்கெல்லாம் ஈய மாகும்
சீரியதோர் நாகத்தைக் கணத்திற் கட்டும்
குந்துமேகொல் லன்பகையால் சாரி யாகும்
கூட்டியேதான் இரும்பிளக் குழைந்து போமே. 148

(அ.பொ.) :—கொல்லன் பகை=கொல்லன் கோவை (அ) ஆகாச கருடன் கிழங்கு ; சாரி=சாரணை ; குழைந்துபோம்=மெழுகாகும்.

## ஞானம் யோகம் கூறல்

குழைந்துமே நந்தியைத்தான் நோக்கு வார்கள்
கூறுன நடுவணையை நோக்கு வார்கள்
பழைந்துமே பந்தியைத்தான் நோக்கு வார்கள்
பார்ப்பவர்கள் சபையைத்தான் மனது ஊணி
தழைத்துதான் ஏறையிலே மனக்கு ரங்கு
தாட்டியேதான் ஏக்கமாய்வா சனையில் பூணும்
புழைந்துமே பொறிதன்னில் மனது ஊணி
பூட்டியதோர் லட்சியமும் கழன்று போமே. 149

(அ.பொ) :—பந்தி = சாப்பாடு போடும் வரிசை ; கழன்று = விடுபட்டு ; சபை=ஆதாரத்தானங்கள்.

கழன்றுமேதான் குரங்கால்லா கிரியை எய்தார்
கலங்கியேதான் பிதற்றுவார் பேயர் கண்டாய்
உழன்றுமேதான் வத்துவுண்டு மனது ஊணி
உற்றுமே போதந்தான் உள்ளே கொள்ளப்
பழன்றுமேதான் எளிதாகப் பரமுங் காணும்
பாடான மூன்றுவரை கடந்து போகும்
மழன்றுமேம னோன்மணியுங் கூடப் பேசும்
மகத்தான ஞானத்தில் புக்க லாமே. 150

(அ.பொ.) :—லாகிரி = (போதைவஸ்து) இங்கு சிதாகாச அமுதபானமாம்.

புக்குமது பூரணந்தான் கூடப் பேசும்
போக்கான மனக்குரங்கு ஏகிப் போகும்
தக்குமதே உடலேதான் கோடி யாண்டு
சாற்றுகின்ற குளிகையைத்தான் வாயில் வைக்க
எக்குமேபார்த் திட்டாலேழு சபையுங் கர்னும்
ஏற்றமாம்ம னேன்மணியைத் தாண்டிப் போகும்
சித்தமேபூ ரணந்தான்நிர் மலமுங் காணும்
சிதையாது சடந்தானும் தெரிந்து நோக்கே. 151

(அ.பொ.) :—சிதையாது=அழியாது.

தெரிந்துமேதான் தீபந்தான் எரியும் போது
திரிகொளுத்தி அவித்துத்தீ பங்கீழ் நோக்கில்
பிரித்துமேதான் புகையோடில் தீபம் பத்தும்
போலவேதான் பூரணந்தான் லகித்துக் கொள்ளும்
பரிந்துமேப ராபரந்தான் கீழே நோக்கில்
பத்தியேஎ டுக்குமது சித்தி யாகும்
அறிந்துமேகு ளிகையோஅப் படியே காணும்
அட்டமாசித் திமுன்னேயுண் டாகும் பாரே. 152

(அ.பொ.) :—லகித்துக்கொள்ளும்=ஒன்றிக்கொள்ளும்.

ஆகுமேதே கத்தில்கத் திநடு வோடும்
அசையாதே பிடித்தவிடம் தேகம் பொய்யாம்
மேகுமேதான் மேனியது கொழுந்து போலாம்
மிக்கான மின்னலைப்போல் மறையும் பாரு
போகுமேதான் அந்தத்தின் முடிவு மட்டும்
பூரணந்தான் வாழ்ந்தபடி முடிவு மாகும்
பாகுமேதான் பாலோடு முட்டி நின்று
பரிந்துமேதான் பன்னிரண்டும் புக்கும் நாலே, 153

நாலோடு எட்டேது சொல்லக் கேளு
நாடியேதான் நால்மூலம் நலங்கி யோடி
பாலோடு பன்னிரண்டு பூவாய் முட்டி
பாய்ந்துமேதான் பன்னிரண்டும் பரிந்து புக்கி
சேலோடு மறிபட்டு நாலும் போனல்
திரிபுரத்தை யொருவருமே யறிந்தி லார்கள்
வேலோடு வேர்முதலும் விளம்பு மென்பார்
வெட்டவெளி பாட்டன்சொல் விளம்பி னேனே. 154



விளம்பினேனே சித்தருக்கு நாலுந் தானும்
மிக்கான பூரணமென் றறிந்து கொள்ளு
இளம்பினது எட்டினுட வகையைக் கேளு
ஏகமாக விரல்தானும் பரம தாகும்
தளம்பினேனே இரண்டுவிரல் சிவம தாகும்
சாற்றினதோர் மூன்றுவிரல் மாயா சித்தி
நாடினதோர் நல்விரல்தான் நாத மாகும்
நலத்தைந்து ஆதிமகா விந்து மாமே. 155

விந்துவாம றுவிரல்தான் சிவமு மாகும்
மிக்கான ஏழுவிரல் மகேச்சுவ ரன்தான்
பந்துவாம்எண் விரல்தான்ருத் திரனு மாகும்
பரந்திந்த எட்டினுலும் சிவன்சஞ் சாரம்
அந்துவாந்தான் இந்தவித வுற்ப னத்தை
ஆருந்தான் அறியார்கள் அறிந்து கொள்ளு
சிந்துவாக சிவன்சொன்ன சேதி யெல்லாம்
தேவிக்குத் தொண்டுபண்ணச் செப்பி னுளே. 156

## கச்சாலப் பாடாணத் தோற்றம்

செப்பவேதான் கச்சாலப் பாடா ணந்தான்
திறமாக வுற்பத்தி சொல்லக் கேளு
கப்பவேதான் கற்பகத்தின் நாட்டோ ரெல்லாம்
கனத்தவர்க ளாகுமந்த அசுரர் கூடி
இப்பவேதான் இந்திராதி முதலெல் லாரும்
ஏகமாக ஒருமித்துக் கூடிக் கொண்டு
நப்பவேந ரைதிரைமூப்புச் சாவில் லாமல்
நலியாமல் எத்தன்மை எனக்கேட் டாரே. 157

(அ.பொ.) :—கற்பகத்தின் நாட்டோர்=தேவநாட்டினர்கள்.

கேட்டுமே திருப்பாற் கடல்க டைந்து
கிளர்ந்தெழுந்த தெள்ளமுதம் பயில வேண்டும்
ஓட்டுமேதான் ஒருமொழியாய்க் கொண்டெ ழுந்து
உயர்ந்தமந்தி ரகிரியையும் வேர்பி டுங்கி
வாட்டுமேதான் வாசுகியை நாணுய்ப் பூட்டி
மந்தரகி ரிமத்தாகக் கடையும் போது
தாட்டுமே சிகரமது தரிக்கொட் டாமல்
சாய்ந்துமே பாதாளம் சென்ற தாமே. 158

(அ.பொ.) :—பயில=உண்ண.

பாதாளந் தனிற்செல்ல அணைவ ருந்தான்
பைந்துழாய் நெடுமுடியோன் தன்பா லேகி
ஆதான பல்லுயிர்கள் அணைவோ ருந்தான்
அமர்ந்தணையே அய்யனேயென் றிரங்கிச் சொல்ல
வேதாளக் கடல்கடைந்தே கிரிபி டுங்கி
மிடுக்காகப் பாதாளந் தனில்போச் சென்ன
பூதலந்த னைக்காத்த வனோடி வந்தே
போனார்தாம் கமடமாகக் கடலிற் றானே. 159

(அ.போ.) :—கமடம்=ஆமை.

கமடமாக லட்சயோச னைநீண்ட தூரம்
கடலுக்குள் படிதலுமே முதுகு மேலே
தமடமாக மந்திரகி ரிமத்தை நாட்டி
ராட்சதரும் தேவருமே எதிரி யாகி
அமடமாகக் கடைந்தும்தாம் அமிர்த முண்டார்
அப்போது ஆமைக்கும் வியர்வை பொங்கிக்
குமடமாய்க்கோட் டம்போல்தி ரட்சி யாகிக்
கொடிதான கருப்புமலைக் கட்டி யாச்சே. 160

கட்டியாய்க்கச் சாலமாபா டாண மாகிக்
ககனமான மலைதனிலே தோன்ற லாச்சு
அட்டியாக அப்போதே அமிர்த சித்தி
ஆயிரத்திற் கொன்றிடவே அதிக வேதை
பட்டியாக பரிசிக்கில் வேதை யாகும்
பச்சைமாலக் கூர்மந்தா னான தாலே
உட்டியாய மிர்தமுண்டு சித்த ரானார்
உண்டிடவே எள்ளளவு காந்த வரையாமே. 161

## மேற்படி பாடாண வேதை

வரையான கச்சால பாடா ணத்தை
வாய்நீரி லுரைத்துமே லோகப் பாண்டம்
தரையாக போரிலேதான் குவித்து வைத்துத்
தடவியதை எருவடுக்கிப் புடத்தைப் போட
அரையாக ஆறவிட்டே எடுத்துப் பார்க்க
ஆயிரந்தான் மாற்றாகும் தங்கப் பாணை
குறையாக லோகமிட்டுக் குறைத்துக் கொள்ளு
கூர்மத்தில் வழிந்துவந்த நஞ்சு தானே. 162

(அ.போ.) :—லோகம்=இரும்பு.



## பஞ்சமூர்த்திகள் ஒடுக்கம்

தானென்று உண்மையாய் ஒடுங்கக் கேளு
தனிப்பிரமன் மாலோடு சேரு வான்பார்
வானென்று மால்தானும் ருத்தி ரன்சேரும்
வண்மையான ருத்திரனும் மகேசன் சேரும்
வேனென்று மகேசுவரன் சதாசிவத்தில் சேரும்
விளங்குசதா சிவன்தான்விந் துவிலொ டுங்கும்
நானென்று விந்துவது நாதத் தோடே
நாதந்தான் சத்தியினில் கலப்பாம் பாரே. 163

சத்திதானும் சிவத்துள்ளே தானொ டுங்கும்
தனித்துநின்ற சிவன்தானும் விராட்டி னில்தாம்
வத்தான விராட்டியன்சிற் பரையில் சேரும்
மகத்தான பரைதானும் பூரணம் நிற்கும்
முத்திதாந்த மர்வாசல் மனோம ணித்தான்
மிக்காக நெருப்பாறு மயிர்ப் பாலந்தான்
சித்திதானே சித்திக்கும் சித்திக் காதோ
தெளிந்துமதை மனமுன்னிப் பார்த்தி டாயே, 164

(அ.போ.) :—விராட்டினில்=விசுவரூபத்தில்.

பார்த்திடவே பாழாகும் பேய்ம னந்தான்
பாங்கான வாசனையும் மடிந்து போகும்
கோத்திடவே மனக்குரங்கும் ஓடிப் போகும்
கொடிதான மனங்கடந்து கண்டம் புக்கிக்
காத்திடவே ஆயிரத்தெட் டண்ட மெல்லாம்
கடுகுபொடி யாச்சுதேதான் கலந்தே பாரு
வார்த்திடவே விராட்டியனும் மாண்டு போனார்
மாண்டவர்தான் உன்னுள்வந் தவழி கேளே. 165

வந்தவழி சித்தரெல்லாம் மாண்டிட் டாரே
மாளாமல் களங்கமற்று நின்றா ருண்டோ
உந்தவழி உற்பவந்தான் உறைக்கக் கேளு
உறுதியான மனோன்மணியா மன்னை வந்தால்
இந்தவழி யீசனுக்கே சக்தி யானால்
இசைந்தசத்தி நாதமாகி விந்து வாச்சே. 166

விந்துவினில் சதாசிவமும் மகேச்சு வரன்தான்
விளங்கியதோர் ருத்திரனும் மாலு மாச்சு
பந்துவினில் பலப்பலவாம் சீவ ராச்சு
பரிந்துமேதான் பிறப்புவழி யெதிரு லென்ருல்
நந்துவிலே நால்விதத்தால் பிறப்பு மாகும்
நடப்பனவும் ஊர்வனவும் பறவை மற்றே
சிந்துவினில் சீவபேத மெல்லாந் தன்னில்
சிறந்திருக்கும் பூரணந்தான் என்று காணே. 167

என்றிருக்கும் வழிகாணப் பாரோ ரெல்லாம்
ஏகமாக நின்ருடும் விந்து நாதம்
கண்டிருக்கும் வைத்திடந்தான் சுருதி கூடி
கடிந்ததுவோர் அடியேது முடிதா னேது
பண்டிருக்கும் கதலிப்பூக் கண்டம் நின்று
படிந்தஇதழ் பதினுருய் நின்று போச்சு
அண்டிருக்கும் நடுமையமா யறுகோ ணந்தான்
அறிந்துகொள்ளு பரத்தினடி இதுதா னுமே. 168

## சீதாங்கப் பாடாணத் தோற்றம்

அடிதானே சீதாங்கப் பாடா ணத்தின்
அடைவான வுற்பத்தி சொல்லக் கேளு
துடியான ராமநாத சுவாமி தானும்
சீதையுடன் லட்சுமணர் வனவா சம்போய்க்
கடியான கானகத்தி லிருக்கும் போது
கண்டுமேசூர்ப் பனகைதான் ராமனைக் கொல்ல
மடியாக மாரீசன் மானு கப்போய்
வருதலுமே சீதைமுன்னே கண்டிட் டாரே. 169

கண்டுமேசீ தையுந்தான்மான் வேணு மென்ன
கனத்ததான வில்லெடுத்து ராம ருந்தான்
மண்டுமேகி மான்பின்னே தூரம் போக
மகத்தான கூவல்தான் லட்சு மணு
விண்டுமேசீ தையாள்லட் சுமணர் தம்மை
விரைந்துமேய னுப்பிடரா வணனும் வந்து
திண்டுமேதேர் மேலேசீ தைதன்னைக் கொண்டு
சீக்கிரமாய் போகையிலே சடாயு கண்டே. 170



சடாயுகண்டு தான்மரித்துப் போகொட் டாமல்
தடுத்துயுத்தம் பண்ணியேகி தரிக்கொட் டாமல்
சடாயுவைத்தான் சண்டையிலே வீசிப் போட்டான்
தக்கான வாளானே இராவ ணன்தான்
சடாயுவிற்கு சீவனது போகொட் டாமல்
செபிக்கவேரா மர்வந்து காணு மட்டும்
சடாயுவேதான் குற்றுயிராய்த் தான்கி டக்கத்
தரியாதே இருவருமே வந்திட் டாரே. 171

(அ.பொ.) :—இருவரும்=இராம இலக்குமணர்,

வந்திட்டு சீதையைக்கா ணுமலேங்கி
வனங்களெல்லாந் தேடியேதான் பார்க்கும் போது
சிந்திட்டு ரத்தமது கிடக்கக் கண்டுத்
திரும்பியேதான் பார்க்கையிலே சடாயு கண்டார்
உந்திட்டு வணங்கினதே சடாயு தானும்
உற்றதுவோர் விவரமெல்லாங் கேட்டுக் கொண்டு
முந்திட்டு சீவனது மோட்ச மாச்சு
முனிந்தரத்தம் மலைதோறும் சிந்தித் தன்றே. 172

சிந்தியதோர் ரத்தமெல்லாம் ரவியில் சுண்டி
சீதாங்க பாடாண மாகிப் போச்சு
பந்தியதோர் சீதையினுல் மரித்த தாலே
பரிநாமம் சீதாங்க நஞ்சு மாச்சு
முந்தியதோர் கூழாங்கல் சிவப்பு போலே
குளிர்ந்ததுமே கனமாகத் தானி ருக்கும்
உந்தியதோர் காரமிட்டு உருக்கி னுக்கால்
உயர்ந்திட்ட செம்புபோலி ருக்குந் தானே. 173

செம்பெடுத்துத் தங்கத்தி லீந்தா யானுல்
சிவந்துமே தங்கமது செம்பு மாகும்
செம்பெடுத்துத் தங்கமான செம்பு தன்னைச்
சிறந்தநல்ல வெள்ளியினிற் சேர்க்கச் செம்பாம்
செம்பெடுத்து மறுபடியும் வெள்ளி சேர்க்கச்
சிறந்துமேதான் பத்துமுறை தொந்த மேறும்
செம்பெடுத்து வெள்ளியினில் நூற்றுக் கொன்று
சேர்த்திடவே பத்தரைதான் சிவந்த பொன்னே. 174

பொன்போலே களங்கற்றுப் பூர ணந்தான்
புரையற்று நின்றவொளி போதந் தானும்
நின்போலே களங்கற்றுப் பெண்ணைக் காட்டில்
நிகரில்லா வரையற்ற நிற்கு ணந்தான்
முன்போலே மோனமான நிலைய நிந்து
முனைநாசி யூடியேகி முயங்கி னாக்கால்
கண்போலே காட்டினிலும் ஊரில் வாழ்ந்தேன்
கலமான தானமென்ன நாடி டாயே. 175

நாடியேதான் சாவென்ன பிழைப்ப தென்ன
நலமான அண்டமும்வா ருதிதா னென்ன
கூடியேதான் புசழ்பெறக்கண் டதுபொய் யாமோ
பேறான சாங்கத்தால் பொய்யே யென்பார்
காடியேகை யாரக்கண் டதுநான் போமோ
காணாத சமாதியடைந் தார்க்குத் தானும்
மூடியேந டனந்தான்ஊ றாதே ஊண
ஓங்குமே தொனிபத்து மூணிப் பாரே. 176

(அ.பொ.):—வாருதி=வாரிதி=கடல்; தொனி=சப்தம்=ஓசை.

பார்க்கவேதான் மர்க்கடமு மிறந்து போகும்
பாசமாம்வா சனைதான் இல் லாத தாகும்
தூர்க்கமேதான் தூண்டில்சிற் பரையாம் சத்தி
சுடர்க்கோடி பானுபோலே ஒளியு மாகும்
காக்கவேதான் கைகடந்த வெளியைப் பாரு
கண்டவெளிக் கடியில்லை முடியு மில்லை
மூர்க்கவேயவ் வெளிக்குத்தான் தோற்ற மில்லை
முடியில்லை படியில்லை முயன்று பாரே. 177

(அ.பொ.):—மர்க்கடம்=(மனக்)குரங்கு.

முயன்றுமே விராட்டியன்றன் மனமும் பொய்யாம்
மீறியதோர் மனந்தன்னால் உயர்த்தி யாச்சு
மயன்றுமே மனந்தானும் மாறிக் கூடி
மாயத்தேகி மருவியேதான் உலர்ந்து போச்சு
நயன்றுமே மனந்தன்னால் போத மாச்சு
நிலையான கருணைக்குள் வாழ்ந்தார் சித்தர்
உயர்ந்துமேதான் உன்மனித்தா யழைத்திட் டானே
உயர்ந்ததோர் விட்டகுறை யாலு மாச்சே. 178



ஆச்சென்ற பெரியோர்கள் மவுன மாவார்
அட்டமாசித் தியெல்லாந்தா னாடு வார்கள்
மாச்சென்ற பெரியோர்க்கே எதிரி யில்லை
மகத்தான பிரம்மமாகத் தானி ருப்பார்
பேச்சென்ற பிரம்மவிசா ரவேதாந் தங்கள்
பிரம்மவிசா ரத்தையேதான் பேசும் நூல்கள்
பாச்சென்ற பிரம்மவிசா ரத்தைப் பேசும்
பதினெட்டு புராணத்தின் பாங்கு தானே. 179

(அ.பொ.)—அட்டமாசித்தி=அணிமா, மணிமா, லகிமா, கிரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பனவாம்.

பாங்கான பிரம்மவிசா ரத்தின் பேற்றைப்
பரிந்துமேதான் போற்றறியார் சமயத் தோர்கள்
மாங்கான மாயத்தி லழுந்தும் மாந்தர்
மாசற்ற பிரம்ம நிலை யறிந்தி டார்கள்
ஆங்கான ஆணவவேர் பிடுங்கா தார்கள்
அறியார்கள் அறிவுள்ளோர் அறிந்து காண்பார்
தேங்கான இந்நூல்தான் பார்க்கும் பேர்கள்
தெளிந்துமேபி ரம்மநிலை யறிவார் பாரே. 180

## இன்னின்ன சரக்குகள் இன்னின்ன தேவதைகட்குச் சமானமெனல்

பார்க்கவேரு தந்தானண் டத்துக் கொக்கும்
பாங்கான துருசதும னோம ணித்தான்
காக்கவேசா ரமதுவிராட் டியனுக் கொக்கும்
கரிசித்த சத்தியது தானாங் காரம்
தார்க்கவேக ரசநிமிளை பறியி ணங்கன்
சமனாகப் பகுந்தரைக்க சிவமா குந்தான்
பூக்கவே கற்பூரம் சதாசி வமாகும்
பேரான சவுக்காரம் மகேச னாமே. 181

ஆமென்ற உருத்திரமாய் யொக்கும் பொன்னும்
ஆதியாம்மா லின்விரிவொக் கும்வெண் ணாகம்
கோனென்ற அப்பிரகந்தான் அயனுக் கொக்கும்
புகழ்ந்துநின்ற தேவேந்தி ரன்பூ நாகம்
தாமென்ற சரஸ்வதிம னோசி லைத்தான்
தாளகந்தான் லட்சுமிக்குச் சமானமாகும்
வேமென்ற வீரமது முக்க ணென்று
விரைந்துச ரக்கறுபத் திநாலுங் கேளே. 182

சரக்கெல்லாம் தேவர்கள் பிந்து வாகும்
தரிக்கஇதைக் கட்டினுக்கால் வேதை யாகும்
சரக்கெல்லாம் கட்டியேதான் வேதை யோடில்
சாவில்லை பிறப்பில்லை சாங்க மில்லை
சரக்கெல்லாம் கட்டியேதான் சுன்ன மானால்
சாகாம லென்னாளும் சித்த ராவார்
சரக்கெல்லாம் கட்டியேசெந் தூர மானால்
சாகாம லென்னாளும் இருப்பார் தாமே. 183

## சிலாமத பாடாணத் தோற்றம்

தானான சிலாமதமாம் நஞ்சு தானும்
தரித்ததுவோர் உற்பத்தி சொல்லக் கேளு
கானான காந்தார தேசந் தன்னில்
கண்ணில்லா இருடிதானும் பூத னென்போன்
மானான சிவபூசை பண்ணிக் கொண்டு
மடந்தனிலே தேவியவள் சமைத்துப் போட
பேனான கணவனொடு தேவி கூட
பெலியேற்று உண்டுமேநாள் போக்கி னாரே. 184

(அ.பொ.) :—தேவி=மனைவி ; பெலி=பலி=பிச்சை.

போக்கியேயி ருக்கின்ற வேளை தன்னில்
பின்னொருநாள் பூசைக்குப் பூக்கொய் யலானாள்
நோக்கியே விஞ்சயன்தான் ஒருவன் வந்து
நுணங்கியேதான் அவள்மேலே மைய லாகி
தேங்கியே இருவருந்தான் புணர்ச்சி யாகி
சிக்கலாகி வெகுநேர மிருந்த பின்பு
ஆக்கியேதான் அவசரமாய் மலரைக் கொய்து
அந்தகனும் இருடியிடம் வந்திட் டாளே. 185

வந்திடவேயி ருடிபசியால் வாட்டமாகி
மடந்தையரே இன்னேர மங்கே யென்ன
குந்திடவே மலர்கொய்யப் போனே னென்னப்
பெரும்பசியால் இந்நேரம் வருந்தி னேனே
தந்திடவே இத்தனைதா மதந்தா னென்ன
சவுங்காமல் சொல்லிவிடு ஒளிவில் லாமல்
சிந்திடவே கன்னியவள் பிரலா பித்து
சினத்தொருவன் விஞ்சயன்தான் தீண்டி னானே. 186

(அ.பொ.) :—பிரலாபித்து=அழுது.



தீண்டியேயி ழுக்கையிலே மோகித் தேதான்
சேர்ந்துமே கைகலந்தோ மென்று சொன்னாள்
தாண்டியேதான் சற்றேனும் தரித்தி டாமல்
சடுதியாக மலர்கொண்டு வந்தே னென்றாள்
தூண்டியேநீ தலைமுழுகித் துகிலை நனைத்துச்
சுத்தமாய் மலர்தானும் கொய்தா யில்லை
பாண்டியேயெம் சாபந்தான் பெற்று நீயும்
படுசிலாம தபாடாண மாவென் றாரே. 187

என்றுமேதான் சுத்தமாக மலர்கொய் யாமல்
ஈசனார்க்கு மலரதுதான் கொண்டு வந்தால்
அன்றுமேயா ருந்தான்ப ரிசிக்க லாகா
ஆசையின் விகாரமும் மோகத் தாலே
கன்றுமேதான் காமத்தால் கல்லே யாகி
கனிந்துருகி மதத்தாலே காம முண்டாய்
துன்றுமேதான் சூரியனின் கிரணம் பட்டுச்
சுழகியேதான் சிலாமதப்பா டாண மாச்சே. 188

(அ.பொ.) :—சுழகி=சுண்டி (சுட்கி).

சிலாமதப்பா டாணந்தான் முனிசா பத்தால்
சேர்ந்துமேதான் படுகல்லில் பிறந்த தாகும்
மலாமதப்பா டாணந்தான் விளக்கில் வாட்ட
வந்திடுமே நாரியுட பூப்புப் போலே
நிலாமதப்பா டாணந்தான் கட்டி யாக
நீண்டிருக்கும் நீலகிரி போன்று தானும்
கலாமதப்பா டாணத்தின் ருதுவி னாலே
கலந்தரைக்கச் சூதமது கட்டி யாமே. 189

கட்டியாகச் சூதத்தைச் சாரணை செய்ய
கவனமது அண்டமெங்கும் தாண்டிப் போகும்
கெட்டியாகச் செந்தூரம் பண்ணித் தின்றால்
கெட்டியாகச் சாங்கவரை உடலி ருத்தும்
தட்டியாம்ந வலோகமாயி ரத்துக் கோடும்
நாதாக்கள் இருடிகள்சித் தரோடு மாட்டு
மட்டியாம்வா திக்கிந்த முறையைச் சொன்னால்
மாண்டுமேதான் கோடிநர கெய்துந் தானே. 190

நரகெய்தும் ரவிகோடி காலந் தானும்
நாடியேதான் வறுமையால் தியங்கி நிற்பார்
துரகெய்தும் சொர்க்கமும்ந ரகமும் கேளு
தீனியான மணந்தன்னில் கிருமி போலே
விரகெய்தும் மாண்டிடுவார் நரக மாகும்
வித்தார கோபத்தால் சென்ம மாச்சு
நரகெய்தி சென்மந்தான் செனித்தல் பாபம்
சாந்தமில்லாக் கோபமெல்லாம் பாவ மாச்சே. 191

ஆச்சென்ற சொர்க்கத்தின் வழியே தென்றால்
அசடில்லா மானிடராய்த் தான்பி றந்து
பாச்சென்ற பராபரத்தை நோக்கி னாக்கால்
பாங்கான தவத்தாலே சொர்க்க மெய்தும்
மூச்சென்ற முன்ஞான மெய்ஞா னத்தை
முனிந்திட்டு மிகமகிழ்ந்து மகிழ்ச்சி யாலே
வாச்சென்ற வாதத்தில் முறைதான் கெட்டு
உயர்வான முன்னோர்க்கு வைத்திட் டேனே. 192

வைத்திட்ட குளிகையோடு ஞானந் தானும்
மாசற்று வொக்குமதே யோகிக் குத்தான்
மூத்திட்ட சொருபமென்ற குளிகை தானும்
முதற்றரமாங் குளிகையதன் சூட்சங் கேளு
பைத்திட்ட இரண்டாந்தி றமூன்றுங் கேளு
பரிவான கமலினிபாம் குளிகை யாகும்
நைத்திட்ட நாலாந்தி ரவட்ட சித்தி
நலித்தஞ்சா திறந்தான்கா மினியு மாமே. 193

ஆமேயா ருந்தரந்தான் போகக் குளிகை
அடுத்தவேழாந் திறந்தான்வின் ணோருங் குளிகை
ஏமேப ரிசனமாம் எட்டாங் குளிகை
இதமாகச் சொன்னவழி எல்லாம் பாரு
ஏமயெட் டுகுளிகையி னிலொன்று நீக்க
ஏழாகுங் குளிகையினிற் கெவுனம் ஏமம்
சோமேதான் சொருபகுளி கைவாயில் வைத்து
துரிதமாகப் பூரணத்தைப் பார்த்தி டாயே. 194

பார்த்திட்டால் தீபம்போல் நிற்குந் தேகம்
பாங்கான கண்டிப்புக் காணு தாகும்
சார்ந்திட்டால் சாயையது தோணு தாகும்
தகத்தான கத்தியது நடுவே யோடும்



ஏர்த்திட்ட நிர்மலந்தான் கர்ப்பூ ரதீபம்
ஏற்றமான பூரணமும் வாவா வென்னும்
தோன்றிட்ட பலப்பலவாம் துன்பம் போகும்
சோதியான காயமது அழியா தாமே. 195

## கார்முகில் பாடாணந் தோற்றம்

அழியாத கார்முகில்பா டாணந் தானும்
அடைவாக வுற்பத்தி சொல்லக் கேளு
அழியாத பதியான ராமப் பெம்மான்
ஆரணியந் தன்னில்சீ தைலட்சு மணரும்
அழியாத ஆரணியம் தனிலி ருக்க
அப்போது லட்சுமணர் கந்த மூலம்
அழியாத பதார்த்தங்கள் தேடிக் கொண்டு
ஆரணியம் தன்னிலேதான் போயி னாரே. 196

(அ.பொ.) :—மூலம்=வேர்.

போயினார்தான் காய்கனிகள் கந்தந் தேடி
போனபின்பு ராமருந்தான் உறக்கம் வந்து
தோயினார்தான் சீதையம்மை மடிமே லாக
தூங்கினப்போ அம்மையுந்தான் ஒருகை கீழே
தாங்கினார்தாம் ஒருகையைமென் தலையின் மேலே
தாள்வருடி ஒருகைதானி ருக்கும் போது
காகினார்கா காசூரன் சீதை யம்மை
கனதனத்தைக் கவ்வியேதான் கொத்தி னானே. 197

(அ.பொ.) :—கந்தம்=கிழங்கு.

கொத்தியதால் குருதியது பீறிட் டோடிக்
குறிப்பான ராமருட முகத்தில் வீழக்
கத்தவேகண் டுவிழித்தே பார்த்த போது
கணைதொடுத்தார் ராமருந்தான் குலத்த னைத்தான்
உத்தந்தான் காகாசு ரனைப் பார்த்து
ஒருவருமே இடங்கொடாம லோட்டி விட்டார்
தித்தவேதி ரும்பிவந்து ராமர் பாதம்
சிக்கவேதான் பிடித்தபயம் செப்பி னானே. 198

(அ.பொ.) :—கணை=பாணம்.

செப்பவேதான் புல்பாணம் பொய்போ காது
சீரியதோர் பாணத்துக் கிரைதான் வேணும்
தப்பியதோர் கண்ணி லொன்று வீயு மென்னத்
தணிந்துகண்ணி லொன்றைத்தான் பாணம் வாங்க

இப்பவேதான் எனக்கென்ன புத்தி யென்று
இணையில்லா காகசூரன் கேட்ட போது
ஒப்பவேதான் ஒருகண்ணனின் மணியே வந்து
உருண்டுமே இருகண்ணி லோடும் பாரே. 199

(அ.போ.) :—வீயும்—அழியும்.

ஓடுமேதா னிரண்டுகண்ணும் தெரியு மென்று
உங்கள்கு லந்தனக்கெல் லாமுன் போலே
வாடுமென காகசூரன் தனக்குத் தானும்
வார்த்தைசொல் லியனுப்பி மாயர் தானும்
தேடுமேகி வாயுபகவன் தன்னி னோடே
செப்பமாக அக்கினியும் சேரக் கூடி
காடுமேன காசேதான் கண்ணைத் தானும்
கண்டுமேதான் நிலத்தில்ப டாதெ டுத்தே. 200

நிலத்திலேவி ழுந்தாக்கால் பூமி பஞ்சாய்
நிலையான சராசரங்கள் பிழையா தென்றும்
பிலத்ததுவோர் மலைதனிலே போட்டிட் டார்கள்
பொடிப்பொடியாய் மலைநொறுங்கித் தூளாய்ப் போச்சு
பலத்திலேதான் காக்காயின் மூக்குப் போலே
கனவயிரக் கம்பிபோல்பா டாண மாச்சு
தலத்திலேக னலோடுவாய் வுதொட்ட தாலே
கார்முகிலாம் பாடாண மாச்சு தானே. 201

கார்முகிலின் பாடாணம் மலையி லுண்டு
கருப்பாகும் வெள்ளியினில் நூற்றிற் கொன்றில்
வேர்முகிதான் கருப்பான வெள்ளி தன்னில்
விரைந்துமேதான் தங்கத்தைச் சேர்த்தா யானால்
கூர்முகிதான் கருப்பாகும் நூற்றுக் கொன்று
குட்டமான செம்புதனி விட்டா யானால்
பார்முகிதான் பத்தாகும் வீச மெடையுண்
பாங்கான கருங்காலி வயிரந் தானே. 202

வயிரமதால் காயமது அழியா நிற்கும்
மாயமில்லை யந்தந்த வண்டந் தன்னில்
தயிலமதால் சித்தரோடு வுறவா குந்தான்
தாக்கான சிறப்புகள்தாம் மெத்த வுண்டு
உயிரமான உவட்டாத வுபதே சத்தின்
உண்மையெல்லாம் சொல்லிடுவார் உயர்வே யாகும்
கயிலமாங்கைத் தலத்தின்க ருநெல்லி போல
கருணையான போதத்தைக் காட்டு வாரே. 203



காட்டுவார்தான் பந்தத்தின் தொழிலுக் கெல்லாம்
கணேசனொடு குருவீசன் வயிர வன்தான்
ஈட்டுவார்தாம் என்தாயார் எழிலாஞ் சத்தி
இவர்களைத்தான் பூசிக்க எல்லா மாகும்
பூட்டுவார்தம் பொன்வேதை மலையு மாகும்
போரான குளிகையது கையில் சிக்கும்
மூட்டுவார்கீழ் மூடருக்கு ஒன்று மில்லை
முத்தியான வாதிக்கு எல்லா மாமே. 204

எல்லாமாம் முத்திபத்தி எய்தி னோர்க்கு
எவ்விடந்தா னிருந்தாலென் பூர்வ மொத்தால்
அல்லாமாம் ஞானத்தில் அணுகி னோர்க்கு
அட்டமாசித் திகண்டால்தான் சிவனு மாவான்
தல்லாந்தான் தவறுது உறுதி காயம்
தனித்துமேம னதுண்ணிப்பூ ரணத்தி லூற்றால்
பல்லாமாம் பத்தியாக பார்த்திட் டாக்கால்
பகலிரவும் அண்டமுநீ யாச்சு தானே. 205

நீயான முப்பாழின் வேர்தா யாகும்
நிச்சயமாய் நவின்றமா சித்து மாகும்
தீயான சித்தர்சேர்ந் தவெளி மூன்றும்
தீர்க்கமான முடிவுமனோன் மணியு மாகும்
தாயான பேரண்ட மேது வென்றால்
தருக்கியேதான் ஆயிரத்தெட் டண்ட மாச்சு
வேயான துடைக்கவேதான் வெறும்பை யாச்சு
விரிக்கவேமே லேழுகீழே ழுலக மாச்சே. 206

ஆச்சுதேதான் மகாகோடி யண்ட மாச்சு
ஆச்சரிய மம்மெய்ம்மைச் சொல்லப் போகா
போச்சுதேதான் பூரணத்தின் முகம ஞச்சு
பேரான முகமனதால் செந்து மாச்சு
தேச்சுதேதான் சித்தமயம் மெத்த வாச்சு
சிறந்ததோர் முகமனதால் மனமு மாச்சு
மாச்சுதேம னோலயத்தா லுன்ன வுன்ன
மகத்தான ஞானமொடு முத்தி யாமே. 207

முத்தியாக புவிதனிலே சொல்லக் கேளு
முழுங்கியே சிவன்தான் சீர ணிப்பு
நித்தியநித் திரையால்நெ டுவீதி யோடல்
நிறையான சையோகம் கொட்டாவி யேக்கம்

அத்தியா வாசியது அதிர்ந்து பாயும்
அறுபதங்கு லழுப்பதங்கு லமாக வோடும்
புத்தியாக புரியட்டம் ஒவ்வொன் ருக
போயியே சீரணித்துப் பிலமும் போமே. 208

(அ.பொ.) :—சீரணித்து=க்ஷீணித்து ; பிலம்=பலம்.

பிலமான பாங்கோடே உள்ளே வாங்கில்
பேரான திருநடனம் பலமுங் காணும்
நிலமான மேலோதான் கீழோ வென்றுல்
நிர்த்தனசபைமூலத்தோ டேதா னின்று
சுலபமான ஆறுதலை முடுகி யோடி
சுழியோடே குருபதத்தில் புக்கி நின்று
அலமான ஆயிரத்தெட் டிதழி னுடே
அணுகிக்கு ருமண்டலமு முட்டி யாடே. 209

(அ.பொ.) :—நிர்த்தன சபை=நடன சபை.

ஆடியேதான் அடிதன்னில் வாசி கட்டி
அகண்டத்தே நீதானும் பார்த்தா யானல்
தேடியேதான் அடிமுடியில் மணிமுன் நின்று
சீக்கிரத்தில் வாவென்பாள் சிறந்த சத்தி
நாடியேதான் மனந்தானும் அளவாய்ப் போச்சு
நலங்காமல் நடுவெழுத்தின் நாட்டம் பாரு
பாடியேதான் பார்த்திடுமே அகண்டந் தன்னில்
பருவாக மேவிழுக்கும் போதந் தானே. 210

## அப்பிரகப் பாடாணத் தோற்றம்

போதமான அப்பிரகப் பாடா ணத்தின்
புகன்றிடவே பெருமைமெத்த பிறப்பு தானும்
வேதமான சிவன்தானும் முன்னு ளில்தான்
மிக்கவன கங்காளப் பைரவ னுகி
நீதமாம்தா ருகாவனத்தில் இருடி தேவி
நிலைத்துநிற்கும் வீதியில்போய் பலியேற் றுண்ணக்
கீதமான இருடிதேவி கண்டு மோகித்துக்
கடுமூச்சு விட்டெறிந்து ஆசித் தாளே. 211

(அ.பொ.) :—ஆசித்தாள்=அடுத்தாள் (ஆசரயித்தாள்).



ஆசிக்கச் சிவன்தானும் அதிச யத்தை
ஆத்தாள்தான் கண்டுவெகு மோக மானுள்
வீசிக்க வீரியந்தான் கலித மாச்சு
வீரியமே வாகாச மதில்தம் பித்து
பாசிக்க வப்பிரகப் பாடா ணமாகி
பரந்துமேதான் பூமியினில் தான்வி ழுந்து
தாசிக்க மலைதோறும் பாடா ணந்தான்
சாங்கமாக வுற்பத்தி யாச்சு தானே. 212

(அ.பொ.) :—கலிதம்=(ஸ்கலிதம்) விடுபடுதல் ; ஒழுகுதல். தம் பித்து=செயலற்று ; பரந்து=பரவி.

சாங்கமாக அப்பிரகப் பாடா ணந்தான்
தாயார்தன் நாதத்தில் பிறந்த தாகும்
பாங்கமாக சூதமது இதிலே சொக்கிப்
பரிசிக்கில் பொன்னுகும் பண்பு மெத்த
தேங்கமான சூதமது கட்டிப் போகும்
சீருமல் கரியினின்று திரண்டே ஆடும்
தாங்கமாக சாரணைக்காம் குளிகைக் காகும்
சஞ்சரிக்கும் பதினுன்கு வுலகந் தானே. 213

(அ.பொ.) :—சஞ்சரிக்கும்=சுற்றும் ; திரியும்.

உலகமெல்லாம் ஒருநொடிக்குள் சுற்ற லாகும்
உன்மணிந்தாய் பதந்தன்னில் மேவப் பண்ணி
உலகமெலாம் மேருகிரி வலமாய் வந்து
வடகடலும் தென்கடலும் மருவ லாகும்
சலகமெலாம் லோகத்தின் மேலே தட்ட
சாங்கமாகப் பத்தரையே தப்பா தாகும்
கலகமெலாங் காயசித்தி கற்பாந் தகாலம்
கண்டுமேநீ இருக்கலாங் கருத்தாய்த் தானே. 214

(அ.பொ.) :—சாங்கம்=முற்றும்.

இருக்கவேதான் மறுவண்டக் கூறு காண
ஏறினேன்தான் ஏகந்தீ தரிக்கக் கூடா
தரிக்கவேதா னவ்வண்டந் தன்னை விட்டுத்
தனியொவ்வோர் அண்டத்தில் பாய்ந்து பார்த்தேன்
அருக்கவேய தன்மேற்காம் ஒன்றி லேதான்
அதட்டான சித்தர்கள் உலாவ லுற்றார்
தருக்கவேதான் அவர்மேனி தங்க மொக்கும்
மகிழ்வுற்றெ ணைப்பார்த்து வாவென் றுரே. 215

வாவென்றுர் சித்தருட இடமெங் கென்றுர்
மகத்தான சித்தாலே பாய்ந்தீ ரண்டம்
காவென்ற முத்திபுத்தி காய சித்தி
கருதியேநீ பார்த்தநூ லேதோ வென்றுர்
தேவென்ற சித்தர்களே சொல்லக் கேளும்
சிவன்தானும் என்தாய்க்குச் சொன்ன மார்க்கம்
போவென்ற ஏழுலட்சம் என்று சொல்லி
பின்னையொரு அண்டத்தில் புகுந்திட் டேனே. 216

புகுந்திட்டேன் மறுவண்டந் தன்னில் தானும்
பேரான சித்தர்கள் வெகுகூட் டங்கள்
புகுந்திட்ட வவர்மேனி மணிகள் போலாம்
உலாவியேதான் நிற்கையிலே அணுகிப் போனேன்
பகுத்திட்ட சித்தர்கள் யாரென்று கேட்டார்
பாட்டரென்ற திருமூலர் பேரன் யான்தான்
திகித்திட்ட போகமுனி என்று சொன்னேன்
தியங்கியேயி டங்கொடுத்து இருமென் றுரே. 217

இருமென்றுர் வத்துசுத்தி அமிர்த முண்டு
இருக்கின்ற வேளையிலே போக ரேநீர்
தருமென்ற சாரணைதான் எதனுற் செய்தீர்
தாண்டியதோர் மணியினுட பேரே தென்பீர்
துருமென்ற அட்டமாசித் தியதி லுண்டோ
சொருபமோதான் கமலினியோ என்று சொல்லும்
உருமென்று உண்டெண்ணீர் மாத்திரை தன்னில்
உரமேதான் பிறக்கவெனக் கேட்டிட் டாரே. 218

(அ.பொ.) :—உரம்=வலிவு.

பிறக்காது பறிக்குருதான் பிலக்கா விட்டால்
பெருமையாம்சூ தத்தில்தொந் தணையில் லாகுல்
பறக்காது சார்வரியாய்ப் பாங்கி ஞலே
பண்பான குளிகைக்கு மிடுக்கோ வில்லை
மறக்காது சாரணைதான் சொல்க வென்றுர்
மாசற்ற பறிதானும் ஆயி ரமாற்று
தறக்காது ரத்தினம்நா லாத்தீ யுண்டு
நலமான வுபரசங்கள் வர்ணந் தானே. 219

(அ.பொ.) :—பறி=தங்கம்.



வர்ணத்தில் சத்தெடுக்க வகையுஞ் சொல்லி
மாசற்ற குளிகைக்குச் சாரணை மார்க்கம்
விர்ணத்தில் விடுவிக்கும் வகையுஞ் சொல்லி
விந்தையான பறிக்குருவை விளக்கம் பண்ணி
அர்ணத்தில் சித்தரையே அனுப்பிக் கொண்டு
ஆறுவரை தாண்டியேய திசயங் கண்டு
நர்ணத்தில் நடனவொலி செவிடு பட்டுப்
நாதாந்தத் தாய்பதத்தை நாடி னேனே. 220

நாடியேமீண் டும்தன்பிள் ளைகட்குச் சொல்லி
நம்மைப்போ லாக்கிவைத்து பிள்ளை யெல்லாம்
கூடியேதான் கொங்கணர்க்குப் பட்டங் கட்டி
குறிப்பான கருவூரான் தன்னைத் தானும்
நீடியே சமாதியினில் அருகே வைத்து
நெருப்பாரும் வாசியிலே நினைவை யுன்னி
பாடியேப ரமனைப்போல் சமாதி புக்கி
பன்னிரண்டு காலாலே பரவி னேனே. 221

## வெள்ளைப் பாடாணத் தோற்றம்

பரவியேதான் வெள்ளையென்ற பாடா ணத்தின்
பாந்தமான வுற்பத்தி சொல்லக் கேளு
திரவியே சிவன்தானும் மேரு கிரியில்
தேவர்கள் புடைசூழ விருக்கும் போது
கரவியேபி ரமனுந்தான் வந்தா ரப்போ
கயிலையுறை சிவன்மனதில் கோபம் வந்து
அரவியேஐந் துதலைசிர சில்லொன் றைதான்
அடியோடே கிள்ளிவிட்டார் அரனும் தானே. 222

அரன்தானும் அயன்சிரசு வொன்றைக் கிள்ள
அச்சிரசு கைதனிலே வொட்டிப் போச்சு
பரனுமேதான் பலியேற்று விரத தர்மம்
பாங்கான சுடலையில்வெண் ணீறு பூசிக்
கரன்தானும் கங்காள உருவ மாகிக்
காசினிதா னெங்குதலை யோட்டி விரந்து
உரன்தானும் வாயினிலே போட்டுக் கொண்டு
ஓட்டிலேதான் நாள்தோறும் ஊனுண் பாரே. 223

உண்டுமேதான் காசிதனில் வந்த போது
உதரவேபி ரம்மசிரம் நீங்கிப் போச்சு
பண்டுவமா யெப்போதும் போலே வாச்சு
பலியேற்று உண்டதொரு சிரத்தி னேட்டில்
கண்டுமேரத் தமதுமலை தோறும் சிந்தி
காய்ந்ததுதான் ஓடுபோல்பா டாண மாச்சு
விண்டுமேகி வெள்ளையென்ற பாடா ணந்தான்
வெளுப்பாகக் கட்டியாக ஆச்சு தானே. 224

வெளுப்பான பாடாணந் தனைய ரைத்து
வெடியுப்பு நீராலே துருசிக் கிட்டால்
வெளுப்பான சுண்ணும்புப் போலே யாகும்
வெளுப்பெடுத்து தாளகத்தின் மேலே போட
வெளுப்பாகுந் தாளகந்தான் சலவை யாகும்
மிக்கான சலவையைத்தான் கெந்தி மேலே
வெளுப்பாகும் மேல்பூச சலவை யாகும்
வெளுப்பாகும் அறுபத்து நாலுந் தானே. 225

(அ.பொ.) :—சலவை=வெள்ளை; வெண்மையாக்குதல்.

அறுபத்தி நாலான பாடா ணத்தின்
அடங்கலான வைப்புமுறை செய்த லெல்லாம்
அறுபத்தி னுலான தாதின் பண்பாம்
அதற்கதற்கு இனச்சேர்க்கை கட்டி னங்கள்
அறுபத்தி னுலுனுட வேதை மார்க்கம்
ஆராய்ந்தே அடியேன்தான் அறிந்த மட்டும்
அறுபத்தி னுலான குணபா டங்கள்
அடங்கலாய்ச்சொல் லிவிட்டேன்பா டாணம் முற்றே. 226

## உபரசங்கள் (120-இன்) பெயர்கள்

முற்ருன உபரசநூற் றிரண்டு பத்து
முன்னியேதான் உற்பத்தி முறைமை சொல்வேன்
பற்ருன பாட்டரடி தலையில் வைத்து
பணிமுனிதன் புலிமுனிதன் பாதம் போற்றி
அற்ருன காலாங்கி ஐயர டிபோற்றி
ஆதரித்து எனையாண்ட முனியோ கிக்கும்
சிற்ருன மூவிருகால் தெண்டம் பண்ணி
செப்புகிறேன் உபரசத்தைத் திறந்து தானே. 227

(அ.பொ.) :—பணிமுனி = பாம்பு(க்கால்); முனி (பதஞ்சலி);
புலிமுனி=புலிப்பாணி (வியாக்கிரபாதர்); தெண்டம்=வணங்கி.



திறந்துமேசி வன்சொல் லாகக்கேட்டு
சித்தமகிழ்ந் தெனையாண்டு சிந்தை கூர்ந்து
மறந்துமேதான் போகாமல் மைந்தன் தன்னை
மாயிசொன்ன படிகேட்டு வரைந்தே னுனும்
இறந்துமேபோ காமல்சித் தர்ம யமாக
ஏழையாம்போ கரென்றநந் நாமந் தன்னை
சிறந்துமேபோ காமலெல்லோ ரும்பி ழைக்க
செப்புகிறேன் எழுகாண்டந் திறமாய்த் தானே. 228

திறமான வுபரசநூற் றிரண்டு பத்து
திறந்திட்டேன் கறந்தபடி தீர்க்க மாக
உறமான வுபரசங்கள் துருசி யொன்று
உத்தமமாம் பொன்னிமிளை முதல்த ரந்தான்
எறமான ஏமாட்சி கமென்று பேரு
இரண்டான திரங்கஞ்ச நிமிளை யாகும்
நறமான ரசிதமாகும் நிமிளை யோடு
நவலோக நிமிளையோடு அருணன் தானே. 229

தாமென்ற நிமிளையது நான்கு மாச்சு
தனிப்பண்பு அப்பிரகம் நாலு மாச்சு
ஏனென்ற ஏமாப்பி ரகத்தி னேடு
ஏற்றகிருஷ் ணுப்பிரகம் அருணன் சுவேதம்
ஊனென்ற இந்நாலில் நாலுந் தானும்
உற்பத்தி மதாந்திரமாய் பிறவி பாரு
பூனென்ற பிநாகவப்பி ரகமே யென்றும்
பெருமைநாகம் பிரகமது பேருந் தானே. 230

(அ.பொ.) :—மதாந்திரம்=கொள்கைபேதம்.

பேரான மண்டூக வப்பி ரகமும்
பலத்தவச் சிரவப்பி ரகம்நாலு மாச்சு
காரான காந்தமது ஐந்து மாகும்
கல்காந்தம் ஊசிபிடி காந்தத் தோடும்
மாருன மயிர்க்காந்தம் பச்சைக் காந்தம்
மகத்தான அரக்கான காந்த மைந்து
சீரான சிலாசத்தும் இரண்டு மாகும்
திணியான கற்பூர சிலாசித் துமாமே. 231

சத்தான கோமூத்ர சிலாசத் தோடு
சிலாசத்து விரண்டு விதங் கல்நார் ரெண்டு
முத்தான வெளுத்தகல்நார் பச்சைக் கல்நார்
முனையான ரெண்டுவிதக் கல்நா ராகும்
சத்தான சாத்திரமாம் பேதி யோடு
தளுக்கான கல்மதமும் தனித்தொன் றுகும்
நித்தநீலாஞ் சனந்தானை வகையே யாகும்
நேர்ந்தநீலாஞ் சனந்தான்ர சாஞ்ச னமாமே. 232

ஆமேபுட் பாஞ்சனமும் சவ்வீ ராஞ்சம்
அறிந்தசிரோ தாஞ்சனமும் ஐந்து மாச்சு
தாமேதான் கருங்கல்லு படிகக் கல்லு
தனத்ததோர்நல் சுக்கான்கல் யீரக் கல்லு
நாமேதான் ராசவர்தனம் இரண்டு மாகும்
நலத்தராச வர்த்தனம்ரா சன்னி யவர்த்தம்
தேமேதான் கருடபட்சி ஐந்து மாகும்
செங்கருட பட்சியோடு பால்க ருடனும். 233

பாலான கருடனோடு மஞ்சள் கருடன்
பாங்கான கறுவர்ணக் கருட னுகும்
மாலான மேனியான் கருட னோடு
மகத்தான கருடப்பட்சி ஐந்து மாச்சு
ஏலான ஓடுசெங்கல் எலும்பு மயிர் நண்டு
இசைந்தநத்தை நாகரவண் டுக்கி ளிஞ்சல்
ஊலான ஆமச்சி யாமை முட்டைத் தோலும்
உரமான யானையின்தன் கொம்பு மாமே. 224

கொம்பான பன்றியின்தன் கொம்பு மாகும்
கொடிதான கலன்கொம்பு ஆட்டுக் கொம்பு
வம்பான மாட்டினுட கொம்பு தானும்
மலினமான பூநாகம் மனிதர் பல்லு
தெம்பான செவ்வட்டை இந்திர கோபம்
சிதைந்ததோர் கோழிநெஞ்சைத் தவளை யோடு
கம்பான கரடிநகம் முத்துச் சிப்பி
கருக்கான சங்கோடு பவழம் முத்தே. 235

முத்தோடு வயிரமாம் பச்சை தானும்
முகிலான நீலமொடு புட்ப ராகம்
மத்தோடு கோமேதகச் சிவப்பு மாகும்
மாங்கோடு வைடூரியம் கெண்டக மாஞ்சிலை



சித்துருடா லைக்கற்கள் தேக்கல் மாக்கல்
செயமான மஞ்சள்கல் தவளைக் கல்லாம்
மத்துசிலா வங்கலன்ன பேதி யுடன்தான்
மருவுமத்தி பேதிசொர்ண பேதி தானே. 236

(அ.போ.) :—சிவப்பு=மாணிக்கம்.

பேதிமாங்கி சபேதிஉவர் மண்கல் சிட்டம்
பேரான கருமணல்தான் செம்ம ணலுமாம்
சூதியாஞ் சுத்தமண் ணும் முடவாட்டுக் கால்தான்
சுகீதமாங்க ருவண்டுபன் றிமுள்ளு மாகும்
ஏதியாள விமுள்ளுகடல் நுரைமீ னெலும்பு
ஏற்றமுள்சங் குபேரோச னைத்தா னுகும்
நாதியாம்நா கப்பச்சை மரகதப் பச்சை
நலத்தபுத்தான் பழந்தானும் நாடிப் பாரே. 237

நாடியதோர் கழுதைவண்டு வெள்ளைச் சுக்கான்
நலக்கீதக தண்டோடு காகசிலை யாகும்
காடியகாண் டாமிருகம் கடுத்த மாசி
கத்தூரி எலும்போடு மந்தாரச் சிலையும்
மாடியதோர் கடல்பாசி மாங்கிச மாஞ்சிலை
மாசற்ற தன்சாலக் கிராமத் தோடு
காடியதோர் மாந்தளிர்க்கல் காசுமீர் படிகம்
கல்காவி செம்புமணல் நாக மணலே. 238

மணலான வங்கமணல் ஈய மணலே
மாசற்ற வெள்ளிமணல் ஏம மணலாம்
தணலான லோகமணல் மயிலி னிறகு
தரித்திருந்த திருக்கைமுள்ளு வெள்சி லையுமாம்
கணலான கானக்கல் குருந்தக் கல்லும்
கனமான ரசிதசிலை யேம சிலையாம்
நணலான நாகசிலை வங்க சிலையாம்
தலத்தவீயச் சிலையயச்சி லையுமா குமாமே. 239

சிலையான திராச்சிலையும் வெங்கலச் சிலையும்
சேர்ந்தபித்தளைச் கிலையும்செம் புனுட சிலையும்
வலையான வுபரசநாற் றிரண்டு பத்தும்
வாய்ப்பேச்சாம் வாதியெங்கே காணப் போருன்
திலையான சித்தர்கள் குளிகை யாலே
தேசமெங்கும் சஞ்சரித்துக் கொண்டு வந்து
தலையான சத்தெடுத்துச் சாரணை தீர்த்து
சாங்கமா யாடிடுவார் யோகி தானே. 240

தானான வுபரசநூற் றிரண்டு பத்தும்
சாங்கமாகப் பேர்பிரித்து யானும் சாற்றி
மானான வுபரசத்தின் சத்து மார்க்கம்
மகத்தான செந்தூரம் களங்கு சுண்ணம்
ஊனான குளிகைக்கு வூட்டும் மார்க்கம்
உயர்ந்திட்ட காயசித்தி ஏமமாகும்
பானான பார்த்தபடி சொல்லிப் போட்டேன்
பரிவாகச் சித்தர்மெத் தப்பலுக் கத்தானே. 241

## வெடியுப்புச் செய்நீர்

பலுகவேதான் வெடியுப்பு பலமும் நூறு
பழம்புளிதான் எழுபத்தைந் துபல மதாகும்
விலுகவே பழச்சாறும் இருபத் தைந்து
விதைவிழாது வடிகட்டிப் புளியில் விட்டு
நலுகவே மைபோலே தானி டித்து
நாற்காச்சல் உப்பதனைக் கூடப் போட்டு
மிலுகவே மெழுகான பதத்தில் வாங்கி
மெல்லியதா யடைதட்டி ரவியில் போடே. 242

போட்டுமேதான் அடிகனத்த சட்டி தன்னில்
புட்டுமேதான் கொஞ்சமாகப் போடப் பற்றும்
பூட்டுமேதான் பின்னுமந்தப் படியே போடு
பெரிதாகப் பற்றியபின் பிட்டுப் போட்டு
கூட்டுமேகொஞ் சம்கொஞ்ச மாகப் போட்டு
கொளுத்தியெல்லாம் எரிந்த பின்பு சுறண்டி வாங்கி
காட்டுமே கல்வத்தில் பழச்சாற் றாலே
கலந்துமேதான் அரைத்தபின்பு பூநீறு பத்தே. 243

பூநீறு பலம்பத்துக் கூடப் போட்டுப்
பெலத்தரைத்து வகலிலிட்டுக் கெசபு டம்போ
டாநீறு ஆறியபின் கல்வத் திட்டு
அண்டோடு பலம்பத்து வேறே கல்வம்
தேநீறு பொடியாக்கிப் பழச்சாற் றாலே
சிக்கெனவே தானரைத்துத் தெல்லு போலே
காநீறு காயவிட்டுக் கரியிட் டுதே
கடுங்காரச் சுண்ணமாம் கூடப் போடே. 244



கூடவிட்டுப் பழச்சாற்றா லரைத்து மைபோல்
கூசாமல் அகலிலிட்டுப் புடமாய்ப் போடு
நீடவிட்டு எடுத்துமேகல் வத்தி லிட்டு
நேகவேதான் தானரைத்துப் பழச்சாற் றாலே
தாடயிட்டுச் சத்தியென்ற சாரம் பத்து
தாக்கியரைத் தேயகலில் புடமே போடு
சூடயிட்டுச் சீனப்பொரி பலந்தான் ஐந்து
சுழற்றியரைத் தேசுருக்காம் புடமே போடே. 245

(அ.பொ.) :—சீனப்பொரி=பொரித்த படிகாரம்.

சுருக்காக வாங்கியேதான் கல்வத் திட்டுச்
சுழற்றியரை பழச்சாற்றில் நேர்ந்த பின்பு
இறுக்காக இந்துப்புப் பலம்தான் ஐந்து
இசைந்தொன்றாய்த் தானரைத்துப் புடத்தைப்போடு
முறுக்காக வாங்கியேதான் கல்வத் திட்டு
முனிந்துபழச் சாற்றாலே தான ரைத்து
கறுக்காகக் கல்லுப்புப் பலந்தா னைந்து
கலந்தரைத்துப் பழச்சாற்றால் புடத்தைப் போடே. 246

அரைத்துமேதா னாறியபின் கல்வத் திட்டு
ஆண்மையாங்க டல்நுரைதான் பலமு மைந்து
பரைத்துமே பரும்புடமாய்ப் போட்டெ டுத்துப்
பாங்கான சூடனது பலமும் ரெண்டு
மிரைத்துமே மார்க்கமுடன் கலந்து சொண்டு
மேன்மையான நவாச்சாரம் பலமும் ரெண்டு
இரைத்துமேயிம் மூன்றையுந்தான் பழச்சாற் றாலே
இழுத்தரைத்து யேகனாள்முன் மருந்தில் போடே. 247

மருந்திட்டு அரைத்துமேதான் அகலி லிட்டு
மண்செய்து லகுபுடமாய்ப் போட்டெ டுத்து
பருந்திட்ட பாடாணம் சுண்ணாம்பில் சுத்தி
பண்ணியேதான் பலமைந்து கல்வத் திட்டு
விருந்திடு வெள்ளைமந்தா ரைச்சாற் றைத்தான்
விட்டரைக்க மெழுகாம்முன் மருந்தில் போட்டு
தருத்திவிட்டு லகுபுடமாய்ப் போட்டெ டுத்து
தாளிப்பாய் சூட்டுடனே அமுரி தானே. 248

(அ.பொ.) :—அமுரி=(மனிதர்) சிறுநீர்.

அமுரியால் நீற்றியேமீ ருமற் படிக்கு
ஆண்மையாகப் பருப்புபோலு டைத்து நீற்று
பமுரியான பீங்கானில் பரப்பி வைத்துப்
பனியிலேதான் வைத்திடவே செய்நீ ராகும்
திமிரியாம் செயநீரை மிடாவில் கொட்டி
சிறுகவே வீரம்லிங்கம் பூரம் போட்டு
நமுரியான செயநீரால் சுருக்குப் போட
நவாச்சாரம் கட்டியேதான் மெழுகு மாமே. 249

மெழுகாகும் முன்பாடா ணரசி தவித்தை
விளக்கமான ரவிதன்னில் நூற்றுக் கீய
விழுகாமுன் மாற்றதுவும் பத்து மாகும்
மேன்மையாகச் சூதமது மணியு மாகும்
அழுகாமுன் அறுபத்தி நாலுங் கட்டும்
ஆச்சரியம் லவணமது இருபத் தைந்தும்
நழுகாமல் கட்டினமாம் சுண் ணும் பாகும்
நாகத்தைச் சாய்த்திடவே மணியு மாமே. 250

மணியாகும் உபரசங்கள் சத்து மாகும்
மாசற்ற நவலோகம் சவனை யாகும்
திணியாகும் சரக்கெல்லாம் சுத்தி யாகும்
செயமாகும் வீரமது மெழுகு மாகும்
துணியாகும் தூயமாம் எலும்பு போலாம்
துருசுதன்னைத் தோய்த்திடவே குருவு மாகும்
பிணியான தொன்றுமில்லை காயசித்தி யாகும்
பேர்சொன்ன வித்தையெல்லாம் இதனு லாச்சே. 251

வித்தையெல்லாம் வெடியுப்புச் செய்நீ ராலே
விளம்பினேன் மூன்றுமா யிரத்தில் வித்தை
பத்தையாய்ச்சொல் லிவிட்டேன்ப ரத்துக் கொப்பாம்
பணிமுனியார் சொன்னதொரு வுபதே சத்தை
சத்தையாகச் சொல்லாதே இந்தச் சுண்ணம்
தருகுறும்ப வாதிக்குச் சொல்லி டாதே
சுத்தமாகச் சிவயோகி தனக்குச் சொன்னேன்
சூட்சமாக வெடியுப்பு நீரில் தானே. 252

நீரிலேதான் சாரத்தை அரைத்த ரைத்து
நெட்டாங்க மூன்றுநாள்தான் நிசமா யாட்டி
காரினிலே வெங்காரங் கழுவிப் போட்டு
கலந்தரைப்பாய் சாரத்தின் சமனுய்த் தானும்



ணரினிலே மெழுகாகும் பதத்தில் வாங்கி
உயராமல் கவுதாரிப் புடமே போட்டு
பாரினிலே பொடியாக்கிப் பீங்கான் தன்னில்
பரப்பியேப னியில்வைக்கச் செய்நீ ராமே. 253

(அ.பொ.):—கவுதாரிப்புடம்=5 வறட்டி அடுக்கிப் புடம்போடுதல்.

வைத்திட்ட செய்நீரில் வீரம் பூரம்
வளமான லிங்கமது பொடித்துப் போட்டு
பைத்திட்ட பாடாணஞ் சுருக்குப் போடு
பலப்பலவாம் சரக்கெல்லாம் துவைத்து வாட்டு
மைத்திட்ட வுபரசங்க ளெல்லாம் சத்தாம்
மண்ணோடு கல்மயிரும் சத்து மாகும்
உத்திட்ட சரக்கெல்லாம் மொடுங்கி யீயம்
உத்தமமாய்ச் சவனையாயி றங்கிப் போமே. 254

## வாதகுடோரி

இறங்கிடவே வாதமென்ற குடோரி கேளு
இசைந்தவெள்ளைப் பாடாணம் பலமும் நான்கு
தறுங்கிடவே கல்லுப்பு வறுத்தது நான்கு
தாளகந்தான் பலம்மூன்று சூதம் ரெண்டு
கறங்கிடவே காரமொன்று சாரம் பாதி
கடிதான ஆசரந்தான் பலமும் ரெண்டு
விறங்கிடவே வெடியுப்பு நீரி னாலே
விதைமூன்று நாளரைத்துப் பீங்கான் வாங்கே. 255

வாங்கியதைப் பீங்கானில் வறுத்துப் போடு
வளமாகப் பொடிபண்ணி மேருக் கிட்டுத்
தாங்கிடவே வாலுகையின் மேலே வைத்துச்
சமர்த்தாகக் கமலம்போல் தீயைப் போடு
பாங்கினியே பனிரெண்டு சாமந் தன்னில்
பக்குவமாய்ப் பார்த்தெடுத்து வைத்துக் கொள்ளு
தேங்கினியே பதங்கமது இறுகி யேறி
சிறுதேங்கா யுடைத்ததுபோ லிருக்குந் தானே. 256

## திரைசக்காரக் குடோரி

இருக்கவேதான் திரைசாரக் குடோரி கேளு
இசைக்கின்ற வெங்காரம் பலமும் நாலு
தெரிக்கவேப டிகத்தின்பொ ரிதானு மூன்று
சிறப்பான பூநீறு பலமும் ரெண்டு

தருக்கெனவே சாரமது பலமு மொன்று
தனித்ததுவோர் சூதமது பலமும் ரெண்டு
குறுக்கெனவே குதிரைப்பல் பலமும் நாலு
குளியான கல்லுப்பு பலமும் நாலே. 257

பலம்ரெண்டு வெடியுப்பு துருசு நாலு
பாங்கான தாளகமும் பலமும் ரெண்டு
தலம்ரெண்டு பலந்தானும் வீர மாகும்
தளுக்கான வெள்ளையென்ற பாடா ணந்தான்
குலம்நாலு கூடவிட்டு வெடியுப்பு நீரால்
கூட்டியரை நாள்மூன்று பீங்கா னிலிட்டு
வலம்ரெண்டு நாழிகைதான் புகை யாமல்
வறுத்துபொடி மாப்போல் செய்து மேருக் கேற்றே. 258

(அ.போ.) :—வெடியுப்பு நீர்=வெடியுப்புச் செய்நீர் (முறை 242 முதல் ஆறு பாக்களில் காண்க.)

மேருக்கேதான் அரைவாசி போட்ட பின்பு
விதமான வாலுகையின் மேலே வைத்து
பாருக்குப்ப னிரெண்டேசா மந்தி போடு
பதம்பார்த்து ஆறவிட்டு வுடைத்துப் பாரு
தேருக்கு அலங்கார மானுற் போலே
சிறுகம்பி யாயிருக்கும் திசைக்காரக் குடோரி
திருக்கு வுபரசங்கள் சத்து மாகும்
சித்தருடை நூலுக்குள் இல்லை தானே. 259

## வெங்காரக் குடோரி

இல்லையேவெங் காரத்தின் குடோரி கேளு
ஏற்றமாங் குண்டுமணித் தயிலம் வாங்கி
பல்லையென பலகையான காரம் வாங்கி
பாங்காக ஆவெருத்தின் சாணி யாலே
கல்லவேதான் கழுவிநன்றாய்க் காய்ந்த பின்பு
கலந்துமேதான் தைலத்தினில் புழுகு வீரம்
தல்லயேதான் காரத்தின் மேலே பூசி
சாதகமாய் ஏழுநாட்கள் காயப் போடே, 260

(அ.போ.) :—ஆவெருத்தின் சாணி=(ஆ=பசு) பசுவின் கன்றுன எருதின் மலம்; புழுகு=புனுகு.



காய்ந்தபின்பு பூநீற்றுக் குள்ளே வைத்துக்
கடினமான வெய்யிலில் காயப் போடு
பாய்ந்துமே பூநீற்றின் வேகந் தானும்
பதையாமல் கட்டிப்போம் காரந் தானும்
நெய்த்துமேக ருரெங்கெட் டிலொன்று கூட்டி
நிலையான தைலத்தால்தான் மைப்போ லாட்டி
ஆய்ந்துமேதான் செப்புக்குள் வைத்துக் கொண்டு
அப்புறந்தான் சத்திறக்க வீரங் கேளே. 261

## சவ்வீரவைப்பு (சந்திரக்ருவதற்கு)

கேளென்ற சவ்வீர வைப்பு கேளு
கெடியாகச் சுத்தித்த சூதம் எட்டு
தேனென்ற கந்தகந்தான் பலமும் ரெண்டு
சிறிதான ஓட்டிலிட்டு வறுத்துக் கொண்டு
கானென்ற கரியுப்புச் சேரு நான்கு
கனமான வெள்ளையுப்பாய்ச் சட்டி யிட்டு
தூனென்ற இரும்பாலே தெறிப்படங்க வறுத்துச்
சிந்தாமல் செங்கற்றூள் சேரும் எட்டே. 262

எட்டான முன்சொன்ன பொடியுப்புக் கூட்டி
இசைத்துமேன இருதோண்டி யிசையச் சேர்த்து
முட்டோடே மேல்தோண்டி தனக்குள் ளேதான்
மூன்றுதரம் ஊமத்தன் சாறும் பூசி
அட்டோடே முன்பொடிதான் முக்கால் வாசி
அடித்தோண்டி தன்னுக்குள் அமிழ்த்திப் போட்டு
நட்டோடே ரசப்பொடியை யதன்மே விட்டு
நயந்த செங்கல் பொடிக்குறையும் அதன்மேல் போடே. 263

(அ.போ.) :—மூன்றுதரம்=மும்முறை.

போட்டுவழுத் திநன்றாய்மேல் தோண்டி மூடி
பொருந்தவேதான் வெடியாமல் மண்ணைப் பூசி
தாட்டுமேதான் சக்கரமாம் அடுப்பில் வைத்துச்
சாங்கமாக தீமூட்டு நான்கு சாமம்
பாட்டுமேதான் அடுப்போடே யாறப் போட்டுப்
பதறுமல் எடுத்துத்தான் படுக்க வைத்து
நாட்டுமேதான் தண்ணீரால் நனைய வைத்து
நலங்காமல் மேல்தோண்டி மல்லாத்திக் கொள்ளே. 264

மல்லாத்திப் பார்த்தாக்கால் மாப்போல் தானும்
மயிர்க்குச்சித் தன்னாலே சுரண்டி வாங்கி
நில்லாத்தி நிறுத்துமேதான் சேர்தா னென்று
நிலவரமாம் கரியுப்பு பலமு மாறு
துல்லாத்தித் தூள்போலே ஒளிர வறுத்து
துருசுவது பலம்நாலு ஒளிர வறுப்பாய்
புல்லாத்திப் பூநீறு பலமும் ரெண்டு
பொட்டிலுப்பு ஒன்றரைதான் பலமு மாமே. 265

ஒன்றரைதான் பலமாகும் சீனந் தானும்
உயர்ந்தவன்ன பேதியது பலமும் ரெண்டு
தன்னரைதான் சாரமது பொடித்துப் போடு
தாளகந்தான் பலங்காலும் கூடப் போடு
வின்னரைதான் வெள்ளையென்ற பூநீ றுசீனம்
வெடியுப்புச் சாரம்தா ளகந்தன் னைத்தான்
பன்னரைதான் பச்சையாய்ப் பொடித்துப் போட்டுப்
பரவிவிடு சூதமது தன்னில் தானே. 266

தன்னிலேதான் விரவியிட்டு மேருக் கிட்டுச்
சமரசமாய் வாலுகையின் மேலே வைத்துப்
பன்னிலேதான் பகல்மாறு நான்கு சாமம்
பக்குவமாய்க் கமலம்போல் தீயைப் போடு
நன்னிலேதான் இராக்காலம் ஆறப் போடுப்
நலங்காமல் பதினாறு சாம மானால்
இன்னிலேசர்க் கதனைமேரு வின் நடுவேதான்
இட்டாக்கால் இறங்காது பருவ மாச்சே. 267

பருவந்தான் பார்த்ததை யாறப் போட்டுப்
பண்பாகக் குப்பியைத்தான் வெளியில் வாங்கி
தருவந்தான் நனைத்துமண்ணைத் தள்ளிப் போட்டு
நடுப்பாதி குப்பியைநீ உடைத்துப் பாரு
திருவந்தான் மேருக்குள் தேங்காய் போலே
செப்பமாகத் தானிருக்கும் வீரந் தானும்
உருவந்தான் உபரசங்கள் சத்தெல் லாந்தான்
உதட்டியாக தானிறங்கும் உண்மை தானே. 268

## ரசகர்பூர வைப்பு

உண்மைரச கற்பூர மொன்று கேளு
உறுதியாக ரசபற்பம் முன்போல் செய்து
கண்மைதான் காசியென்ற மேருக் குத்தான்
கணத்ததிலே அரைவாசி ரசமா விட்டு



வண்மைதான் வாலுகையின் மேலே வைத்து
மறவாதே பன்னிரண்டு சாமந் தீதான்
அண்ணமாக வாறவிட்டு எடுத்துப் பார்க்க
அடங்கியேதான் வயிரம்போல் கற்பூ ரமாமே. 269

கற்பூரம் சகலநோய் எல்லாந் தீரும்
கால்கைகள் சூலைபுண்கள் கடுகிப் போகும்
உற்பூர வுபரசத்தின் குருவுக் காதி
உயர்ந்திட்ட வேதையிதைக் கட்டி னால்தான்
அற்பூரம் கட்டியாகப் பலமொன்று வாங்கி
ஆண்மையென்ற வெடியுப்பு நீரில் தோய்த்து
வற்பூரம் நால்சாமம் சூடன் தீயில்
வாட்டிடவே கட்டியது சிவந்து போமே. 270

சிவந்திருந்த கற்பூரம் வெள்ளீ யமொன்று
சிறப்பான காரீயம் நாகம் கூட
தவந்திருந்த இதுமூன்றும் சமனாய்ச் சேர்த்துச்
சட்டியிலே போட்டுமேகந் தகத்தால் வறுக்க
கவந்தருந்த கரிபோலே தூளு மாகும்
கணக்காக நாகத்தி னெடையே கந்தி
துவந்திருந்த துத்தத்தை நாகமெடைப் போட்டு
துவளவரை பழச்சாறு தன்னால் தானே. 271

அரைத்துமேதான் சிவந்திருந்த கற்பூ ரத்தில்
அங்கியிடு கற்பூரத் தெடையின் ரெட்டி
உறைத்துமேவு லர்ந்தபின்னு மிப்புடம் போட்டு
உகந்துமேதான் ஆறியபின் கவசம் வாங்கி
நரைத்துமேதான் நவலோகம் நூற்றுக் கொன்று
நாட்டினாலே ஏமமது பத்து மாகும்
கரைத்துமேதான் இக்கவசம் சகலத் திற்கும்
கட்டியேதான் கவசமாகப் போட்டி டாயே. 272

(அ.பொ.) :—அங்கி=கவசம்; சகலத்திற்கும்=எல்லாவற்றிற்கும்.

போட்டிட்ட கற்பூரம் காயசித்தி யாகும்
புகழான குட்டங்கள் கடிவிடம் போகும்
பூட்டிட்ட கால்கைகள்மு டக்கும் போகும்
புருடர்தான் மலடில்லாப் பிள்ளை யுண்டாம்
காட்டிட்ட ககனசித்தி கடிசிலாகும்
கற்பகத்தின் தோடமெல்லாம் கதித்துச் சாடும்
மூட்டிட்ட வாசியது இறுகி யேறும்
முட்கற்பம் புலன்வழியாய் வருகுந் தானே. 273

## சீனவைப்புக் கற்பூரம்

வருகுமேதான் சீனவைப்புக் கற்பூ ரந்தான்
மார்க்கந்தான் சூதமது பலமு மெட்டு
உருகுமேதான் கந்தகமும் பலமு மொன்று
ஒட்டிவிட்டு வறுத்துடனே கரிபோ லாகும்
தருக்குமேதான் வறுப்புவகை சாற்றக் கேளு
தட்டியதோர் எருமுட்டைப் பத்த டுக்கி
பருக்குமேதான் நெருப்பிட்டு விசிறி விட்டால்
பத்தியே எரிந்தெல்லாந் தணல்போ லாமே. 274

தணலிலேவோ டுவைத்துகந் தகத்தைப் போட்டு
சாங்கமாக உருகியபின் சூதம் விட்டு
கணலிலேதான் இரும்பான கத்தியால் கிண்டு
கரிபோலே தூளாகும் இறக்கிக் கிண்டு
உணலிலேதான் ஓடதனைத் தணவிட்டுத் தானும்
உபாயமாக கிண்டியேஇ றுகியபின் தானும்
அணலிலேதான் ஓடுவைத்து இளகியபின் கிண்டு
அக்கினிதான் மிகுந்திட்டால் எரிந்து போமே. 275

எரியாமல் ஓடதனில் அடிப்பற் றாமல்
இளக்கிளக்கிக் கிண்டிடவே கரித்தூ ளாகும்
கரியாமல் கரியுப்புப் பலந்தா றாறு
கல்மிசங்க ளில்லாமல் வெளுப்பாய் வாங்கி
தரியாமல் சட்டியிலே போட்டுக் கிண்டி
தணலாக எரியிட்டுத் தணலி னாலே
விரியாமல் மேல்சட்டி மல்லாத்தி மூடு
வெடித்தாக்கால் தெரியாது கிண்டி டாயே. 276

(அ.பொ.) :—கல்மிசம்=குற்றம்.

கிண்டியபின் தெறிப்படங்கி நின்று தானால்
கீழ்ச்சட்டி தன்னிலே கொட்டி யாற்றி
விண்டியேதான் பொடிபண்ணிக் கல்வத் திட்டு
வெடியுப்புப் பொடிபண்ணு ஒன்றரைப் பலந்தான்
திண்டியேசீ னமதுஒன்ற ரையேப லந்தான்
சிறக்கவேதான் பொடிபண்ணிக் கூடப் போட்டு
தண்டியேசா ரமதுஅரைப் பலந்தான் போட்டு
தகந்துமேதான் பொடியாக்கி யொன்றாய்க் கூட்டே. 277

கூட்டியேதான் ரசந்தானும் கூடப் போட்டு
குலுக்கியேதான் மேருவிற்கு அரைக்கால் வாசி
நாட்டியேதான் நன்மையுள்ள மேரு தன்னை
நலமாக வாலுகையின் மேலே வைத்து



பாட்டியேதான் பனிரெண்டு சாமம் தீதான்
பக்குவமாய் எரியிடவே பதங்க மேறும்
ஆட்டியேதான் ஆறவிட்டு மேலா வாங்கி
அடியிலுள்ள பிட்டியைத்தான் தள்ளிப் போடே. 278

(அ.பொ.) :—பிட்டி=தூள்.

தள்ளியேதான் பதங்கத்தில் பிட்டி கொஞ்சம்
அடியிலேசக் கிரமாய்க்கெட் டியாய்த்தா னிருக்கும்
அள்ளியேதான் பொடிபண்ணி மேருக் கிட்டு
அடியினிற்கும் பிட்டியைத்தான் தள்ளிப் போடு
மள்ளியேதான் வாலுகையின் மேலே வைத்து
மகத்தான பன்னிரண்டு சாமம் தீயால்
பள்ளியேதான் பதங்கமது இறுகி ஏறி
பக்குவமாய் வெளுத்திருக்கும் பாரு பாரே. 279

இருக்கின்ற கற்பூரம் சீன மாகும்
ஏற்றமாக சரக்கிதுதான் கம்பி போலாம்
வெருக்கின்ற வெடியுப்புச் செய்நீர் தானும்
மிஞ்சாமல் நாற்சாமம் சுருக்குப் போடு
கருக்கின்ற முன்கவசம் கட்டிப் போடு
காரியமாம் முன்போலே புடத்தைப் போடு
திருக்கின்ற சிவப்பாகும் ரசகற்பூ ரந்தான்
சிவசிவா யான்தானும் அறிந்தி லேனே. 280

அறிந்திலேனே மாற்றதுவும் பனிரெண் டாகும்
ஆணிஇதுக் கொவ்வாது பசுமை மெத்த
தெரிந்திலேனே மண்டலந்தான் தினமுங் குன்றி
தின்றுவந்தால் பத்தியமாய்ச் சட்டை நீங்கி
மரிந்திலேனே வாலையான மன்ம தன்போல்
மகத்தான காயந்தான் தங்க மேனி
பிரிந்திலேனே கற்பாந்தம் சமாதி விட்டு
பிணிமூப்புச் சாக்காடும் இல்லை தானே. 281

(அ.பொ.):—சட்டை=மேல்தோல்; வாலையான=இளவயதினனான.

## இரச செந்தூர வைப்பு

இல்லையென்ற ரசத்தினுட செந்தூ ரத்தை
எனையீன்ற காலாங்கி செய்யும் வித்தை
தில்லையென்ற நடனம்போல் சுலப வித்தை
சீக்கிரத்தில் செய்கின்ற மார்க்க மாகும்

பல்லையென்ற பலமதிகம் இதற்குள் ளாகும்
பாங்கான சூதமது பலந்தா னெட்டு
கல்லையென்ற கல்லுப்புக் குமரிச் சோற்றில்
கலந்தரைத்துக் கழுவியேதான் காயப் போடே. 282

காய்ந்தபின்பு கல்வத்தி லிதனை யிட்டு
கனத்ததுவோர் பனைமட்டைச் சாற்றி னாலே
தோய்ந்தபின்பு மூன்றுநாட்கள் சோர வாட்டி
சுருக்கிடுவாய் நாற்சாமம் சாறு தன்னால்
வேய்ந்தபின்பு வெடியுப்பு நீர்ச்சு ருக்கு
விடுக்காக நாற்சாம மான பின்பு
சாய்ந்தபின்பு சாரநீர் சுருக்குப் போடு
தயங்காதே நாற்சாமம் சாற்றி டாயே. 283

சாற்றியேதான் காடிவிட்டுக் கழுவிப் போடு
தங்கந்தான் லேசாக தகடு தட்டி
ஏற்றியேதான் எட்டுக்கு ஒன்று போட்டு
இழுத்தரைப்பாய் பனைமட்டைச் சாற்றி னாலே
காற்றினிலே கரைந்துமேதான் குழம்பு போலாம்
கனமாக நால்சாம மரைத்த பின்பு
தூற்றியேதான் கந்தகத்தைக் காய்ச்சிக் கொட்டி
சுயமான சாறுதனில் சாய்த்தி டாயே. 284

(அ.பொ.):—சாறு=பனைமட்டைச் சாறு.

சாய்த்திடுவாய் பதினொன்று தப்பா மல்தான்
சமரசமாய்ப் பலம்ரெண்டு ஒட்டி. லுருக்கி
தோய்ந்திடுவாய் சூதத்தை அதற்குள் விட்டு
சூரியாலே கிண்டிடுவாய் கறுப்புத் தூளாம்
காய்த்திடுவாய் காசியென்ற மேருக் கிட்டு
கனமான வாலுகையின் மேலே வைத்து
ஆய்ந்திடுவாய் அறுசாமம் தீயைப் போட
அருணனைப்போல் சிவந்துசெந் தூர மாமே. 285

செந்தூரம் தனையெடுத்து நவலோகத் தீடு
செப்பாதே ஒருவருக்கும் தொழிலோ மெத்த
கந்தூரம் காயசித்தி அருணன் போலாம்
கதிரொளியோ வென்பார்கள் இவனைப் பார்த்தால்
எந்தூரம் நிமிடத்திற் போலா கும்
இறுக்கமொடு கொட்டாவி சோம்ப லில்லை
உந்தூரம் காலுக்கு வருத்த மில்லை
ஓடலாமே ககனத்திற் சுருக்காய்த் தானே. 286

(அ.பொ.):—எந்தூரம்—எவ்வளவு தூரமாயினும்.



## துருசு குரு

சுருக்கான துருசினுட வளப்ப மெல்லாம்
சொல்லிவிட்டேன் பாடாண வைப்பு தன்னில்
வறுக்கான துருசுவே காரசாரத் தில்தான்
வைப்பதுவும் சொல்லி விட்டேன் உபரசத்தில்
இறுக்கான இதன்கருதான் வெகுசு ருக்கு
ஏழாயிரந் தனக்குள்ளே முதற்ற ரந்தான்
வெறுக்கான துருசொன்று பலந்தான் ரெண்டு
வெள்ளீயம் இருசேரு குகையில் வையே. 287

துருசுக்குச் சிலாசத்துச் சுண்ணச் சீலை
சுற்றியேகா யவைத்துசு யத்தை யுருக்கி
வரிசைக்குப் பதினோரு·தரந்தான் தோய்ப்பாய்
மகத்தான ஊறலூறும் சீலை வாங்கி
தரிசிக்கும் வெடியுப்பு நீரில் ஏழு
சாரநீரில் மூன்றுதிரா வகத்தில் மூன்று
நரிசிக்குத் தோய்த்துமேதான் ரவியில் போட்டு
நல்வீரம் வெள்ளையுரம் புனுகு தானே. 288

(அ.பொ.):—வெள்ளை உரம்=வெண்ணிறமாக்கப்பட்ட கந்தகம்.

புனுகுபச்சைக் கற்பூரம் கெந்திமால் தேவி
பூநீறு கருநாபி குதிரைப் பல்லும்
வனுகுவகை வகைக்குவரா கன்தா னாகும்
வாகான வெடியுப்பு நீரால் ஆட்டி
நுனுகுவகைத் துருசின்மேல் கவசங் கட்டி
துருசான பூநீறுக் குள்ளே வைத்து
நனுகுவகை நாற்சாமம் எரித்தா யானால்
நமனுகும் சரக்கிற்குக் குருவு மாமே. 289

குருவெடுத்து வுபரசங்கள் தன்னி விட்டால்
கொப்பளித்துச் சத்தெல்லா மீய மாகும்
முருவெடுத்துச் சூதத்தை யுருட்டிக் கட்டும்
முதிர்ந்தபால் நீராக முறிந்து போகும்
தருவெடுத்த கற்பகமாம் விருட்ச மாகும்
சாவென்ற நாமமது தெறித்துப் போகும்
திருவெடுத்து முகத்தில்லட் சுமிதான் நிற்பாள்
செப்பரிது செயமான குருவி னாட்டே. 290

## மாட்சிகத்தின் பிறவி

ஆட்டமான மாட்சிகத்தின் பிறவி கேளு
ஆதியாம் விஷ்ணுகிருஷ் ணவ தாரத்தில்
பாட்டான பாதத்தைச் சுசியே பண்ணி
பள்ளிகொண்டார் நித்திரையில் வியர்வை காண
மூட்டான முகவியர்வை தன்னி லேதான்
முயன்றுமேதான் சசிகர்ண யட்சன் தானும்
தாட்டாகத் தானுதித்தான் அவனைக் கண்ணன்
சாந்தமாக அடிக்கரத்தம் கக்கி னனே. 291

கக்கியேதான் பூமிதன்னில் தான்வி ழுந்து
கதித்துநின்று வேப்பங்காய்ப் பிரமா ணம்தான்
வக்கியேதான் மாட்சிகமுற் பத்தி யாச்சு
வைகாசிமா தங்கண்டெ டுக்க வேணும்
நேக்கியேதான் மற்றமாதங் களிலே தானும்
நிசமாகத் தோன்ருது நீங்க லாகும்
ஏக்கியேகும் மாட்சிகந்தா னிரண்டு பேதம்
ஏற்றமாம் பீதகமே சுக்கிலந் தானே. 292

(அ.பொ.) :—பேதம்=வகை.

பீதந்தான் பொன்வண்ணம் பொன்னு டனேவி
பிரிவான சுக்கிலந்தான் வெள்ளி வண்ணம்
வேதந்தான் கட்டியாம்வெள் ளியுடன் தோன்றும்
விளக்கமாக இரண்டுவித மாட்சி கந்தான்
சூதந்தான் மறுசாதி மாட்சி கந்நான்
சுருக்கமாக மதாந்திரவுற் பத்தி யாகும்
காதந்தான் காதம்பங் கார வெல்லம்
கனத்தவயங் குலியகந்தான் மூன்று மாச்சே. 293

## நிமிளைச்சத்தும் தோற்றமும்

மூன்றுவிதக் காதம்பம் கடப்பம்பூ நிறமாம்
முயற்சியாங் காரவெல்லம் பாவற் பழநிறம்
ஆன்றுஅயங் குலியகந்தான் கைவிர லொப்பாம்
அழுத்தாருய் வெளிறினக்கல் லொப்பு வண்ணம்
ஏன்றுமேதான் மூன்றுமபது ஒன்று மாகா
ஏமாட்சி கந்தானும் துவர்ப்புங் கசப்பும்
ஊன்றுமேதான் மதுரமொடு வுறைப்பு மாகி
உஷ்ணமாய் ரசாயனமு மாகுந் தானே. 294

(அ.பொ.) :—உறைப்பு=கார்ப்பு.



## நிமிளைச்சத்து

இருக்கின்ற பொன்னிமிளை பலந்தா னென்று
ஏற்றமான வெடியுப்பு நீரில் தோய்த்து
நருக்கின்ற ரவிதனிலே ஏழு நாள்தாம்
நனைத்துமேதான் போட்டுவர அடிக்க டிக்கு
கறுத்துமேதான் காரமிட்டு ருக்கிப் போடு
களங்கற்றுச் சத்துதான் ரவிதோற் றுப்போம்
கருக்கின்ற குளிகைக்குக் கிராசம் போடு
கண்திறந்து குளிகையது விழுங்குந் தானே. 295

(அ.பொ.) :—களங்கற்று=குற்றமற்று ; கிராசம்=சுருக்கு.

தானென்ற பொன்னிமிளைப் பச்சை யாகத்
தங்கத்தி லீந்தவுடன் நொறுங்கிப் போகும்
வேனென்ற வீரமுடன் புனுகு கூட்டி
மத்தித்து முலைப்பாலால் புடத்தைப் போடு
கோனென்ற குருவாகும் நூற்றுக் கொன்று
கொடுத்திட்டால் திசைமாற்றுங் கூர்ந்து பாரு
தேனென்ற மொழியுடைய சிவகா மித்தாய்
சொன்னபடி வெளியாகச் செப்பிட் டேனே. 296

(அ.பொ.) :—மத்தித்து=அரைத்து.

செப்பிட்ட குளிகைக்குச் சாரணைக் காட்ட
செந்துமேதான் மதியளவும் தொட்டு மீளும்
வெப்பிட்ட வாயில்வைக்க வியாதி யில்லை
விருத்தரது காயம்தான் பாலை யாகும்
கொப்பிட்டக் குளிகையது கோடிக் கோடும்
கூர்ந்துபாசச் சிதானந்தம் தோன்றும் தானே
நப்பிட்ட புரியட்டம் நான்கை யுண்ணும்
நலமான கதிர்முனைக்குக் காத்தா டாதே. 297

(அ.பொ.) :—செந்து=பிராணி ; மதியளவு=சந்திரமண்டலமளவு ; விருத்தர்=கிழவர்.

ஆடாத நின்றவெளி யறிவு தோன்றும்
அடங்காத பூரணமும் கண்டங் காணும்
நீடாத நிர்மலமும் நினைவு வுண்ணும்
நிறையற்ற நிர்க்குணமும் நிறைந்து தோணும்
வீடாத நிராகாரம் வெளியாய்த் தோன்றும்
வேதாந்த முடிவுமட்டும் விரைந்து காணும்
ஏடாத எங்குமெழு கின்ற சோதி
எங்குமாகக் காணுமிந்த குளிகை தானே. 298

(அ.பொ.) :—நிராகாரம்=அருவம்.

காணுவமே ஆணவத்தை நீக்கி வைக்கும்
கருதித்தோர் சங்கல்பந் தன்னைப் போக்கும்
வேணுமேபி றவியெல்லாம் வெந்து நீறும்
மிடுக்கான வாசனையை விரைந்து சாடும்
பூணுமேதான் விந்துவெல்லாங் கல்போ லாகும்
பலத்துமேதான் சடந்தானும் என்றும் வாழும்
தோணுமேவா சியதுமனஞ் செவ்வை யாகும்
சொருபமான குளிகையுட சூட்சந் தானே. 299

## நிமிளைத் தோற்றம்

தானான தேவியைத்தான் சிவனார் பார்த்துச்
சாற்றினார்தாம் நிமிளையதன் தோற்றந் தன்னை
நானான சிவன்தாயா ரிரண்டு பேரும்
நாட்டமுற்று விளையாடப் போன போது
மானான மான்றசீனக் கரையில் தானும்
மண்ணெடுத்து உருட்டியேதான் மடுவில் போட
பானான மடுவில்வுற் பத்தி யாச்சு
பாங்கான நின்மலமாம் நிமிளை தானே. 300

நிமிளைத்தான் சந்திரபிர காசம் போன்று
நிலையில்லா மடுவினிலே பிறந்த தாகும்
திமிளைதான் தேவாதி தேவ ரெல்லாம்
திரண்டுமேதான் அமுதத்தைப் பானம் பண்ண
வமளைதானே வாயிலின்று வமிர்த விந்து
வழுவியேதான் நான்குவகை நிமிளை யாச்சு
நமளைதான் நான்குவகை நிமிளை யாச்சு
நல்பச்சை சிவப்புவெள்ளை மஞ்சள் தானே. 301

மஞ்சளாகக் கட்டியான குளிகை போன்று
வயிரம்போல் தானிருக்கும் நிமிளை தானும்
உஞ்சலாய்உ றைப்புவெம்மை கைப்பு மாகி
உருட்சியான கஞ்சமென்ற நிமிளை தானும்
விஞ்சலான ரசிதமது வெளுப்பு மாகும்
மேலான லோகமது சிவப்புத் தானும்
கஞ்சமான காகமென்ற நிமிளை தானும்
கறுப்புமாக பச்சையாக யிருக்குந் தானே. 302



இருக்கின்ற நிமிளைதன்னைச் சேரு ரெண்டு
எழிலான குன்றிமணி போலு டைத்து
பருக்கின்ற பசுவினுட கோமி யத்தில்
பாங்காகச் சாணியது இளநீர் விட்டு
இருக்கின்ற கோமயத்தில் கரைத்துக் கொண்டு
கொதிப்பிப்பாய் கிழிகட்டி நிமிளை தன்னைக்
கருக்கின்ற கழுவியேதான் காயப் போட்டு
கல்வத்தில் பொடிபண்ணி யுப்பு நீரே. 303

(அ.பொ.) :—கோமியம் = சாணம்; ஆனால் சிறு நீரைத்தான் கொள்வர்.

பொடிபண்ணி வெடியுப்பு நீரி னாலே
பூட்டியரை யிரண்டுநாள்தான் ஆன பின்பு
தடிபண்ணிச் சாரநீரை விட்டு விட்டு
சமரசமாந் திகைகாரக் குடோரி போடு
விடிபண்ணி வெங்காரங் கூடப் போட்டு
மிரளாதே வங்கமென்ற நாளத் தூது
துடிபண்ணிச் சத்தாகும் பொறுக்கிக் கொண்டு
சூட்டியரைத்து முன்போலே ஊதி டாயே. 304

(அ.பொ.) :—திகைக்காரக்குடோரி: செய்முறை; பா. எண் 257 முதல் 259 வரை கண்டுகொள்க.

## சத்ருக்களைச் சாய்க்க மித்திரம்

ஊதியேதான் சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
உயர்கின்ற மித்திரனில் உருக்கிச் சாய்ப்பாய்
மீதியேதான் மித்திரனைத் தானென்றுக் காலே
முதிர்வாழைக் கிழங்கோடு இலுப்பைப் பூவும்
மோதியேதான் சமனாகச் சேர்த்துக் கொண்டு
உடன்வாரு தேன்தானும் எள்நெய் தானும்
ஆதியே ஆட்டுப்பால் நாற்கள் ளிப்பால்
ஓர்சமனாய் அதிலேதான் வார்த்தி டாயே. 305

(அ.பொ.) :—நாற்கள்ளிப் பால் = சதுரக்கள்ளி, திருகுக்கள்ளி, இலைக்கள்ளி, கொடிக்கள்ளி.

வார்த்துமேதேங் காய்ப்பால்நல் லவெல்லந் தானும்
மத்தித்துப் பாத்திரத்தில் வைத்துக் கொண்டு
சேர்த்துமேதான் சத்தெல்லா முருக்கிச் சாய்க்க
திரண்டுவருங் குற்றமெல்லாம் நீங்கிப் போகும்

பார்த்துமேதான் குளிகைக்குச் சத்தும் ஈய
பாங்காக வுட்கொண்டு செரிக்கும் பாரு
நீர்த்துமேதான் உபரசங்கள் மித்திரத்துட் சாய்த்து
நிதானித்துச் சத்துகளை யூட்டி டாயே. 806

சத்துத்தான் சோதனைக ளில்லா விட்டால்
தாக்கான குளிகைக்குச் சாரணைச் செய்தால்
மத்துத்தான் மிஞ்சியேதான் மயக்கித் தள்ளும்
மாசற்றுக் ககனவழிச் சுருக்கோ டாது
பத்துத்தான் பாதாள லோகந் தானும்
பளிச்சென்று திறக்காது பார்வை யில்லை
எத்துத்தான் மேலெழும்ப வேறொட் டாது
எழுந்தாலும் ஏறயிலே இறுத்துங் காணே. 807

இறுத்துமேதான் சத்தெடுத்துத் தங்க மிட்டு
இயலான சூதமிட்டுக் கந்தி யிட்டு
நிறுத்துமேதான் செந்தூரம் செய்து வுண்ணு
சிறுகதிர்போல் மேனியதாம் நூற்றுக் கொன்று
மறுத்துமேதான் நவலோகத் திட்டா யானால்
மாற்றதுவும் பதினாறு வழங்கும் பாரு
நறுத்துமேதான் நிம்லையது நாலுக் குந்தான்
நாட்டமாயிம் முறைபோலே யாகுந் தானே. 808

முறைகளொன்று தப்பாது நூலுக் குள்ளே
முனிந்துமேபார்த் ததெல்லாமட் டவனைக் கொண்டு
நறையலாமசித் தர்கள்தான் பிழைக்க வென்று
நாட்டினேனே ஏழுகாண்டம் தன்னில் தானும்
கறையலான கவ்வெட்டுக் கருவைப் பாரு
காட்டிலேதான் இருக்கின்ற இருடி சித்தர்
வறையாக வாசியோரின் நற்பதங் காண
மார்க்கமதை வரைந்துவைத்தே னேட்டில் தானே. 809

தானென்ற றாலான வெளியி னுள்ளே
தனித்துநின்ற சோதியைப்பார் ஞான சித்தி
கோனென்ற வொன்றாகக் கடந்து கூடுங்
குணமூன்றும் அரையினுள்ளே குவிந்து பாரு
தேனென்ற மொழியுடைய சிவகா மித்தாய்
சிறந்துநின்று கொலுக்காண ஆயிரம் வேண்டும்
வேனென்ற மேலான பதத்திற் சேர்த்து
வேதாந்த முடிவான வெளியில் மேவே. 810



மேவினாலே இருண்டவெளி யல்லக் கேளு
வேதாந்தி விளக்கொளியாய் நின்றாள் பாரு
பாவினாலே இருவருந்தான் ஒன்றாய் நின்று
பளிச்சென்று நிராகாரந் தானே காணும்
காவினால்தான் கண்டுடனே உள்ள முன்னிக்
கலந்துபோகும் வாசனைதான் மாண்டு போகும்
தீவினால்தான் தீபத்தில் விட்டி வீழ்ந்து
செத்ததுபோல் உள்ளுள்ளச் சேருந் தானே. 811

(அ.பொ.) :—வேதாந்தி = உன்மனைத்தவன் ; விட்டி = விட்டில் என்னும் பறக்கும் பூச்சி.

## அப்பிரகந் தோற்றம்

சேருகின்ற அப்பிரக தோற்றந் தானும்
சிறப்பாகச் சொல்லிடவே சிவன்முன் னாளில்
பாருகின்ற மகாமேரு கிரியில் தானும்
பார்வதியுஞ் சிவனுமேயி ருக்கும் போது
நீருகின்ற பாண்டியன்தான் மனம்பு ரிந்து
நிலையாக மகப்பேறு வேணு மென்ன
மாருகின்ற சிவன்தானும் மனம கிழ்ந்து
மனோன்மணியும் பாண்டியற்கு மகளா னாளே. 812

மகளாகி தடாதகையாம் பிராட்டி யாகி
வந்துமேதான் வேள்வி தன்னில் குழந்தை போலே
நிகளாகிக் கிடக்கின்ற பக்கு வத்தில்
நினைவோடே பாண்டியனும் எடுத்த ணைத்து
புகழாகி பொன்னையாக்கி தேவி கையில்
பேராசை யால்கொடுக்க ஆவ லோடே
இகளாகி இரண்டுகையால் தானெ டுத்து
ஏந்தியுமே மடிதன்னில் வைத்திட் டாளே. 813

(அ.பொ.) :—பொன்னையாக்கி=பொன்மாலை.

வைத்திட்ட பரையாதி உலகெலாம் படைத்து
வரையாது காத்தவள்தன் வடிவு வேறாய்
மொய்த்திட்ட மறைகடந்த முதல்வி தானும்
முட்கரமாய் பொறிகடந்த கரண மெல்லாம்
மைத்திட்ட அனந்தவெளி தான்க டந்த
ஆதியாம்ப ரஞானஒ ளியாள்தன் அன்பால்
பைத்திட்ட பாண்டியற்குக் கேளாய் வந்தாள்
பாரேழும் செய்ததவப் பயன்தா னென்னே. 814

(அ.பொ.) :—கேள்=உறவினர்.

பயந்ததோர்நல் பிள்ளைக்கு மூன்று முலையாம்
பாண்டியன்தான் கண்டுமனக் கவலை யுற்றார்
அயந்ததோர்நல் பிள்ளையுட தன்னி யத்தை
ஆனதோர்தன் கொழுநன்வந் துகண்டா னுறல்
தியந்ததோரி ரண்டுதன மாகு மென்று
செப்பினுளே ஆகாய வாணி தானும்
கயந்ததுவோர் கவலையது நீங்கிப் பின்பு
கருதியேதான் வளைத்துமுடி சூட்டி னானே. 315

(அ.பொ.) :—தன்னியம்=முலை.

முடிசூட்டித் திக்குவிச யங்கள் செய்து
முனிந்துமேதான் கைலைக்கேகிப் பின்பு தானும்
புடிசூட்டிப் பாம்பணியும் புலியின் தோலும்
பாங்கான மான்மழுவும் திருவெண் ணீறும்
கடிசூட்டும் முன்னூலுங் கனத்த மார்பும்
காரைவெண்ணீ ரணியுமோர் நெற்றிக் கண்ணும்
மதிசூட்டிக் கருணைசெய்யும் முகமுங் கண்டாள்
மன்றுமேதான் தடாதகையாம் பிராட்டித் தாயே. 316

தடாதகையவள் ஒருமுலைதான் மறைந்து போக
தனித்துமலர் பூங்கொம்பா னொதுங்கி நாணி
நிடாதகையாய் நின்றிடவே சிவன்முன் வந்து
நீதானும் போய்மதுரைத் தன்னி லென்று
விடாதகையாம் நாம்வருவோ மென்று சொல்லி
விடைகொடுக்க சிவன்தானும் அம்மன் போனாள்
படாதகையாய் சிவன் போந்து மணமே செய்யப்
பாண்டிமகள் அதிசயத்தைப் பார்த்திட் டானே. 317

பார்த்திடவே சிவன்தன்னின் சுந்த ரத்தைப்
பார்வதியுங் கண்டுமேதான் விரக மானாள்
ஆர்த்திடவே காமமது மிகுந்து பொங்கி
அந்தருது பூமியிலே படிந்தே ஓங்கி
பூர்த்திடவே வுலகமெல்லாம் ரவியில் சுக்கி
பூமியிலும் மலைதனிலப் பிரக மாச்சு
ஏர்த்திடவே நாலுவண்ணம் நான்கு சாதி
ஏமமொடு சுவேதரத்தங் கிருட்டிணந் தானே. 318

(அ.பொ.) :—விரகம்=காதல் மீறிய நிலை ; சுக்கி=வற்றி (காய்ந்து உலர்ந்து) சுஷ்கி.



தானான நாலுவிதத் தின்பேர் கேளு
தனியேமந் தான்பிநாக மப்பி ரகமாச்சு
மானான அடையாளஞ் சொல்லக் கேளு
மசையாமல் கட்டியாய்த்து ருத்தி யாலூது
வானான மடல்மடலாய் விண்டு போகும்
மகத்தான சூதத்தைப் பந்தம் பண்ணும்
நானான நாகாப்பி ரகவெள் ளையாகும்
நற்பாம்பு சீறலைப்போல் சீறுங் காணே. 319

(அ.பொ.) :—பந்தம்=கட்டு.

சீறுங்கா னூதிடவே சுருண்டு போகும்
சிறக்கவேதான் ஒன்றுக்கு மாகாது தள்ளு
மாறுங்காண் மண்டூக வப்பி ரகங்கேள்
மகத்துவமே தவளையைப்போல் குதித்து வீழும்
தேறுங்காண் சிவப்புத்தேன் வண்ணங் காணும்
சிறக்கவேதா னாகாது ஒன்றுக் குந்தான்
வாறுங்காண் வச்சிரவப் பிரகங் கேளு
மகத்தான வயிரம்போல் தானு மென்றே. 320

என்றதோர் அப்பிரகந் தன்னைக் கேளு
இரட்டையாந்து ருத்திவைத் தூதி னாலும்
அன்றதோர சையாமல் தான்கி டக்கும்
அனலிலிட்டே அப்பிரகப் பரிட்சை பார்த்து
பின்றதோர் பிநாகவப் பிரகம் கட்டும் ரசத்தை
பிரிந்தநாகாப் பிரகம்மண் டூகாப் பிரகம்
உன்றதுவோர் ஒன்றுக்கு மாகா தாகும்
உத்தமமாம் வச்சிராப்பி ரகமே தானே. 321

## கருப்புவண்ண அப்பிரகமும் ரத்தவண்ண அப்பிரகமும் காயசித்திக்கு நல்லது

வச்சிராப்பி ரகத்தில்க றுப்பது நன்மை
மகத்தான காயசித்தி யோக சித்தி
கச்சிராப்பி ரகத்தில்க ருப்பது குணம்தான்
கணக்கதுதான் கோடிகுண மதிக மாகும்
மகத்தான அப்பிரகச் சத்து வாங்கி
தச்சிரதங் கமிட்டுச்செந் தூரித் துண்ணு
சதகோடி ஆண்டெல்லா மிருக்க லாகும்
மச்சரமாம் ரத்தவண்ண அப்பிரகந் தானே. 322

## ஏம அப்பிரகச் சத்து

இருக்கவேதான் அப்பிரகச் சத்து தானும்
எனையின்ற வையர்கா லாங்கி சொன்னார்
பருக்கவேதான் பார்த்துணர்ந்து யானும் சொன்னேன்
பாங்கான நெல்லிக்காய்க் கந்த கந்தான்
கருக்கவேதான் கற்றாழைச் சோறு தானும்
கனத்ததோர்பாண் டத்திற்கால் வாசி யிட்டு
துருக்கவே கிழிகட்டி யதன்மேல் வைத்து
சிறக்கவே மேலுங்கால் வாசி போடே. 323

போட்டுமேதான் நாள்மூன்று யெரிநேர் பாக
பொங்காமல் எடுத்துமதை வைத்துக் கொள்ளு
ஈட்டுமேதான் இரண்டுபத்து பலந்தான் தூக்கி
இழைத்தரைத்து நாள்மூன்று வெடியுப்பு நீரால்
ஏட்டுமேஏ மாப்பிரகந் தன்னைத் தானும்
எடுத்துத்தா னப்பிரகம் பண்ணக் கேளு
நீட்டுமேதான் ரெட்டுக்குள் நெல்லு போட்டு
நெருக்கியப்பி ரகத்தைமைத் தூளாப் பண்ணே. 324

(அ.பொ.) :—ரெட்டு=தடிப்பும் உறுதியும் உள்ள துணி.

பண்ணியேதான் தூள்தன்னை ரெட்டுள் விட்டுப்
பாங்கான தாழியிலே காடி விட்டுக்
கண்ணியேகை யாலேபி சைந்தா யானால்
கழலுமேதான் காடியிலே மாப்போல் தானும்
பிண்ணியேதான் பிசைந்துமதை கரையு மட்டும்
பிலமாக அப்பிரக மான பின்பு
தண்ணியேதான் காயவைத்து இருபது பலந்தான்
சமரசமாய் பிசைந்தும்தான் காயப் போடே. 325

காய்ந்தபின்னே கிழிகட்டி கருங்கொள் ளிற்றான்
கனமாகக் கொள்ளுடே வேக வைத்து
பாய்ந்தபின்பு கொட்டியேதான் காயப் போடு
பாவகமாய் முன்னுரைத்த மருந்திற் சேரு
மாய்ந்தபின்பு திசைக்காரக் குடோரி தானும்
வளமான ஐந்துகாசெ டைதான் போடு
சாய்ந்தபின்சா ரமென்றகுடோ ரிபரைப் பலந்தான்
சவ்வீரம் அரைப்பலந்தான் தாக்கி டாயே. 326



தாக்கியேதான் பூநாகம் இன்னீர் மட்டும்
தனியாவின் பால்தன்னில் போட்டு வைக்க
வாக்கியேதான் மண்ணெல்லாங் கக்கிப் போடும்
வழித்தரைத்து முன்மருந்தி லொக்கச் சேரு
ஆக்கியேதான் வாழையுட் கிழங்கு சாறு
அகத்தியுட பழுப்புச்சாறு சமனாய்ச் சேர்த்து
ஊக்கியேதான் மருந்திலிட்டுக் குழப்பிக் கொண்டு
ஒக்கவேதான் வெள்ளாட்டு குருதி கூட்டே. 327

கூட்டுவது தேன்வெண்ணை குன்றி யோடு
கூறான குதிரையுட குளம்புச் சீவல்
தோட்டுவது சக்கரையுஞ் சன்ன மீனும்
தொகுதியாக வகைக்கைந்து பலந்தான் போட்டு
நாட்டுவது மைப்போலே நன்றா யாட்டி
நலமான ரவியிலைந்து நாள்தான் போட்டு
பூட்டுவது வோட்டிலிட்டுப் பெரும்புடம் போட்டு
புகழான வெருக்குசாறு விட்டே ஆட்டே. 328

ஆட்டுவது ஐந்துபுடம் போட்டெ டுத்து
அடைபோலே தட்டியேதான் காய வைத்து
மாட்டுவது வங்கமென்ற நாளத் தூது
மணியிறங்கும் சத்தெல்லாம் வாங்கிக் கொண்டு
காட்டுவது கறடெடுத்து வாழை நீரில்
கருதியேதான் அடைதட்டிக் காய வைத்து
மூட்டுவது முன்போலே வுருக்கிக் கொண்டு
முத்துப்போல் சத்தெல்லாம் ஒன்றாய்ச் சேரு. 329

(அ.பொ.) :—கறடு=மணியாகாது மிகுந்த கட்டிகள்.

சத்தெல்லா மெடுத்துமேதான் வேறே வைத்துத்
தாக்கான கறடெடுத்து முன்போ லூது
முத்தெல்லாம் பொறுக்கியேதான் முனிந்து வாங்கி
முயற்சியாக ஐந்துமுறை சத்து வாங்கி
கத்தெல்லாம் நொறுக்கியேதான் குகையிலிட்டு
காரமிட்டு வுருக்கியேதான் நட்பில் சாய்ப்பாய்
பத்தெல்லாம் பதினைந்து தரமே சாய்த்து
பாங்கான குளிகைச்சா ரணைதான் செய்யே. 330

செய்துமேவ ரிசையாய்ச்சத் துக்க ளூட்டித்
    தீர்க்கமாக விடுவிப்பாய் குளிகை யைத்தான்
மெய்த்துமேதான் மெழுகுகட்டிக் கிண்ணி வார்த்து
    விதமாக அடித்தூரில் மண்ணைக் கட்டி
வைத்துமேசல் வாலுகையின் மேலே வைத்து
    வரிசையாக கிண்ணிக்குப் பாதி சூதம்
வைத்துமேக ருவூமத்தன் சாறு விட்டு
    விதமாகத் தீயெரிக்க வெண்ணெய் யாமே. 331

வெண்ணெயெல்லாம் வழித்தெடுத்துத் தானு ருட்டி
    விதமாகக் குளிர்ந்ததண்ணீ ரிலே போட
பண்ணயிலே பணத்தூக்கம் பதினொன் ருக
    பாங்காக வுருட்டியதிற் குச்சி யேற்றி
தண்ணியிலே இறுகியபின் னெடுத்துக் கொண்டு
    தனித்துமேதான்:ஆரையிலைக் கவசம் கட்டி
திண்ணியிலே அவிபுடமாய் பதினொன்று போட்டு
    சிறக்கவேதான் லாகிரியைச் சேர்த்து வாட்டே. 332

வாட்டியேதான் சித்தியென்ற மூலி யோடு
    வளமாகத் தேங்காயும் சமனுய்ச் சேர்த்து
ஆட்டியேதான் அப்பிரேகக் குளிகை தன்னில்
    அடக்கமாக கிழிபோலே யமரக் கட்டி
பூட்டியே யாக்குகிறபுகைப் போக்கில் கட்டு
    போகவொரு மண்டலந்தான் கடந்த பின்பு
மாட்டியேதான் வாங்கியதில் மதுவைப் பூட்டு
    மாசற்ற செம்பட்டால் தாவடங் கோரே. 333

(அ.பொ.) :—ஆக்குகிற புகைப் போக்கு=சமையல் வீட்டுப் புகைப் போக்கியில் ; செம்பட்டால்=சிவப்புப் பட்டுக் கயிறு ; தாவடம்=மாலை.

தாவடத்தால் ஐந்தெழுத்தை மவுன மாகத்
    தனித்துமேதான் ஒருசுற்று உச்ச ரித்தால்
காவடத்தால் வாதங்கை கட்டி நிற்கும்
    கைலையுறை சிவன்தாயும் கருணை கூர்ந்து
பாவடமாய்க் கேட்டதெல்லாம் பாலிப் பார்கள்
    பருவமுடன் குளிகையைப்போல் பதின்கழஞ்சு கட்டி
ஊவட்ட மாபால்வ கையை பூட்டின்
    உகந்திருந்த செகத்தம்ப னமும தாகும். 334



தம்பனமாங் குளிகையைப்போல் ஐங்கழஞ்சு கட்டித்
    தரிக்கவேதான் செம்பண்ணச் சுரபி யாகும்
கெம்பனமாங் ககனத்துக் கடுத்த தொன்று
    கெட்டியாக பணவெடையில் குளிகை பண்ணு
சும்பனமாம் சாரணையைத் தீர்த்தா யானுல்
    சுருக்காகக் கொண்டெழும்புங் ககனந் தன்னில்
கம்பனமாம் ரெண்டாகக் குளிகை கட்டி
    கரத்திலொன்று வாயிலொன்று வைத்தி:டாயே. 335

வைத்துமேதான் கந்தியென்ற செம்பி னுலே
    மணிவைக்கக் கிராடங்கள் திருகல் பண்ணி
தைத்துமேதங் கமென்றசரப் பளியில் குணுக்கி
    சங்கிலியில் கோத்துமேகு ளிகைக்குங் குணுக்கி
உய்த்துமேதான் வாயிலிட்டு ஒட்டி னுக்கால்
    ஒன்றுந்தான் கைதவறினுல் ஒன்றெடுத்துக் கொள்ளும்
மைத்துமேதான் மவுனமுன்னி வாயை மூடு
    மகத்தான குளிகையது நாத மாமே. 336

(அ.பொ.) :—குணுக்கி=உண்டையைப்போலச் செய்து அமைத்து.

நாதத்திற் கொடுஞ்சுருக்காய் ககன மோடும்
    நாட்டமுற்றுக் கீழ்நோக்க வாசி ரேசி
கீதத்தில் வாசிவிட்டால் கீழே போகும்
    கிளம்பாமல் தம்பித்தால் மேலே யோடும்
போதத்தில் மனமுன்னில் பேச லாகும்
    புதந்துமேதான் அண்டத்தில் போகும் போது
வாதத்தில் மனதைவிட்டுக் கும்பித்துக் கொள்ளு
    வரையாறுந் தாண்டியேதான் மருவ லாமே. 337

(அ.பொ.) :—வரையாறு=ஆருதாரம்.

மருவியேதான் அண்டத்தில் சித்த ரோடே
    வாதாடி வென்றுமேதான் வாதஞ் சொன்னேன்
தருவியேதான் சாரணைக்கு வழியுஞ் சொன்னேன்
    சாத்திரத்தில் கருவெல்லாம் தரிக்கச் சொன்னேன்
உருவியெல்லாம் பாதாளந் தன்னில் போக
    உற்பனமாம் மந்திரமும் வகையுஞ் சொன்னேன்
திருவியேதான் சித்தருக்குக் குளிகை யீந்து
    திரிந்திட்டேன் ஆயிரத்தெட் டண்டந் தானே. 338

ஆயிரத்தெட் டண்டமெல்லாஞ் சோதித் தேறி
அவரவர்கள் அறிந்தவித்தை தன்னை யெல்லாம்
பாயிரத்தோ டேவகைகள் பார்த்த றிந்து
பக்குவமாய்ச் சித்தருக்குப் பலிக்க வைத்து
தாயிரத்து நாகலோகந் தன்னின் நடக்கை
தானெல்லாம் அறிந்தும்தான் தொண்டு செய்து
வேயிரத்து வெகுவித்தைக் கேட்டுக் கொண்டு
மீண்டுவந்து பிள்ளைகட்கு விளம்பி னேனே. 839

விளம்பினேனே சித்தருக்காய் வித்தை கற்று
மேதினியெ லாந்திரிந்து அண்டஞ் சுற்றி
பளம்பினேனே பாதாளம் தன்னில் சென்று
பாரேழுந் தான்சென்று பழக்க மாகி
அளம்பினேன் கால்வித்தை அரைக்கால் வித்தை
அவரவர்க்குத் தொண்டுபண்ணி அனுச ரித்து
புளம்பினேனே பிள்ளைகட்கோர் வித்தை யாகப்
போதித்தேன் வரவரவும் பிரித்துத் தானே. 840

போதித்தேன் காலாங்கி பதத்தைப் போற்றி
போராமை கண்டிட்டார் மேலோர் காணில்
வாதித்த புத்தியினால் மனம டங்கி
மகத்தான வடியார்போல் வணங்கிப் பேசு
சேதித்த அவ்விடத்தில் சாந்த முண்டோ
செயகண்டி ஞானமென்றால் செம்மை யாமோ
ஆதிந்த வவரிடத்தில் செல்லா தென்றார்
அணைந்திருந்தேன் நிர்விகல்பம் தன்னில் தானே. 841

தானென்ற கிண்ணியிலே சூதங் கட்டித்
தாயிட்டுச் செந்தூரி வேதை யோடும்
கூனென்ற சத்தெடுத்துக் குகையில் வைத்துக்
குமுறிநின்று வுருகையிலே தங்கம் போடு
நானென்ற நான்குக்கே ஒன்று போடு
நாகத்தைச் சுத்திசெய்து ரெண்டு போடு
வேனென்ற சூதமது நாக வெடைபோடு
வீரமிட்டுக் கந்தியிட்டு ரெண்டுக் கொன்றே. 842

ஒன்றாகப் பொடியாக்கிக் கரந்தைச் சாற்றில்
உறவரைத்துக் காசியென்ற மேருக் கிட்டு
நன்றாக அறுசாமம் எரித்த பின்பு
நாட்டியேசி லாகையிட்டுப் பதத்தைப் பாரு



மன்றாகக் கரகரத்து மாதுளம்பூப் போலாம்
வைரவர்க்குப் பூசையிட்டெ டுத்துக் கொள்ளு
வின்றாக நூற்றுக்கொன் றீந்தா யானால்
விளக்கமான மாற்றதுவும் பத்து மாமே. 843

பத்தாகப் பணவெடைதான் பாலி லுண்ணு
பறந்தோடும் மண்டலத்தில் காய சித்தி
உத்தாகப் பத்தியமாய் உண்டு வந்தால்
ஒளியுண்டாம் நரையெல்லாம் உதிர்ந்து போகும்
சித்தாகக் ககனத்தில் ஓட லாகும்
சினம்போக்கும் மனம்நீக்கும் போதந் தாக்கும்
மந்தாக மவுனம்போல் வாசி பூது
மறவாதே அமிர்தத்தில் மருவி யுண்ணே. 844

(அ.பொ.) :—மனம் நீக்கும்=பேராசைபோய் மனம் அடங்கும்.

## அப்பிரகக் களங்கு

மருவியேதான் அப்பிரகக் களங்கு கேளு
மார்க்கமாகச் சத்துநின்று உருகுங்கா லப்பா
கருவியேதான் கனகமது நாலுக் கொன்று
கண்திறந்து உருகையில்கா ரீய மிரண்டு
திருவியேதான் ரசமென்ற செந்தா ரந்தான்
சேர்க்கவேதான் காரீய மெடைதா னாகும்
முருவியேதான் காரமிட்டு ருக்கி யாட்டி
உகந்துமேதான் களங்காகும் நூற்றுக் கொன்றே. 845

ஒன்றான சத்தெடுத்துப் பொடியாய்ப் பண்ணி
உறப்போடு சமனாகக் கம்பி யுப்பு
விண்ணான வீரங்கால் வாசி கூட்டு
வெள்ளையென்ற பாடாணம் அரைக்கால் கூட்டு
குண்ணான குக்கிட வெண் கருவா லாட்டி
குறுக்கவேதான் அகலிலிட்டுக் கெசபுடந்தான்
திண்ணான சுண்ணாம்பு போலே யாகும்
சேர்ந்தரைக்கச் சாரத்தைச் செய்நீ ராமே. 846

(அ.பொ.) :—குக்கிடவெண்கரு=கோழிமுட்டை வெண்கரு.

நீரிலேதான் வீரமொடு பூரம் லிங்கம்
நேரிலேதான் பொடிபண்ணிக் கலக்கி வைத்துத்
தூரிலாத செந்தூரம் பலந்தா னென்று
சுருக்கிடவே இந்நீரில் சேர்ந்து போகும்

காரிலேதான் முன்கவசம் தன்னைக் கட்டிக்
காரிய மாய்ப்புடம்போட் டெடுத்துக் கொண்டு
ஊரிலேதான் நவலோகம் நூற்றுக் கொன்று
ஊட்டிநுல்தான் பத்தரைக்கும் உயருங் காணே. 347

(அ.பொ.) :—சோர்ந்துபோகும்=மடிந்துபோகும்.

அப்பிரகத்திருதி

உயரவேதான் அப்பிரகத் திருதி தானும்
உயர்ந்தரம அப்பிரக நவநீதம் பண்ணி
தயரவேதான் வெடியுப்பு நீரி னுலே
தாக்கியரை நாள்மூன்று அகலி விட்டு
கெயரவேதான் கசபுடமாய்ப் போட்டெ டுத்து
கெட்டியாய்க் குப்பிக்குள் அடைத்து வைத்து
குயரவேதான் குதிரைலத்திக் கூடக் கொட்டி
குழிவெட்டி யதற்குள்ளே போட்டி டாயே. 348

போட்டுமேதான் அதற்குள்ளே குப்பி வைத்துப்
பின்தானும் குதிரைலத்தி மேலே போட்டு
மாட்டுமேதான் மண்போட்டு தண்ணீ ரூற்று
மறவாமல் அந்திசந்தி வுச்சி தானும்
மூட்டுமேதான் மூன்றுதிங்கள் ஆனபின்பு
முகிழ்ந்திறந்து எடுத்துப்பார் திருதி யாகும்
நாட்டுமேதான் நல்லதண்ணீர் தெளிவாய் காணும்
நாதாந்த நாதத்தின் திருதி தானே. 349

திருதியிலே சூதமது கட்டிப் போகும்
சேர்ந்துநின்ற சரக்கெல்லாம் சுன்ன மாகும்
அருதியிலே நவாச்சாரம் யானைத் தந்தம்
அதுபோலே கட்டிப்போம் துவைத்து வாட்டில்
பிருதியிலே லிங்கமது மயன மாகும்
பெரியரச செந்தூரம் கற்பூ ரக்கட்டு
விருதியிலே வீரமது மெழுகு மாகும்
மெத்தவுண்டு திருதியிலே விரைந்து காணே. 350

அப்பிரக ரசம்

காணவேதான் அப்பிரக சூதங் கேளு
கைகண்டத் துறையிதுதான் கருவைப் பாரு
ஊணவேதான் அப்பிரகச் சத்து தானும்
ஒருபலந்தான் நிறுத்துமதைக் கல்வத் திட்டு



தாணவேதான் சோரமென்ற வீரந் தானும்
தாக்கிடுவாய் பலமரைதான் திசைகாரக் குடோரி
பூணவேகால் பலந்தான்கா ரமென்ற குடோரி
புகன்றயெடை கால்பலந்தான் கூடப் போடே. 351

(அ.பொ.) :—திசைகாரக்குடோடி பா. எண். 257—259 ; சாரக் குடோரி பா. எண் 260—261.

போட்டுமேதான் முள்பன்றி நெய்யி னுலே
பிலத்தரைத்து மைபோலே சீலை சுருட்டி
ஒட்டுமேதான் எரிகாலி யெண்ணெய் தோய்த்து
எரியிட்டுப் பீங்கானில் தட்டத் தட்ட
தாட்டுமேதான் கடுகுபோலே சூதஞ் சிந்தும்
துப்புறவாய் எடுத்தெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து
காட்டுமேதான் கல்வத்தில் நிறுத்து விட்டு
கடைச்சூதம் சுத்திபண்ணிச் சமனாய்ச் சேரே. 352

(அ.பொ.) :—முள்பன்றி=முள்ளம்பன்றி.

சமனாகச் சேர்த்திடவே வேறாய் நிற்கும்
தங்கத்தின் ரேக்கதுவும் நாவி லொன்று
அமனாகச் சேர்த்திட்டு முலைப்பா லாலே
அரைக்கவேதான் மெழுகாகும் சேர்ந்தும் எல்லாம்
நமனாக மெழுகெடுத்து நவலோகத்தில்
நாட்டினுல்தான் பதினாறு மாற்க மாகும்
கமனாக உட்கொள்ள காயசித்தி யாகும்
கண்டுகொள்ளு மப்பிரகச் சூதந் தானே. 353

(அ.பொ.) :—ரேக்கு=மெல்லிய தகடு (திசைச்சொல்).

காந்தவுற்பத்தி

தானென்ற காந்தத்தின் தோற்றங் கேளு
சாங்கமாகப் பூருவத்தில் அமுதந் தன்னை
தேனென்ற தேவர்கள் சுரர்கள் எல்லாம்
திரளாக வுண்ணையிலே திவலை சித்த
கோனென்ற சடாமவுலி சிவன்தான் சென்று
குறியாகப் பார்த்துமேதான் மூடி வைத்துப்
பானுன பாவமான வியாதிக் கெல்லாம்
பரிகரிக்கக் காந்தமென்ற லோக மாச்சே. 354

(அ.பொ.) :—திவலை = சிறுதுளிகள். திரள் = கூட்டம் ; சடாமௌலி=சடையாய முடி (தலையணி) ; குறியாக=தன்மனக் குறிப்பால்.

## ஐவகைக் காந்தமெனல்

லோகமான பாடாண மாகத் தானும்
நுணுக்கமாகப் பூமிமலை வுற்ப விக்கச்
சுகமாகச் சிவன்தானும் சொல்லி விட்டார்
திவலையது தான்பொங்கி நிலமலை தன்னில்
காகமாய்த்தான் காந்தமென்ற நாம மாச்சு
கருதியேதான் ஐந்துவகைத் தாது வாகி
பூகமாய்ப்பி ராமுகந்தான் சும்ப கந்தான்
போரான கர்டிகந்தான் புகைநீ ராச்சே. 355

ஆச்சுதேபு கைநீர்தான் ஐந்து மாச்சு
அதன்விவரம் கற்காந்தம் ஊசிக் காந்தம்
பாச்சுதேதான் பச்சைகாந்தம் அரக்குக் காந்தம்
பாங்கான மயிர்க்காந்தம் ஐந்து மாகும்
போச்சுதேபி ராமகந்தான் லோகந் தன்னைப்
பிரமிக்கச் செய்விக்கும் சும்ப கந்தான்
ஏச்சுதேதான் லோகத்தை இழுத்துக் கொள்ளும்
இயலான கர்டிகந்தான் தூரப் போமே. 356

தூரவேதான் ஓட்டிவிடும் லோகந் தன்னைத்
திராவகந்தான் லோகத்தைத் தண்ணீ ராக்கும்
மாரவேதி ராகவந்தான் லோகந் தன்னில்
மயிர்போலே தொத்துவிக்கும் ஐந்து மாச்சு
ஊரவேதான் ஒருமுகமும் ரெண்டு முகந்தான்
உறைக்கின்ற வாதத்தில் மத்திப மாகும்
மூரவேதான் மூன்றுமுகம் அதம மாகும்
முனிந்ததனுல் ஐந்துமுகம் உயர்வு மாச்சே. 357

அஞ்சுமுகம் போனபின்பு சர்வ முகமும்
ஆதிக்க முத்தமந்தான் அறிந்து கொள்ளு
மிஞ்சுமுக மேதென்ருல் ஓரி டத்தில்
மிடுக்காகந் தானிழுக்கு லோகந் தன்னைப்
பஞ்சுமுகம் மற்றிடத்தில் பிடிய தாகும்
பாங்கிரண பஞ்சகர்த்தாள் சொரூபங் காந்தம்
விஞ்சுமுகம் பிரம்மமது மஞ்சள் வண்ணம்
மிடுக்காகப் பரிசத்தில் வேதை யாமே. 358



வேதையான விஷ்ணுவது கறுப்பு வண்ணம்
விளக்கமாகச் சத்துகளுக் காதி யாகும்
சேதையான ருத்திரன்தான் சிவப்பு மாகும்
செயமாகச் சூதத்தைக் கட்டு விக்கும்
சூதையான மகேசுவரன் வெளுப்பு மாகும்
தோன்றியதோர் சதாசிவமும் பச்சை யாகும்
ஏதையாக இவையிரண்டும் நோயை யெல்லாம்
இழுத்தடிக்கும் பிராமகஞ்சும் பகமு மாமே. 359

ஆமென்ற முன்மூன்று காந்த முந்தான்
ஆதியாந்தி ராயகந்தான் துரோம கந்தான்
காமென்ற காந்தமது இருக்கின் றவிடம்
கடினமாம் தலத்திற்கு மனிதர் போந்து
பேமென்ற பலிகொடுத்து முழங்கீழ் வெட்டி
பின்புதானே காந்தமது எடுக்க வேண்டும்
நாமென்ற மாருதத்தால் ரவிச்சு டராலே
நல்லீரந் தனிலிருந்த தாகா தென்னே. 360

## காந்தசத்து

என்றதொரு மஞ்சள்நிறம் கிருஷ்ண காந்தம்
ஏற்றமதாய் கிட்டாட்டால் ஊசி யேழு
மன்றதோர்தன் பிடிக்கின்ற காந்தம் வாங்கிப்
பொடிப்பொடியாய்ப் பருப்புப்போலே நொறுக்கிக் கொண்டு
குன்றுத கிழிகட்டிக் காடி தன்னில்
கொதிக்கவைத்துப் பின்பதைத்தான் கொள்ளில் வைத்து
அன்றதையே அவித்துமேதான் எடுத்துக் கொண்டு
உலறவிட்டு வெள்ளாட்டுக் குருதி வாரே. 361

(அ.பொ.) :—அவித்து=வேகவைத்து.

வெள்ளாட்டுக் குருதிதானும் கூடப் போட்டு
விளங்கவேதான் அதன்தோலில் சுருட்டிக் கட்டி
புள்ளாடு மூன்றுநாட்கள் புதைத்து வைத்துப்
பின்பேதான் பலம்பத்து நிறுத்திக் கொண்டு
தள்ளாடு சாரநீர்தான் விட்டே ஆட்டு
சமரசமாய்க் குடோரியொரு பலமும் போட்டு
கள்ளாடு காரமென்ற குடோரி பலம்போட்டு
கனமான வீரமது பலமும் போடே. 362

பலம்போடு வெள்ளைகுன்றி காரந் தேனும்
பழம்போடு பஞ்சமித்தி ரத்தைக் கூட்டி
வலம்போடு அரைத்தெல்லாம் வில்லை தட்டி
வளமான கசபுடமாய்ப் போட்டெ டுத்துக்
குளம்போடு ரெட்டையான துருத்தி யாலே
கூசாதே ஊதியேதான் ஓட்டில் கொட்டி
தலம்போடு சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
சாங்கமாக கறடுவைத்துக் குகையி லூதே. 363

ஊதியேதான் சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
ஒருக்கால்தான் மருந்திட்டு ஊது ஊது
தூதியேதான் மறுவிசைக்குச் சும்மா ஊது
துளித்துளியாம் சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
வாதியேதான் விசைவிசைக்கும் மருந்து போட்டால்
மண்ணுய்ப்போம் சத்தொன்றும் வரவே மாட்டா
பூதியேதான் பொறுக்கினதோர் சத்தெல் லாந்தான்
புறம்பாக வைத்துத்தான் பின்னும் ஊதே. 364

பின்னுமேஊ திட்டுஐந்து தரமே தானும்
பொறுக்கினதோர் சத்தெல்லா மொன்ருய்க் கூட்டிக்
கண்ணுமேதான் காரமிட்டு ருக்கிக் கொண்டு
காட்டியமுன் நட்பதனில் உருக்கிச் சாய்க்க
பண்ணுமேதான் பதினெருக்கால் உருக்கிச் சாய்த்துப்
பாங்கான நாலிலொன்று தங்கங் கூட்டி
மண்ணுமேதான் மெழுகுகட்டிக் கிண்ணி வார்த்து
வத்துவுண்ணு கற்பமுண்ணு மகத்தாம் சித்தே. 365

(அ.பொ.) :—நட்பு=(பஞ்ச)மித்திரம் : பாட்டு எண் : 305—309.

## காந்தக்கிண்ணத்தில் சூதங்கட்ட

சித்தான கிண்ணிகண்டால் சாவே யில்லை
கணத்தில்தான் சூதமது கட்டிப் போகும்
நத்தான நாகமது நமன்கை யாகும்
நலமான இருவங்கம் சோர்ந்து போகும்
கத்தான லோகமெல்லாம் குருதி போலாம்
கலந்தெல்லாம் ரஞ்சகமாந் தொந்த மேறும்
முத்தான சயமேகங் காசங்கூட
முதிர்ந்தமகோ தரங்குன்மம் முடுகிப் போமே. 366

(அ.பொ.) :—நமன்கையாகும்=மடிந்திடும் ; முடுகி=வேகமாக.



## சூதம் கட்ட

போமென்ற சூதத்தைக் கட்டக் கேளு
புகழான காந்தமென்ற கிண்ணிக் குள்ளே
ஆமென்ற அடித்தூரில் சீலை செய்து
அழகான வாலுகையின் மேலே வைத்து
காமென்ற சுத்தித்த சூதம் விட்டு
கருமத்தஞ் சாறுவிட்டு நான்கு சாமம்
ஏமென்ற எரித்தாக்கால் இறுகி வெண்ணை
இட்டலிபோல் தானிருக்கும் எடுத்து ருட்டே. 367

(அ.பொ.) :—அடித்தூர்=அடிப்பாகம்.

உருட்டியேதான் குளிர்ந்ததண்ணீர்க் குள்ளே போட
உருட்சியாகக் கெட்டியான மணியு மாகும்
திரட்டியேத லையில்வைக்க ஆயுதந் தையா
சுக்கிலத்தம் பனமாகும் திடமுண் டாகும்
மருட்டியேதான் மங்கையரை வசிய மாக்கும்
மாசற்றச் சாரணைகள் செய்தா யானுல்
இருட்டியேதான் இடிக்குள்ளே எய்த லாகும்
ஏற்றமான குளிகையெங்கும் இல்லை தானே. 368

(அ.பொ.) :—சுக்கிலத்தம்பனம்=விந்து கட்டும் ; திடம்=வலிவு ; மருட்டி=வெருட்டி.

இல்லையேதான் சித்தருட மரபில் எல்லாம்
எனையின்ற ஐயர்கா லாங்கி தானும்
தொல்லையேதான் சொல்லாமல் சுலப மார்க்கம்
செப்பியதோர் உபதேசம் தெரிந்து கொண்டு
எல்லையே ழாயிரத்தி லெழுதிப் போட்டேன்
ஏறுதற்கு இதுவழிதான் சித்தி முத்தி
பல்லையேதான் கெஞ்சினுலே வாத மாமோ
பாரித்த சத்தெடுத்தால் சூதம் சாமே. 369

சூதமேதான் கட்டுதற்குத் துரட்டி யாகும்
தொட்டுகுறி தப்பாமல் போடும் சத்து
வாதமேதான் எண்ணுதே காந்தத் தாலே
மகாகோடி குணமுண்டு மார்க்க மேற
போதமேதான் இதற்கொப்பச் சொல்ல லாகும்
பெரிதான சத்திதுதான் போக்கு மெத்த
வேதமேதான் இதைநம்பு மிடுக்கு மாகும்
மேன்மையான தொழிலிதுதான் விரும்பி யாடே. 370

ஆடவுமே சூதத்தை மணியாய் வாங்கி
    அந்தெடைக்குச் சூதமிட் டரைத்தா யானால்
நீடவுமே சூதமது தொந்தநூறு கட்டும்
    நெருப்பிலேதான் நின்றுநிர்ம லம்போ லாடும்
போடவேதான் ககனத்தில் குளிகை யாகும்
    உத்தமித்தால் பதந்தன்னில் உருக லாகும்
பாடவேதான் சிவன்பாதம் பணியக் கிட்டும்
    பாங்கெட்டுச் சித்தியெல்லாம் பார்க்க லாமே. 871

## காந்தக்கிண்ணத்தில் கட்டின சூதவேதை

பார்க்கவுமே சூதத்தில் நாலத் தொன்று
    பறிகூட்டி யுருக்கியேதான் மணியாய் வாங்கி
கோக்கவுமே கந்தகத்தைச் சுத்தி செய்து
    சூதத்தி னெடைசேர்த்து திரள வாட்டி
காக்கவுமே கற்றாழைப் பாலி லாட்டி
    காசியென்ற மேருவிலே பொடியா யிட்டு
தீர்க்கவேசெந் தூரித்தா யிரத்திற் கொன்று
    சிறப்பாக யிட்டிடவே பத்து மாமே. 872

பத்தான செந்தூரம் தினந்தான் குன்றி
    பாலிலேயுண் டாக்கால்தான் பால னாவான்
சித்தான சித்ததுவும் அதிக மாகும்
    சிவலோகச் சேவகன்தான் செய்யுந் தன்மை
குத்தான குண்டுபட்டால் தெறித்துப் போகும்
    கோடிகுண முண்டதிலே கூற மாட்டேன்
இத்தான வாதிகட்கு முனைமூக் குண்டாம்
    பிரபலத்தோர் ஒருவருமே பேசொண் ணாதே. 873

(அ.போ.) :—தெறி=சிதறு.

## காந்தசத்துச் செந்தூரம் கட்ட

பேசொண்ணா காந்தமென்ற பாத்தி ரத்தில்
    பிண்டதுகள் சத்துகளில் மிகுந்த தெல்லாம்
பாச்சொன்றாய் பலம்ரெண்டு நிறுத்துக் கொண்டு
    பரிதானம் நாலிலொன்று இட்டு ருக்கில்
வீச்சொண்ணா வீரமரைப் பலமும் போட்டு
    விளங்கரைத்து முலைப்பாலில் வில்லைக் கட்டி
ஆச்சொண்ணா அண்டோட்டு உப்பில் வைத்து
    அழுத்தியேபு டம்போடக் குருவு மாமே. 874



குருவான குருவதனைச் சூதத்துள் போட்டரை
    கொப்பளித்து வெண்ணெயைப்போ லாகும் பாரு
கருவெடுத்து கோடிதொழில் இதிலே யாகும்
    தருவெடுத்து கற்பகமாம் விருட்சம் போலே
தலமாகும் சரக்கெல்லாம் கட்டிப் போகும்
    காயசித்தி கற்பாந்த கால மாகும்
திருவெடுத்து லட்சுமிமுன் வந்து நிற்பாள்
    செப்பரிது காந்தமென்ற குருவி னாட்டே. 875

(அ.போ.) :—திரு=செல்வம்.

## காந்தக் களங்கு

ஆட்டான காந்தத்தின் களங்கு கேளு
    அதிகமாம் காந்தசத்து பலந்தான் தங்கம்
காட்டான காற்பலந்தான் கூடப் போட்டு
    களங்கற்று வுருகையிலே காரீ யம்போடு
மூட்டான சுத்தித்த கந்தி யொன்று
    முனையான சூதமொன்று தாளக முமொன்று
பூட்டான பொற்றலையின் சாற்றா லாட்டி
    பெரும்பயற ளவுபோல உருண்டை தானே. 876

உருண்டைதான் உருகையிலே கிராசம் போடு
    ஒருபலந்தான் சத்துக்கு வகைகால் பலந்தான்
பருண்டைதான் உருண்டையெலா மான பின்பு
    பக்குவமாய் எடுத்துப்பார் களங்கு மாகும்
நருண்டைதான் நவலோகம் நூற்றுக் கொன்று
    நாட்டினாலே பத்தரைக்கு நன்மை யாகும்
மருண்டைதான் பிழைப்பித்து வாசி நிற்கும்
    மகத்தான நாளெல்லாம் கடிகை யாமே. 877

(அ.போ.) :—நன்மை=மாற்று ; கடிகை=நொடி.

கடிகையான சத்துக்குத் தங்க மிட்டுக்
    களங்கானால் கனகமய மாகும் பாரு
விடிகையான வெள்ளியிட்டால் சத்துக் குள்ளே
    விரைந்துபார் வெள்ளிவித்தை யாகும் பாரு
தடகையான இம்முறைபோல் களங்குச் சுண்ணம்
    சாற்றியநற் செந்தூரம் சகலத் துக்கும்
படிகையான வித்திட்ட படிபோ லாகும்
    பாங்கான கருவெல்லாம் பழகிப் பாரே. 878

## ஞானம் கூறல்

பழகினாலே சாந்தியொக்கும் கார சாரம்
பரங்கான விசாரமொக்கும் பஞ்ச லோகம்
தழகினாலே மகிழ்ச்சியது தங்க மொக்கும்
சாதுசங்கம் சூதமது தன்னை யொக்கும்
அழகினாலே பூரணத்தின் அந்தங் காண
அதிகமான சொருபமது வழிதான் காட்டும்
வழகினாலே வாசிவைத்து மவுன முன்னி
மார்க்கமாக நின்றுரைத்து மருவிப் பாரே. 379

(அ.பொ.) :—விசாரம்=ஏக்கம் ; அந்தம்=அழகு : சொருபம்=இரசமணியில் ஒருவகை.

மருவிமன மொன்றாகி மவுனம் பார்த்தால்
மார்க்கமாகும் நோயெல்லாம் மறைந்து போகும்
உருவுமன மொன்றாகி ஆயி பாதம்
உகந்துமேபூ சைபண்ண எல்லா மாகும்
விரவிமன மொன்றாகில் விழலாய்ப் போகும்
வேதாந்த சாரமெல்லாம் வெளியா காது
திருவிமன மொன்றாகில் சித்தி யெல்லாம்
தீர்க்கமாயொன் றுமில்லைசித றித்தான் போச்சே. 380

(அ.பொ.) :—விரவிமனமொன்றாகில்=(பற்பல சிந்தனைகள்) கலந்ததில் மனம் ஒன்றினால் ; திருவிமனம் ஒன்றாகில்=சிதைவில் மனம் ஒன்றினால்.

சிதறாமல் ஆயிபதம் பூசை பண்ணித்
தியானித்து மதுவுண்டு சிந்தை கூர்ந்து
பதறாமல் ஆணவத்தைப் பதியப் பார்த்து
பாழான வெளியொளியிற் பரவிக் கூடு
உதறாமல் சடமென்னும் ஊத்தைப் பாண்டம்
உற்பனமாங் குணந்தன்னை யுரைக்கக் கேளு
புதறாமல் புழுக்குதம்பை பொழியுங் கட்டை
புழுக்கமான நரம்புபச்சைப் புகலக் கேளே. 381

(அ.பொ.) ;—ஆணவம்=அகங்காரம் (சினம், செருக்கு) ; பதிய=தாழ்ந்திருக்க ; ஊத்தை=அழுக்கு ; புழுக்குதம்பை=புழுக்குறம்பை=புழுக்களாலான கூடு (உடல்) ; உதறாமல்=தள்ளிவிடாமல்.



புகலவுமே மலக்குப்பை பொய்யாங்கூடு
பூதலந்தான் ஒன்பதிடம் பொருந்தா தானும்
நிகலவுமே நிலையில்லாக் கானக் கூபம்
நீர்க்குமிழி வாழ்வான நினைவு தானும்
நகலவுமே எப்போதும் நமன்கை யாடு
நல்வினைதீ வினைரெண்டால் நலிந்த வீடு
அகலவுமே ஆகாரக் கரைக்கட் டான
அழிம்பான சடமிதுதான் அறிந்து கொள்ளே. 382

(அ.பொ.) :—கானக் கூபம்=காட்டுக் குளம் ; நலிந்த=நோயுற்ற ; அழிப்பான=அழிவுப் பாதைக்குக் கொண்டு போகும்.

அறிந்துகொள்ளு மனதிற்கு ரூப மில்லை
அருவமில்லை யுருவமில்லை அந்த மில்லை
தெரிந்துகொள்ளு சூரியன்தன் கிரணம் போலே
தியான விளக்கனலும் ஒளியும் போலே
இறிந்துகொள்ளும் மின்னலுங் காந்தியும் போலே
மிரண்டமொழி கண்ணொளியின் மேன்மை போலே
பிறிந்துகொள்ளும் இமையொருத்தர் அறிய மாட்டார்
புகுந்துணர்ந்தார் போதமது வாடுந் தானே. 383

(அ.பொ.) :—அந்தம்=முடிவு ; வாடும்=குறையும்.

போதமது நேருவது எவ்வா றென்றால்
பெருந்தீபம் உண்டநெய்போல் பேணிக் கூடு
வாதமது வருணசலம் ரவியுண் டாற்போல்
வண்ணமைந்து படிகத்தில் பரந்தாப் போலே
நீதமது சலத்தடங்கும் குமிழி போலே
நினைத்தொருவன் சத்தமது கேட்கும் போலே
சீதமது வொடுங்குவது இதுவே மார்க்கம்
சிந்தையற்று மனதோடே தியானித் துன்னே. 384

## சிலாசத்துத் தோற்றம்

தியானித்த சிலாசத்து ரெண்டு மாகும்
செப்புதுங்காண் கற்பூர சிலாசத் தென்றும்
தியானித்த கோமூத்திர சிலாசத் தென்றும்
கெடியான ரெண்டுவித பேத மாகும்
உயானித்த வுற்பத்திச் சொல்லக் கேளு
உயரிமையோர் பர்வதத்தில் பனிதான் பெய்து
தியானித்து நீர்வற்றி ரவிதன் னாலே
நிரைநிரையாய்த் தான்கிடக்கும் நிலைத்துப் பாரே. 385

(அ.பொ.) :—இமையோர்=தேவர்,

நிலைத்துநின்ற மலைதோறும் மிகுப னிபெய்து
  நீர்வற்றித் தான்கிடக்கும் சிலாசத் துதானும்
கலைத்துநின்ற கம்பியாய்க் கட்டி யாக
  கனத்ததுவோர் சிதளையான படிகம் போலாம்
குலைத்துநின்ற குடைக்குமிகத் தீயு முண்டு
  குரூரமான வெய்யிலாலும் பனியி னாலும்
புலைத்துநின்ற பொன்வெள்ளிச் செடிபோ லொக்க
  பிறக்கின்ற சிலாசத்து மிகுதி யுண்டே. 886

உண்டென்ற சிலாசத்து கடுவெய் யில்பட்
  டுலர்ந்துமேதான் கட்டியாகத் தானி ருக்கும்
பண்டென்ற சிலாசத்து வண்ணங் கேளு
  பாரமாகக் கம்பியான வெளுப்பு மாகும்
குண்டென்ற கோமூத்தி ரசிலா சத்து
  கோமூத்தி ரநிறமாகக் கட்டி யாகும்
கண்டென்ற கனகத்தில் பிறந்த சிலாசத்து
  கனத்துசெம்ப ரத்தம்பூ நிறத்த தாமே. 887

(அ.பொ.) :—பாரம்=கனம்; பளு.

திறமான வெள்ளியுட சிலாசத் துதானும்
  நிசமாக மயில்வயிற்றின் வெண்மை போலாம்
அறமான அழுக்கடைந்துக் கட்டி யாகும்
  அதியதாம்பி ரந்தன்னி லுற்ப வித்த
திறமான சிலாசத்து சொல்லக் கேளு
  சிறுநீல வண்ணமான கட்டி யாகும்
முறமான முன்சொன்ன சிலாசத்து தானும்
  முறிந்துநோய்ச்ச லக்கட்டு தீருந் தானே. 888

தீருமே கோமூத்தி ரசிலா சத்து
  செயமான வாதத்திற் குறுதி யாகும்
மேருமே யேமத்தில் விளைசிலா சத்து
  மிசைந்துமேதான் மழமழத்துக் கட்டி யாகும்
வாருமே சகலசித்து மாட லாகும்
  வண்மையான வெள்ளியினில் விழுந்த தாகும்
தூருமே சொருபத்தை மாற்றி வைக்கும்
  தூயதான பொடிமணல்போல் சிதறுந் தானே. 889



சிதறுமதே தாம்பரசிலா சத்து தானும்
  செயமான சுண்ணும்புத் திறமே யாகும்
பதறுமதே மாதாந்திறந்தான் அதினுற் பத்தி
  பாங்கான நான்குவிதப் பண்பு கேளு
மதறுமதே மாங்கிசத்தி ராவி யென்றும்
  மகத்தான அத்திராவி யென்றே தானும்
அதறுமேதான் அதியன்னத் திராவி யென்றும்
  அதீதசங்கத் திராவியென்றும் நாமம் நாலே. 890

(அ.பொ.) :—திறம்=தன்மை: திராவி=ஸ்ராவி=நீராக்கி ஒழுக வைக்கும் பொருள்.

நாலான குணந்தன்னை நவிலக் கேளு
  நல்லாட்டின் மாங்கிசத்தில் காணி தானும்
பூலான பொடியிட்டால் கரைந்து போகும்
  பேரான மாங்கிசத்தின் திராவி யாகும்
ஏலான எலும்பிலிடக் கரைந்து போனல்
  ஏற்றவத்தித் திராவியென்றும் இயம்ப லாகும்
ஆலான அன்னத்தில் கரைந்த தென்றல்
  அதியன்னத் திராவியென்றே அறிய லாமே. 891

(அ.பொ.) :—அன்னம்=சோறு.

அறியவுமே சங்கதுவும் கரைந்து தென்றல்
  அறியசங்கத் திராவியென்று நாம மாகும்
எறியவுமே இந்நாளில் லோக மெல்லாம்
  எளிதாகக் கரைந்துதண்ணீர் சுண்ண மாகும்
மறியவுமே மாங்கிசத்தின் திராவி யாலே
  மகத்தான சூதமது கட்டிப் போகும்
நறியத்தி திராவியினல் நவலோ கநீறும்
  நலத்ததிரா வியினல்பா டாணம் நீறே. 892

நீருன சங்கத்திரா வியினல் நாகம்
  நிமிடத்தில் கட்டுண்டு வேதை யாகும்
வீருன சிலாசத்து எல்லாந் தானும்
  மிகக்கனத்துக் கட்டியாக மழ மழத்து
தூருன துவர்ப்போடு புளிப்ப ழத்தின்
  துரியமாகக் கஞ்சரமாய்த் தானி ருக்கும்
மாருன கல்லடைப்பு நீர்ச்சு ருக்கும்
  கலந்திருந்த மூத்திரதோ டங்கள் போமே. 893

## சிலாசத்துச் சத்து

போமென்ற சிலாசத்து சத்து கேளு
பொடியாக நறுக்கியேதான் பலந்தான் பத்து
வாமென்ற அமுரிதன்னில் கொதிக்க வைத்து
வளமானக் காடியிலே கொதிக்க வைத்துத்
தேமென்ற கல்வத்தி விதனை யிட்டு
திசைகாரக் குடோரியொரு பலமும் போடு
காமென்றகா ரக்குடோரி யொருப லந்தான்
கனமான வீரமொரு பலந்தான் போடே. 394

(அ.பொ.) :—திசைக்காரக் குடோரி=பா. எண் 257—259 பார்க்க. காரக் குடோரி=பா. எண். 260.

போட்டரைத்து வெடியுப்பு நீரி னாலே
புகழாய்ப்பஞ் சமித்திரத்தை விருவிக் கொண்டு
வீட்டரைத்து மெல்லியதாய் வில்லை கட்டி
விளங்கவொரு புடம்போட் டெடுத்துக் கொண்டு
கூட்டரைத்துக் குகையிலிட்டுக் குமுற வூதி
கொட்டியபின் சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
காட்டரைத்துக் கரடெல்லாம் பொடித்து வூது
கனமாக வூதிடவே சத்து மாமே. 395

(அ.பொ.) :—பஞ்சமித்திரம்=பா. எண். 305.

சத்தெடுத்து வேறுவைத்துக் கரடு தன்னைத்
தளராதே ஐந்துமுறை பொடித்து வூது
மூத்தெடுத்தெல் லாந்தானும் ஒன்றாய்ச் சேர்த்து
முனையான காரமிட்டு ருக்கிக் கொண்டு
பத்தெடுத்து மித்திரனில் சாய்த்து பின்பு
பதினைந்து திறஞ்சாய்க்கப் பரந்த மாகும்
கொத்தெடுத்துக் குளிகைக்குச் சாரணை தீர்த்து
கொடுங்கவன மோட்டிப்பார் கூசி டாதே. 396

கூசிடாத சத்துநின்று வுருகும் போது
கொட்டிடவே நாகமது கட்டிப் போகும்
பாசிடாத சூதமது படுத்துக் கொள்ளும்
பாடாணக் குலமெல்லாம் இதிலே சேர்க்கும்
தாசிடாத தங்கத்தை நாலுக் கொன்று
தாக்கிடுவாய் சத்துநின்று உருகும் போது
பேசிடாது வொக்கநின்று ருகும்போழ் தத்து
பொன்னெடைக்கு நாகமெடை கூட்டி டாயே. 397



நாகமெடைக் கூட்டிடுவாய் சூதந் தன்னை
நாடியுமே கூடியெல்லாம் உருகும் போது
பாகமெடை போட்டிடுவாய் கந்தி தன்னை
பாங்கான தாளகமவ் வெடையே போடு
பூகயெடைப் பொடிபண்ணிக் குப்பிக் கேற்றி
பேரான வாலுகையின் மேலே வைத்து
ஆகவெடை அறுசாம மெரித்தா யானால்
அருணனைப்போல் செந்தூர மாகுந் தானே. 398

(அ.பொ.) :—பூகம்=ஒருவகைக் காந்தம்.

செந்தூர மாயிரத்திற் கொன்றே போடு
சிறுகதிர்போல் மேனியாகத் தேனி லுண்ணு
பந்தூரம் பதினாறு வயது மாகும்
பாலையைப்போல் என்னாளு மிருக்க லாகும்
குந்தூரம் போனாலும் வியர்வை யில்லை
குறுக்கற்றுப் போகாது கத்தி வீசில்
மந்தூர மாருதத்தில் சுழலொட் டாது
வாய்திறக்கச் சித்தியுமா மாட்டி யாடே. 399

(அ.பொ.) :—குந்தூரம்=வெகுதூரம் ; குறுக்கற்று=வெட்டுபட்டு ; மாருதம்=காற்று.

## சிலாசத்துச் சுண்ணம்

ஆடவுமே சிலாசத்து சுண்ணங் கேளு
ஆதியான வெடியுப்பு நீரி னாலே
பாடவுமே அரைத்துநன் றாய் வில்லை கட்டி
பரும்புடமாய்ப் போட்டேநீ வூதிப் போடு
காட்டவுமே வெகுகடினச் சுண்ணும் பாகும்
காட்டுவாயே சுண்ணத்தி னெடையே சாரம்
நீடவுமே அரைத்தும்தான் புடத்தைப் போட்டு
நிசமாப்ப ணியில்வைக்க செய்நீ ராமே. 400

(அ.பொ.) :—வெடியுப்பு நீர்=செய்முறை பா. எண், 242—249 வரை.

செயநீரில் சரக்கெல்லாங் கட்டிப் போகும்
சிறியதெல்லாம் பெரியதற்கி ரையாய்ப் போகும்
அயநீரில் சூதத்தை அமிழ விட்டு
அயக்கரண்டி தனிலிட்டுக் கொதிக்கு மட்டும்

மயநீரில் பாடாண மயன மாகும்
மால்தேவி தனில்வாட்டிப் புடத்தைப் போட
நயநீரில் தாளகந்தான் சலவை யாகும்
நவச்சாரங் கட்டியேதான் தந்த மாமே. 401

(அ.பொ.) :—மயனம்=மெழுகு ; தந்தம்=யானைக் கொம்பு,

தந்தமான களங்கொன்று சொல்லக் கேளு
சத்துநின்று வுருகையிலே தங்கம் போடு
பந்தமான காரீயம் நாலுக் கொன்று
பாச்சிடுவாய் சூதமொடு கந்தி தன்னை
முந்தமான சொன்னபடி கிராசம் போடு
மோசமில்லைக் களங்காகும் நூற்றுக் கொன்று
அந்தமான கனகமது பத்து மாகும்
ஆதியான உபரசங்கள் களங்கு தானே. 402

(அ.பொ.) :—கிராசம்=சுருக்கு.

களங்கமில்லா நான்குதிக்கு மாடி வந்தேன்
கருதினேனே சித்தரொடு புகழும் பெற்றேன்
புளங்கமில்லா வண்டமெல்லாம் புக்கிப் பார்த்தேன்
புகுந்திட்டேன் பேரண்டப் புவனந் தாண்டி
பளங்கமில்லாப் பதந்தாண்டி அப்பால் சென்று
பாழான முப்பாழ்மேலா யிபதம் போற்றி
இளங்கமில்லா தொழுதிறைந்து வப்பால் செல்ல
ஏற்றமான துவாதசத்தி னியற்கை யாச்சே. 403

இயற்கையாக மாச்சரியம் குணங்கு நியாகி
ஈடனைமூன்று இருபத்தி னன்கும் கண்டு
செயற்கையாக பூரணத்தில் குளிகை கட்டி
சேர்ந்துமேதான் ஓடிநின்றேன் ஆண்டு மொன்று
வியற்கையான வெட்டவெளி சுடர்போல் காந்தி
விளம்புதற்கு முடியாது வதிலே நாதம்
அயற்கையாக சிலம்பொலிக்க அனுகிச் சென்றேன்
அப்புறமு மிப்புறமும் யான்கா ணேனே. 404

காணவுமே புக்கியுள்ளே யடங்கி யாவும்
கண்டபின்பு கீழ்நோக்கிக் குளிகை நோக்க
பூணவுமே பதத்தளவும் பறந்து வந்தேன்
பேரான புவனம்விட் டண்டம் புக்கி



மாணவுமே மீண்டுவந்து மறுவண் டத்தில்
மருவியேதான் அதிசயங்க ளெல்லாம் கண்டேன்
தோணவுமே குளிகையது கீழே நோக்க
தூங்கினேன்சுத் தசைதன்னி யத்தில் தானே. 405

## கல்நார் தோற்றம்

தன்னியமாங் கல்நாரின் பிறப்பைக் கேளு
சாற்றவேதான் ரெண்டுவிதம் பச்சை வெண்மை
உன்னதமாஞ் சிவன்தானும் பலியேற் றுண்டு
உதறினர்தாம் கையதனை மணியின் மேலே
திண்ணமான சேடத்தின் திவலை தானும்
தெரித்துமேதான் கல்மேலே திரைபோ லாகி
அன்னியமாங் கல்லுக்கு ஆடை யாச்சு
ஆகையினால் பச்சைவெள்ளை ரெண்டுந் தானே. 406

(அ.பொ.) :—பலி=பிச்சை ; சேடம்=மிகுந்தது.

## கல்நார் சுண்ணம்

இரண்டினிலே வெள்ளையது முதற்ற ரந்தான்
ஈருன பச்சையது ரெண்டாம் பட்சம்
முரண்டினிலே முதற்பேரு கல்லா டையாகும்
முனிந்தரெண்டாந் தரம்கல்லே சர்ம மாகும்
பரண்டினிலே இதையெடுத்துப் பழச்சாற் றிலாட்டு
பரிந்துமேதான் வில்லைதட்டிக் காயப் போடு
துரண்டினிலே துருத்திக்கொண்டு ஊதி னுக்கால்
சுண்ணும்பு வெளுப்பாகும் கார மாமே. 407

## கல்நார் சத்து

காரமாகத் தானிருக்கும் கல்நார் சுண்ணம்
காயசித்திக் கிதைத்தான்தாம் பூலந் தின்னு
தாரமான சத்ததுவுஞ் சொல்லக் கேளு
தனிரெண்டு பத்துபலம் கல்நார் தன்னைப்
போரமாகப் பொடியாக்கிக் கொள்ளுச் சாற்றில்
பொட்டணமாய்க் கிழிகட்டி யெரித்துக் கொண்டு
காரமாகக் காயவிட்டுக் கல்வத் திட்டு
காரமென்ற குடோரியது பலந்தான் போடே. 408

(அ.பொ.) :—காரக்குடோரி=செய்முறை பா. எண். 260, 261.

பலம்போடு திசைகாரக் குடோரி தானும்
பாங்கான வீரமொரு பலந்தான் போடு
குலம்போடு மித்திரத்தை விருவிக் கொண்டு
குகையிவிட்டு முன்போலே வுருக்கித் தீரு
தலம்போடு சத்தெல்லாம் உருக்கி கொண்டு
தாக்கியேதான் கறடெடுத்து ஐந்து தரமூது
உலம்போடு சத்தெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து
உருக்கியேதான் மித்திரனில் சாய்த்தி டாயே. 409

(அ.பொ.) :—திசைக்காரம்=பா. எண். 257 ; மித்திரம் : 305.

சாய்த்துமதே குளிகைக்குச் சாரணை தீர்க்க
தாண்டுமதே அண்டரண்டம் பத்தி மைக்குள்
வாய்த்துமதே கோடிலட்சங் காதம் போகும்
மனோவேகந் தனக்குமேதான் அதிக மாகும்
தேய்த்துமதே நவலோகந் தகட்டிற் குள்ளே
சிவக்கவுமே காய்ச்சினால்தான் ஏம மாகும்
மாய்ந்துமதே போனவுயிர் தன்னை மீட்கும்
மகத்தான நாதமது வுண்டாம் பாரே. 410

நாதமதின் சத்தொரு பலந்தான் தூக்கி
நாலிலொன்று தங்கமிட்டு ருக்கி யாட்டு
பூதமதின் பொன்னெடைக்கு நாகம் போடு
பிரண்டமது குகையிலே சூதம் போடு
சூதமதின் எடைக்கொக்க கெந்தி போடு
சுழன்றுருகில் தாளகமும் சிலையும் போடு
ஏதமாமித் தனையும்பொற் றலையின் சாற்றால்
இழுத்தரைத்துப் பொடியாக்கிக் குப்பிக் கேற்றே. 411

(அ.பொ.) :—சிலை=மனோசிலை.

ஏற்றியதே பன்னிரெண்டு சாமந் தீதான்
எரித்திடவே அருணன்போல் சிவந்து போகும்
போற்றியதே யீசானன் பூசை செய்து
புகழாக மண்டலந்தான் தேனி லுண்ணு
மாற்றியதே சடமிறுகி மதன்போ லாவாய்
மகத்தான நரையெல்லாம் கருவண் டாகும்
நீற்றியதே பத்தியத்தை விட்டி டாயே
நித்தியமும் மறவாதே வாசி மாட்டே. 412

(அ.பொ.) :—ஈசானன்=வடகிழக்கு திக்கிலுள்ள பாலகர் (காப்புக் கடவுள்) ; மதன்=மன்மதன்.



## கல்நார் சத்துக்கிண்ணிசெய்து இரசம்கட்ட

வாசியான சத்துக்குத் தங்க மிட்டு
மண்கட்டி மெழுகுகட்டிக் கிண்ணி வார்த்து
தேசியான சீவுளியால் மெழுகறச் சீவி
சிக்கெனவே அடித்தாரில் மண்ணைக் கட்டி
தூசியாக சுத்தித்த சூதம் விட்டு
சுயமான வாலுகையின் மேலே வைத்து
பூசியான பொன்னூமத்தங் காய் யிடித்து
புலமாகக் கிட்டிகட்டிச் சாறு வாங்கே. 413

(அ.பொ.) :—சீவுளி=ஒரு ஆய்தம் ; பொன்மத்தங்காய்=பொன்னூமத்தங்காய் ; கிட்டி=அழுத்தும் (சாறுவாங்க) சாதனம்.

சாறுதானே நால்சாமம் ததும்ப விட்டு
தாக்காக எரித்திடவே சூதம் செம்பாம்
வேறுதானே மதிதன்னில் நூற்றுக் கொன்று
விடுபட்டால் பத்தரைதான் விரைந்து காணும்
மாறுதானே பண்ணாதே இந்தப் பொன்னை
வைத்துமேதான் தரிசித்தால் மகத்தாம் சித்தி
காறுதானே கழுவடியின் நாயைப் போலே
கத்தியேதான் திரிவார்கள் வாதி தானே. 414

(அ.பொ.) :—மதி=வெள்ளி ; கழு=(வசி) குற்றவாளிகளுக்கு மரணதண்டனை கொடுக்க உபயோகிக்கும் சாதனம்.

## கல்நார் சத்துக் களங்கு

தானென்ற களங்குதான் ஒன்று கேளு
சத்துதானே பலமொன்று நிறுத்துக் கொண்டு
வேனென்ற தங்கமது நாலுக் கொன்று
மிடுக்கான காரீயம் சூதம் கெந்தி
கோனென்ற தங்கத்தின் எடைதான் கூட்டி
குகையிவிட்டு வுருக்கியேதோன் கோலா லாட்டி
ஊனென்ற ஓட்டிலேசாய்த் திட்டாக் கால்தான்
உயர்ந்தநிறம் மயில்கழுத்தாம் களங்கு மாமே. 415

மயில்கழுத்து நிறமான களங்கு தன்னை
மாட்டிடுவாய் நவலோகம் நூற்றுக் கொன்று
குயில்கழுத்துக் கண்போலே ஏம மாகும்
கூசாதே கடைக்கேற்றுப் பத்து மாகும்

பயில்கழுத்தும் புஜம்போலாம் உள்ளே கொள்ளு
பணவெடைதான் தேன்தன்னில் அனுபா னத்தோடு
கயில்கழுத்துக் கருங்காலிப் போலாந் தேகம்
கல்நாரின் சத்தினுட கணக்குத் தானே. 416

## குருசீட உபதேசம்பற்றிக் கூறல்

கணக்கில்லாத் தாட்சியது வருமென் றக்கால்
கடிதான சீடனுக்குச் சொல்ல லாகா
பிணக்கில்லா பிணக்குவந்து மனம்புண் ணாகும்
பெரிதான பாவம்வந்து மனம்புண் ணாகும்
தணக்கில்லாத் தவந்தானும் அழிந்து போகும்
தாட்சியில்லாக் கோபத்தால் செப்பார் கண்டாய்
துணக்கில்லா சுழித்தவித்த நித்திரை யைப்போல்
துன்பந்தான் எய்தாது சுகந்தான் காணே. 417

(அ.பொ.) :—தாட்சி=தாழ்ச்சி=தாழ்வு ; பிணக்கு=மாறுபாடு : விரோதம், சண்டை.

காணவொரு சீடன்வந் தடுத்தா னானால்
கண்டுமனம் சோதித்து பனிரெண் டாண்டு
தோணவேதான் தொழில்தன்னில் சோம்ப லின்றி
சுருக்காக மனத்தோடே செய்தா னானால்
பூணவேதான் வைப்புமுறைத் தொழிலைப் போதி
பிறகுதானே அழிம்புசற்றுப் பொய்சொன் னாக்கால்
ஆணவேதான் மனதிற்குள் வைத்துக் கொண்டு
அசட்டையாக நீளத்தில் தள்ளி டாயே. 418

(அ.பொ.) :—நீளத்தில்=காலப்போக்கில்.

தள்ளியேதான் சாந்தகற்கு வெளியாய்ச் சொல்லு
சமர்த்தான சீடருக்கு மறைக்கொண் ணாது
வள்ளியேதான் மறவானால் கண்டத் தோர்கள்
வைவார்கள் நமக்குமெத்தக் கொஞ்ச மாகும்
ஒள்ளியேதான் மறைத்துவைத்தால் நாற்றம் போமோ
ஒளிப்பானேன் ஒருசொல்லாய் ஓங்கிச் சொல்வாய்
அள்ளியேதான் கட்டாயங் கட்டி னாரேல்
அடுத்தவர்க்குப் பொய்சொன்னா லார்த்திப் போமே. 419

(அ.பொ.) :—சாந்தகன்=அமைதியாய் இருப்பவன் ; சமர்த்தான=நல்ல திறமையுள்ள ; ஆர்த்தி=வஞ்சம்.



ஆர்த்திகொண்டு சிகாரமது நெருப்பா றப்பா
அடுக்கின்ற உகாரமது மயிர்ப்பா லமாகும்
ஈர்த்திகொண்ட இரண்டதுவு மொன்று மெண்ணில்
ஏதுக்கும் சிகாரத்தை இழுக்க லாகா
வார்த்திகொண்ட வுகாரம்வந்து வசவு முந்தும்
மார்க்கமாமி ரெண்டும்தான் தள்ளிப் போடு
கீர்த்திகொண்ட ரெண்டழிந்தால் கெடியாஞ் சித்தன்
கிளம்பவேதான் ஆகாது ரெண்டுந் தானே. 420

ரெண்டான சிகாரத்தால் கோப முண்டாம்
நேர்ந்தாலே ஆணவத்தால் அகாரந் தூக்கும்
பெண்டான விதுரெண்டும் பெரியோர்க் காகா
பிறப்பிறப்பு விதுரெண்டும் இதனா லாகும்
உண்டான வுடலாச்சு வுகாரந் தானும்
ஓங்கியுமே சிகாரமது வுயிறு பாச்சு
கண்டான விதுரெண்டு முள்ள டங்க
கயிலையுறை சிவன்பாதங் காண லாமே. 421

காணலாமென் றுசொல்லிக்கா லாங்கி நாதர்
கடாட்சித்து இதனுடைய கருவைச் சொன்னார்
பூணலாம்வா சனையைப்பூ ரணத்திற் சேர்க்க
புக்குமதே கண்ணிமைக்குள் வாசல் வந்து
பேணலாமே பிறப்பிறப்பின் வித்து மாகும்
வேதாந்த மவுனத்தை விடாதே யென்றார்
தோணலாம்தான் இதுரெண்டும் துரியந் தன்னில்
சொக்கவுமே முனையடித்துத் தூக்கி டாயே. 422

## சகத்திரவேதித் தோற்றம் (சாத்திரபேதி)

தூக்கியுமே சாத்திரமாம் பேதி தானும்
சுயமான வுற்பத்தி சொல்லக் கேளு
நீக்கியுமே நிசாசுரன்தான் சகத்திர பாகு
நேரான சூரபத்மன் சண்டை தன்னில்
வீக்கியுமே வீரபாகு சகத்திர பாகை
வெட்டியுமே வாளாலே ஆகா சத்தில்
தாக்கியுமே எறிகையிலே குருதி தானும்
தங்கியுமே மலைதனிலே சிந்தித் தன்றே. 423

சிந்தியுமே மலைகளிலே ரவியின் காந்தி
திறமாகப் பட்டிடவே சகத்திர பேதி
அந்தியுமே அடுக்கடுக்காய் பின்னந் தானும்
அழுத்தமாக காவிநிறம் சிவப்பு மாகி
கந்தியுமே கனமாகத் தானி ருக்கும்
கண்டுமேதானு எடுத்துவந்து பொடியாய்ச் செய்து
பந்தியுமே பலம்பத்து நிறுத்துக் கொண்டு
பாங்கான கொள்ளோடு பனங்கள் தானே. 424

கொள்ளோடே வேகவைத்து வுலர்த்திக் கொண்டு
கொட்டியுமே கல்வத்தில் வெடியுப்பு நீரால்
அள்ளோடே தானரைத்து நாலுக் கொன்று
அழுத்தமாக வெங்காரம் கூடப் போட்டு
வள்ளோடே வாதமென்ற குடோரி வீரம்
வகையான திசைகாரக் குடோரி யோடு
தள்ளோடே தானரைத்து வில்லை கட்டி
சாக்கிரமாம் ஓட்டிவிட்டுப் புடத்தைப் போடே. 425

(அ.பொ.) :—வெடியுப்பு நீர்=முறை பா. எண் 242 முதல்; சக்கரம்=வட்டம்.

புடம்போட்டுப் பொடியாக்கிக் குகையி விட்டு
பின்புதானு ருக்கிடவே*சத்து மாகும்
தடம்போட்டுச் சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
தகர்த்துமே பொடியாக்கி குகையி லூது
அடம்போட்டு ஐந்துமுறை ஊதி யூதி
அடைவான சத்தெல்லாம் ஒன்றுய்க் கூட்டி
உடம்போட்டுச் சத்தெல்லாம் ஒன்றுய்க் கூட்டி
உருக்கியுமே நட்பதனில் சாய்த்தி டாயே. 426

(அ.பொ.) :—நட்பு=செய்முறை பா. எண் 305, 306.

உருக்கியுமே பதினைந்து முறைதான் சாய்த்து
உறுகின்ற சூதத்தில் சாரணை செய்து
விருக்கியுமே இச்சத்து விடுவித் தாக்கால்
விடுக்குண்டாம் அசுரனைப்போல் வேக முண்டாம்
நருக்கியுமே இச்சத்துக் களங்கு சுண்ணம்
நாட்டமாக செந்தூரம் முன்போல் செய்வாய்
அருக்கியுமே இரண்டாயி ரத்துக் கோடும்
ஆச்சரியம் காயசித்தி அனுவி லாமே. 427



## ஞானங் கூறல்

அணுகியுமே மூலகுரு பதமே போற்றி
அறியாத பிள்ளையென்று பாட்டர் சொன்னூர்
நணுகியுமே பூரணத்தில் புக்கும் போது
நாதமான வெட்டவெளி அம்ப லந்தான்
திணுகியுமே கரைகாணேன் சிந்தை கூர்ந்தேன்
திட்டிமுன்னே காணயிலும் சித்தோர் காணூர்
இணுகியுமே எட்டைவிட்டு நாலி னுள்ளே
இருக்கிறதே யேற்றமான ஞானந் தானே. 428

(அ.பொ.) :—எட்டு = அட்டமாசித்தி; நாலு = பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

ஏத்தவுமே ஞானத்தில் எய்தக் கூடும்
எட்டவல்ல தூரமல்ல இதமாம் நாலும்
மாத்தமில்லா தென்றுலும் வாழ்வாய் நீயும்
மகத்தான நாலைப்பார் சரமோ டாது
காத்தவுமே கண்டத்தில் மனதை வைத்து
கடிந்துமே ஓடுவதைக் கடுகிப் பாரு
நாத்தமான கைக்கனிபோல் நாலுந் தோன்றும்
நாதாந்தத் தாய்தானும் வாவென் பாளே. 429

வாவென்று தானழைப்பாள் மனேன்ம ணித்தாய்
வரைகடந்தால் கண்டவெளி யாரு மில்லை
ஓவென்று வாழ்ந்ததெல்லாம் ஊன்றிப் பாரு
உலைச்சலான பேய்க்கூற்று உகந்த மாய்கை
பாவென்ற பசிவந்தால் லட்சி யங்கள்
பறிபட்டுப் போய்விடுமே வூனெட் டாது
கோவென்று கைவந்த லட்சி யங்கள்
குழைந்துமேதான் போய்விடுமே கூட்டிக் காணே. 430

(அ.பொ) :—லட்சியம்=குறிக்கோள்; பறிபட்டு=பறிக்கப்பட்டு.

## கல்மதந் தோற்றம்

கூட்டியுமே கல்மதவுற் பத்தி கேளு
குருபரன்தான் என்னுமொரு அந்த கன்தான்
தேடியுமே திருவினையென் றெருபெண் தன்னை
சிறக்கவுமே மணமுடித்து வைத்துக் கொண்டு
பாடியுமே பலியெடுத்து வுண்டு வுண்டு
பசியடங்கி வெகுநாளா யிருக்கும் போது
வாடியுமே வெய்யிலினல் இளைப்புண் டாகி
வந்திருந்து திருவினையைத் தேடி னுனே. 431

(அ.பொ.) :—பலி=பிச்சை.

திருவினைதான் பூக்கொய்யப் போன விடத்தில்
தேவேந்திரன் பதியிருந்து கெந்தர் வந்தான்
புருவினைத்தான் பூங்காவில் போகும் போது
புதிதாக மலர்கொய்த திருவினைக் கண்டான்
இருவினைதான் இருவருந்தான் மைய லாகி
ஏற்றமான மரத்தின்கீழ் புணர்ச்சி செய்தார்
தருவினைதான் இருவருக்கும் தாப மாகி
சாமந்தான் தங்கியேதான் போயி னாரே. 432

(அ.பொ.):—பதி=நகரம்.

போகையிலே திருவினை தான் நேரஞ் சென்று
புழக்கத்தால் மனம்நொந்து சீக்கி ரத்தில்
நோகியுமே வழியோடு மலர்தாங் கொய்து
நொடிக்குள்ளே வந்துகுரு பரனைக் கண்டாள்
ஏகியுமே இந்நேரம் எங்கே போனாய்
இளைப்போடு நானிருந்து இளக்க மானேன்
மோகியையே இன்னேரங் கவையே தென்ன
மொழியென்று குருபரனுங் கேட்டிட் டாரே. 433

(அ.பொ.):—இளைப்போடு=களைப்போடு; இளக்கம்=தளர்வு; கவை=தாமதம்.

கேட்கவுமே திருவினையும் வேறொன்று முனிந்து
கெடியான பூக்கொய்து வந்தே னென்ன
மாட்கவுமே மனக்கவடு தன்னை நீக்கி
வசனிப்பா யென்றுசொல்ல மனங்க லங்கி
வேட்கவுமே வுள்ளபடி மேல்லோ கத்து
மேன்மையான கந்தருவன் ஒருவன் வந்து
தாட்கவுமே தழுவியென்னைச் சேர்ந்திட் டான்காண்
சத்தியது வுண்மையெனச் சாற்றி னாளே. 434

(அ.பொ.):—மனக்கவடு=மனத்தின் ஒளிவு (வஞ்சம்).

சாற்றியதோர் மொழிகேட்டுத் தடுமா றித்தான்
தரியாமல் மனஞ்சற்றுக் கோப முற்று
காற்றியதோர் கவடுசதி பண்ணி னதால்
காமத்தால் கல்லாவா யென்று சொல்லி
தோற்றியதோர் குருபரனும் சாப மிட்டார்
கோதையுமே ருதுவான கல்லா கித்தான்
மாற்றியதோர் மலைதோறும் தோற்ற மாச்சு
மகத்தான கல்மதமெ னுநாம மாச்சே. 435



## கல்மத அடையாளமும் அதன் சத்தும்

ஆச்சென்ற கல்மதத்தின் அடையா ளங்கேள்
அதுங்காமல் கட்டியாகத் தானி ருக்கும்
போச்சென்ற சதைப்பொன்றும் சிவந்த ரேகை
புகழாக மயிர்போலே நீண்டு வீழும்
வேச்சென்ற விளக்கதனில் வாட்டி னுக்கால்
மேன்மையான அரக்குபோலே இளகிப் போகும்
தோச்சியேதான் வெங்காரம் ரவியி லேழு
தினம்போட வெங்காரம் கட்டிப் போமே. 436

கட்டியதோர் வெங்காரம் பலமு மைந்து
கல்மதந்தான் பலம்பத்து கல்வத் திட்டு
வெட்டியதோர் வெடியுப்பு நீரா லாட்டி
மிக்கான வாதமென்ற குடோரி பலந்தான்
தட்டியதோர் சவ்வீரம் பலமு மொன்று
தனியான திசைகாரக் குடோரி பலந்தான்
பட்டியதோர் பஞ்சமித்தி ரத்தை யிட்டு
பாங்காக அரைத்துநன்றாய் வில்லை கட்டே. 437

(அ.பொ.):—வெடியுப்பு நீர்=செய்முறை பா. எண் 242 முதல் பார்க்க; வாதகுடோரி=பா. எண். 255 முதல்; பஞ்சமித்திரம் 305 பாடல் முதல்.

நன்றாக வில்லைதட்டிக் காயப் போட்டு
நாட்டமாக ஒட்டிவிட்டுப் புடத்தைப் போடு
பன்றாகப் பொடிபண்ணிக் குகையி லிட்டு
பெருந்துருத்தி ரெண்டுவைத்து பில்லை யூது
மன்றாக முத்துபோலே மணியி றங்கும
மாசற்ற சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
கன்றாக கரடெடுத்துப் பொடித்திட்டு ருக்கு
கசடகற்றிக் கழித்தப்பால் கிண்டி தானே. 438

கிண்டியுமே கோலாடித் தூக்கி விட்டுக்
கீழுக்குக் கரிபோட்டு மேலும் போடு
நிண்டியுமே குகைசுற்றும் கரியைத் தள்ளு
நெருப்புபோலே குகைசிவந்தால் கோலா டிப்பாரு
தண்டியுமே கோல்தானும் தடையில் லாமல்
தண்ணீரில் விட்டதுபோல் கைக்குக் காணில்
உண்டியுமே ஓடுதன்னில் சாய்த்துக் கொண்டு
உருண்டிருந்த சத்தெல்லாம் பொருக்கிக் கொள்ளே. 439

பொருக்கியுமே முத்தைப்போ லான சத்தைப்
புறம்பாக வைத்துமேதான் கரடு தன்னை
நறுக்கியுமே பொடிசெய்து மறுகு கையிலிட்டு
நன்றாக வுருக்கியேதான் சத்தை வாங்கு
உறுக்கியுமே வுருக்கினதோர் குகையுள் தன்னில்
உயர்ந்தமருந் திட்டுமேதான் ஊதி னுக்கால்
விருக்கியுமே விரிந்துமேகு ழகுழப் பாகி
மேன்மையான சத்தெல்லாம் கெட்டுப் போமே. 440

## உலையில் ஊதும்முறை கூறியது

கெட்டுமேதான் உலையில்வந்து வுருகி வீழ்ந்து
கெட்டியாக மண்பிடித்துக் கரியாய்ப் போகும்
புட்டுமேதான் புதுக்குகையில் வைத்து ருக்கு
போராக மூன்றுவிசை யூதி னுக்கால்
தொட்டுமேதான் துருத்தியதைப் பிடுங்கி வைத்துச்
சோதித்துத் தூள்கரியின் மண்ணைப் போக்கி
நட்டுமேதான் நாளமெல்லாம் குத்தி விட்டு
நாட்டியேதான் முன்போலே வுருக்கி டாயே. 441

(அ.பொ.) :—நாளம்=குழாய்.

உருகையிலே பெருங்கரியாய் கல்தான் ஓடு
ஒன்றில்லா தாராய்ந்து புடைத்துப் போடு
மருகையிலே மண்செங்கல் ஓடுண் டானால்
மாசற்ற குகையதுவும் பிளந்து கொண்டு
கருகையிலே கரடுகட்டி யுப்பிப் போகும்
கடிசான பொடிக்கரிதான் இட்டே யூதில்
தருகையிலே சத்ததுவும் கரடு கட்டித்
தண்ணீர்போ லாடாமல் முறுகிப் போமே. 442

முறுகிப்போம் உலைக்கடந்தான் சோதி யாட்டால்
மீறியே யூற்றதுவும் பறிந்தி டாது
மறுகிப்போம் சத்ததுவும் வாரா மல்தான்
மாண்டுமேதான் சரக்கெல்லாம் மாய்ந்து போகும்
இறுகிப்போம் பெருந்துருத்தி இல்லா விட்டால்
இசைந்ததுமே துருத்திரெண்டு யூத வேண்டும்
குறுகிப்போம் கோலாடில் ஒன்றாய்ச் சேரும்
குமுறியேதான் உருகிடுமே துருத்தி ரெண்டே. 443



ரெண்டான துருத்திகொண்டு சத்தை யூது
நேர்ப்பாகச் சூலமாங்கு ரட்டால் தூக்கு
குண்டான குகைமண்ணால் மேலே மூடி
குகையிலே புடம்போட்டு மருந்தை மூடு
பண்டான பச்சையாய் மருந்தை யிட்டால்
பளிச்சென்று விட்டுப்போம் யிர மூறி
புண்டான புடம்போட்டு பொடித்துப் போட்டு
பிசகாமல் மண்கட்டி யுருக்கி டாயே. 444

உருக்கிட்டு ஐந்துமுறை தீர்ந்த பின்பு
ஒன்றாகக் கூட்டியுமே சத்தெல் லாந்தான்
அருக்கிட்டுக் காரமிட்டுத் தானு ருக்கு
ஆதியான மித்திரனில் சாய்த்துக் கொண்டு
தருக்கிட்டுக் குளிகைக்குச் சாரணை செய்ய
தங்காமல் ககனத்தில் ஓடும் போது
துருக்கிட்டுச் சோபமில்லை தாப மில்லை
சுத்தியெங்கும் நிமிடத்தில் வருக லாமே. 445

## கல்மதச் சத்துக் கிண்ணி

வருகலாமே கல்மதத்தின் சத்து தானும்
வகையாகப் பலம்நாலு வுருக்கிக் கொண்டு
தருகலான் தங்கமது பலமும் போட்டு
சந்தித்து வுருக்கியேதான் கிண்ணி வார்த்து
அருகலாக சூதமொடு சாறும் விட்டு
அழகான வாலுகையின் மேலே வைத்து
கருகலாக நாலுசாமம் எரித்தா யானால்
கருதவேதான் வெண்ணெயைப்போ லாகுந் தானே. 446

(அ.பொ.) :—சந்தித்து=கூட்டி.

வெண்ணெயைப்போ லானதொரு சூதந் தன்னை
மிக்காக வழித்தெடுத்து பொன்மத் தங்காயுள்
திண்ணையைப்போல் வைத்துமவிப் புடமே பத்து
சிறப்பாகப் போட்டுமேதான் சூடன் தீயில்
வண்ணையைப்போல் வாட்டியேதான் சாம மொன்று
மழுங்கலான இரும்பான கரண்டி தன்னில்
எண்ணெய்விட்டு வுருக்கியேதான் எடுத்துக் கொண்டு
ஏற்றமான செந்தூரம் களங்கு பண்ணே. 447

களங்கோடு செந்தூரம் பண்ணு பண்ணு
கற்பழிந்த மங்கையவள் கல்லாகினதால்
உளங்கொடுக்கா காமக்கல் தீட்ட மாகி
ஒழுக்கெடுத்து ருதுவான கல்மதத் தின்சத்து
பளங்கொடுத்து வெகுதூரம் நெட்டி யேறும்
பார்தனிலே ஆட்டதனில் பரிந்த ஆட்டு
அளங்கொடுத்து காயசித்தி ஏம சித்தி
அட்டமாசித் தியெல்லாந்தான் ஆட லாமே. 448

## நல்லுபதேசம்

ஆடியுமே மனசொன்றி வாசி கூட்டி
அசையாமல் நின்றுமேதான் கருதிப் பாரு
தேடியுமே வாதம்வந் துதாயைப் போற்றி
செய்கிறது எதுவேலை என்று செப்பும்
நீடியுமே வாதத்தே நில்லென்று சொல்லி
நித்தியக ருமங்களுக்குக் கொஞ்சம் வாங்கி
கூடியுமே புசிப்பதற் கெடுத்துக் கொண்டு
குணத்தோடு போவென்று சொல்லி டாயே. 449

சொல்லியுமே மவுனமாக இருந்து கொண்டு
சித்தருட போக்கிலேதான் சென்றே ஆடி
ஓல்லியுமே ஒன்றுமறி யாதார் போலே
ஊமையைப்போ லிருந்துகொண்டு கருவைப் பாரு
கெல்லியுமே ஒவ்வொன்று யறிந்து கொள்ளு
கர்வமாகத் திரியாதே தொண்டு பண்ணு
மல்லையுமே வேலைகொள்வார் மார்க்கம் சொல்வார்
மாளொட்டார் மார்க்கமாய்த்தான் மருவி டாயே. 450

(அ.பொ.) :—கெல்லி=தோண்டி ; மல்லை=வன்மை, திறமை.

மருவியுமே ககனமெல்லாம் சுற்று தற்கு
வகைசொல்லி மார்க்கமான குளிகை யீவார்
திருவியுமே கல்லாத மூட ரென்றால்
சித்தியான மணிதன்னால் சேர்ந்து கூடு
முருவியுமே மனமுன்னில் எல்லா மாகும்
முகந்துமனம் பாவாட்டால் எல்லாம் பேரச்சு
புருவியுமே பொல்லாதார் லோகத் துள்ளே
பேசாதே இம்முறைகள் மவுனங் கூடே. 451

(அ.பொ.) :—பாவாட்டால்=நாடாவிட்டால்.



## நீலாஞ்சனக்கல் தோற்றம்

கூடவேநீ லாஞ்சனத்தின் தோற்றங் கேளு
குறிப்பாகச் சொல்லிடவே ஐந்து கூறும்
தேடவேதான் சிவன்தானும் பூரு வத்தில்
திரிபுரத்தை தகனந்தான் செய்யும் போது
நாடவேசி வன்நகைக்க அனல்தீ தோன்றி
நலங்கியுமே திரிபுரந்தான் எரியும் போது
காடவேதான் காடுமலை நாடெல் லாந்தான்
கருகியுமே எரிந்திட்டுச் சாம்ப லாச்சே. 452

(அ.பொ.) :—கூறு=பாகுபாடு, வகை ; நலங்கி=ஒழுங்கீனமாகி.

ஆச்சேதான் மலைபற்றி எரியும் போது
அடர்ந்தமலை வெந்துருகி தாது தானாய்
போச்சேதான் பூமிக்குள் தான்வி ழுந்து
பெரிதான அஞ்சனக்கல் தானு மாச்சு
ஏச்சேதான் இப்படியே தோற்ற முற்ற
எழிலான பேதமது ஐந்துண் டாச்சு
வாச்சேதான் ஐந்துடைய வகையே தென்னில்
வலிந்தபுட்பாஞ் சனமும்ர சாஞ்ச னமாமே. 453

(அ.பொ.) :—அஞ்சனம்=மை=கருப்பு.

அஞ்சனந்தான் சவ்வீராஞ் சனமு மாச்சு
அடர்ந்தசுரோ தாஞ்சனம்நீ லாஞ்ச னம்தான்
பஞ்சனந்தான் பேதங்க ளஞ்சு மாச்சு
பசந்தபுட்பாஞ் சனந்தானே தவள மாகும்
தஞ்சனந்தான் சயித்தியமாம் மதாந்த ரமாகும்
தறித்தெடுக்கும் விக்கல்களைச் சாடிப் போகும்
லஞ்சினந்தான் எலும்புக்குள் சரத்தைப் போக்கும்
இளநஞ்சு போக்குவிக்கும் கணித மாமே. 454

(அ.பொ) :—தறித்து=வெட்டி ; சாடி=தாக்கி ; இளநஞ்சு=சிறு விடம் (சிறுபாம்பென்பாருமுண்டு).

## இரசாஞ்சனத் தோற்றம்

இதமான ரசாஞ்சனந்தான் சொல்லக் கேளு
ஏத்தமான ரித்தியாந்தன் என்றேன் தானும்
மதமான அசுரன்தான் காயசித்தி யேக
மதிப்புமிக்க ரசந்தன்னை வெகுநாள் தானும்

பதமானம் செய்தேதான் தின்று தின்று
பாங்கான மலந்தானும் நிலத்திற் குள்ளே
நிதமான பிட்டியுந்தான் கிட்ட மாகி
நேர்ந்துமதே ரசாஞ்சனந்தா னுலு மாச்சே. 455

(அ.பொ.) :—பதமானம்=பக்குவம் ; பிட்டி=உலர்ந்த கழிவுப் பொருள்கள் ; கிட்டம்=அதிக வேக்காடு கொண்ட பொருள்.

நாலுரசாஞ் சனந்தன்னின் வண்ணங் கேளு
நாடியதோர் வெளுப்பொன்று சிவப்பும் ஒன்று
காலுவான கருப்பொன்று பொன்னி றமொன்று
கடிந்திதற்குள் நாலினுட குணத்தைக் கேளு
வேலுவெள்ளைச் சவ்வீராஞ் சனக்கு ணந்தான்
மிக்காகப் பொறியுண்டாய்க் கனத்து வெள்ளை
வாலுவெள்ளை வைகிராந்தக் கல்லு போலும்
மார்க்கமாகத் தானிருக்கும் கண்டி டாயே. 456

(அ.பொ.) :—வண்ணம்=நிறம்.

கண்டுவுமே பொடியாக்கில் சிவப்பு மாகும்
கருதியுமே சூதபந்தம் கணத்தி லாகும்
திண்டுவுமே நவலோகத் தீந்தா யானல்
சிவந்துவுமே கனகமய மாகும் பாரு
விண்டுவுமே வெகுவேதை சொல்லொண் ணாது
மிக்காக கருப்புக்கு விவரங் கேளு
நிண்டுவுமே நீலாஞ்ச னம்பதந் தான்பத்து
நேரான சூதமது பலந்தான் ஒன்றே, 457

(அ.பொ.) :—சூதபந்தம்=இரசக்கட்டு.

ஒன்றுமேபொ டித்தெஃகுத் தூள்ப லம்பத்து
ஒக்கவுமே குகையிலிட்டு துருத்தியா லூது
பண்டுவுமே வுருகியெல்லாம் மதிக்கட்டி யைப்போல்
பக்குவமாய் தானிருக்கும் நிறுத்துக் கொண்டு
தண்டுவுமேநான் கிலொன்றுசரி கைவெள் ளிகூட்டி
தளும்பவுமே வுருக்கியெல்லாம் ஓட்டில் சாய்க்க
கண்டுவுமே கறுத்தசவ்வீ ராஞ்ச னந்தான
கனத்துவமே நீலவண்ண அழகு மாமே. 458

அழகாகத் தானிருக்கும் கனியந் தன்னில்
அணுகினலே ஐந்நூறு மாற்றுக் காணும்
நழகாக ரசிதசவ்வீ வீராஞ் சனந்தான்
நாட்டியேதான் கல்வத்தில் பொடியாய்ச் செய்து



பழகாக வொருபக்கம் இரும்பு வண்ணம்
பாங்காகத் தானிருக்கும் ஒருபக் கந்தான்
உழகாக வூருகின்ற செம்பு வண்ணம்
உகந்துவுமே தானிருக்கும் முயர்வு தானே. 459

உயர்த்தியான பச்சையிலே வேதை யாகும்
உயர்ந்ததுவோர் சவ்வீராஞ் சனத்தைக் கேளு
புயர்த்தியாக பொடிபண்ணில் இரும்பு நிறமாம்
பொன்றுமேதான் காண்பிக்கும் பொருந்திப் பார்த்தால்
துயர்த்தியான சூதவடி வாகக் காணும்
தோன்றியபின் மறுநாள்தான் பொன்வண் ணம்போல்
இயர்த்திஇந்தப் படிகண்டால் ஏமசவ் வீரம்
இதனினந்தான் காயசித்தி ஏமசித்தி யாமே. 460

சித்தியாக நஞ்சோடு தொண்டைப் புகைச்சல்
சிறந்தவிக்கல் கண்ணில்தான் சேரும் நோய்கள்
நத்தியான குருதிபித்தம் புண்க ளெல்லாம்
நாசமாகப் போக்கிவைத்து நன்மை யாகும்
அத்தியான சுரோதாஞ்ச னவாண்மை கேளு
அதியபுத்துத் தலைநிறமாய்க் கண்வி ழுந்து
நித்தியாகத் தானிருக்கும் உடைத்துப் பார்த்தால்
நீலம்போல் பூநிறந்தான் காணுங் காணே. 461

காணவுமே தூள்செய்யில் காவி வண்ணம்
கண்டிந்தக் குணமிருந்தால் சுரோதாஞ் சனந்தான்
வாணவுமே வாதத்திற் கருவி தாகும்
மதிப்பான கனியத்தில் ஏம மாகும்
பூணவுமே குளிர்ச்சியுமாய்க் ககன மாகும்
பெருந்துவர்ப்பாய் சாதுவாய் மழம ழத்து
தோணவுமே பித்தத்தைச் சிலேத்து மத்தை
துரிதவிக்கல் வாந்திவிட்டக் குருதி போமே. 462

போமேதான் நீலாஞ்ச னத்தைக் கேளு
பெரிதான நீலப்பா டாண மாகும்
காமேதான் மிகக்கனமாய் நெய்ப்பாய் நீலம்
கரிசல்வண் ணம்போன்றி ருக்கும் குணமே
தாமேதான் தங்கத்தைப் பற்பஞ் செய்யும்
தாரங்கள் லோகங்கள் நீறு மாகும்
நேமேதான் கண்ணோய்கள் சயங்கள் தம்மை
நிச்சயமாய்ப் போக்கி வைக்கும் நீதான் பாரே. 463

(அ.பொ.) :—தாரம் = தாளகம் ; லோகங்கள் = (உலோகங்கள்) தங்கம், வெள்ளி முதலியவை; நீறு=பற்பம் ; சயங்கள்=குறைநோய் (க்ஷயம்).

## நீலாஞ்சனச் சத்து

பாரேதான் நீலாஞ்சனம் பலந்தான் பத்துப்
பாங்காகத் தூள்செய்து கிழியே கட்டி
காரேதான் காடியிலே கொதிக்க வைத்துக்
கலந்துந்தான் ஒருசாம மெரித்த பின்பு
போரேதான் உலரவிட்டுக் கல்வத் திட்டு
பொரித்ததுவோர் வெங்காரம் பலந்தான் போடு
தேரேதான் திசைகாரக் குடோரி யரையே
செப்பமாக வீரமரைப் பலமும் போடே. 464

போட்டெல்லாம் வெடியுப்பு நீரா லாட்டி
பெரிதான வில்லைதட்டிப் புடத்தைப் போடு
கூட்டெல்லாத் தூள்செய்து குகையி விட்டு
கோரமாக வூதியேசத் தெல்லாம் வாங்கு
பூட்டெல்லாம் சத்ததுவும் ஈயம் போலாம்
பொருக்கியுமே வேறேவைத்துக் கரடு தன்னைத்
தீட்டெல்லாம் தூள்செய்து புதுக்குகையி விட்டு
செம்பியுமே உலையில்வைத் துருக்கி டாயே. 465

உலையில்வைத் தைந்துமுறை யுருக்கித் தானும்
ஒருமிக்கச் சத்தெல்லாம் மறுகுகையி லிட்டு
அலையவுமே ஆறவிட்டு ருக்கிக் கொண்டு
ஆதியான நட்பதனில் பதினெ ருக்கால்
கலையினிலே சாய்த்திட்டு வைத்துக் கொண்டு
காணியான சூதத்தில் சாரணை செய்து
மலையினிலே இருக்கின்ற அதிச யங்கள்
வடகடலும் தென்கடலும் காண லாமே. 466

## நீலாஞ்சனக் களங்கு

காணலாமெ னுஞ்சத்து பலந்தான் நான்கு
குற்றமிலாத் தங்கமது பலந்தா னென்று
ஊணலாகக் குகையிலிட்டு வுருகும் போது
உறப்போடு தங்கமெடை நாகம் போடு



தோணலாகச் சூதமது பலமு மொன்று
சுத்தியான கந்தியது பலமு மொன்று
ஆணலான அரிதாரம் பலமு மொன்று
அரைத்துமேமூன் றையும்பொற் றலையா லாட்டே. 467

(அ.பொ.) :—காணலாமெனுஞ்சத்து=நீலாஞ்சனச் சத்து.

ஆட்டியுமே வுருண்டைசெய்து சத்துருகு முகத்தில்
ஆதரவாய் உருண்டையைத்தான் சுருக்குப் போடு
ஊட்டியுமே உருண்டையெல்லா மான பின்பு
உகந்துமேதான் எடுத்துப்பார் களங்கு மாகும்
நாட்டியுமே நவலோகம் நூற்றுக் கொன்று
நலமாக வுட்கொண்டு கனகம் பத்தாம்
தீட்டியுமே செந்தூரம் செய்தே யுண்ணு
சிறந்தகதி ரொளிபோலே தேக மாமே. 468

தேகசித்தி லோகசித்தி ககன சித்தி
சிறந்ததான வாசிசித்தி எல்லா மாகும்
பாகசித்தி ஐந்தான அஞ்ச னத்தில்
பகரவேதான் ஒவ்வொன்றில் கோடி சங்கம்
யோகசித்தி சீக்கிரத்தில் உகந்து கூடும்
ஒவ்வொன்றுக் கொவ்வொன்று இதிலே பேதம்
வேகசித்திக் கோடிக்குத் தாண்டி யோடும்
வெகுபோக்கு வுண்டிதிலே ஆடிப் பாரே. 469

## நற்புத்திக் கூறல்

ஆடியுமே கனகத்தைக் கண்ட போதே
அழிம்பான புத்தியினால் பெண்ணைக் கண்டு
தேடியுமே தொடராதே கற்ப முண்ணு
திறமாக மனமுன்னி சமாதி புக்கு
வாடியுமே மனதைவிட் டால் ஞானம் போச்சு
மிக்கவுமே ஆசையது வளர்ந்து போச்சு
பாடியுமே கையிலகப் பட்ட பறவைப்
பாங்கதுபோல் பிறவிக்கு ளகப்படு வாயே. 470

படுகுவாயே யோனியிலே பிறப்பு கோடி
பயின்றபின்பு நற்பிறப்பு எய்த மாட்டாமல்
முடுகுவாயே முன்செய்த பலத்தி னாலே
முயன்றுமேதான் நற்பிறப் பெடுக்க வேணும்

நிடுகுவாய்தான் வேதாந்தம் நிலைத்துப் பாரு
நினைவுன்னி யாதாரம் ஏறிக் கூடு
நடுகுவாயே நான்கையும்நீ நாடிக் காணாய்
நலங்கியேதான் விட்டாக்கால் பிறப்பு மாச்சே. 471

பிறப்புந்தான் கோடானு கோடிப் பிறப்பு
சேர்த்துநீ பிறப்பெல்லாம் மனிதப் பிறப்பு
பிறப்புத்தான் மறுபடியும் பிறக்க மாட்டாய்
சிறப்புள்ள பெரியோர்கள் சொன்ன பேச்சு
பிறப்புந்தான் வெகுபிறப்பு நற்பிறப்புக் கடிது
குவலயத்தில் மேன்மேலும் ஏற வேணும்
பிறப்புத்தான் மாப்பிறப்பு ஒழிக்கா காது
உடலிருக்க காயசித்தி சேரப் பண்ணே. 472

### கருங்கல்-தோற்றம்

பண்ணியதோர் கருங்கல்லுத் தோற்றங் கேளு
பரசிவனை யர்ச்சித்து யாகம் செய்தான்
வெண்ணியதோர் வெகுநாளாய் அசுரன் தானும்
விளங்கியதோர் நாமமது அந்தகா சூரன்
எண்ணியதோர் தவம்புரிந்தான் ஏதுக் காக
என்றவனை சிவன்கேட்க அசுரன் சொல்வான்
தண்ணியதோர் உடல்தானும் மரித்த போது
தகனந்தான் பண்ணாமல் தயவாய்த் தானே. 473

(அ.போ.) :—தகனம்=எரித்தல்.

தயவாக அருள்புரிந்து கடாட்சித் தாக்கால்
தங்கியேதான் சடத்துக்குள் உயிரோ டொக்க
கயவாகக் கருங்கல்லாய்ச் சகல ருந்தான்
கண்டுமேதான் தொழத்தக்கக் காட்சி யுண்டாய்
வியவாக விக்கிரகக் கல்லாய்த் தானும்
வேணுமென்ற ருள்புரியு மென்று கேட்க
வயவாக வலித்துமே யேகி னார்தான்
வண்ணமாக அசுரன்தான் மீண்டிட் டானே. 474

மீண்டுவந்து வெகுநாளாய் நாடு தன்னை
விரும்பியுமே ஆண்டுமிக மனஞ்ச லித்து
மாண்டுமேதான் உடலுயிரும் கல்லாய்ப் போனான்
மக்கான படிமமுமே கல்லு மாகி
பூண்டுமேதான் விசுவகன்மா பல்வி தமாக
பேரான தேவதையாய்ச் சமைத்து விட்டான்
காண்டுவமே கைதொழுதார் எல்லா ருந்தான்
காட்சியான கருங்கல்லாய்த் தானா னானே. 475



### கருங்கல் சத்து

தானான கருங்கல்லின் சத்து கேளு
தாங்கான கல்மதம்போல் சத்து வாங்கி
கோனான குளிகைக்குச் சாரணைத் தீர்த்தால்
குளிர்ச்சியுமாய் கதிர்கள்தாம் மேல்தா வாது
பானான சத்துக்குள் தங்க மிட்டு
பாங்கான சூதமொடு தாளகம் போட்டு
தேனான கந்தியிட்டு செந்தூ ரித்துண்ணு
சிறுகதிர்போல் மேனியுமாம் நூற்றுக் கொன்றே. 476

(அ.போ.):—சிறுகதிர்=இளஞ்சூரியன்.

### நூல் சொல்லத் தகாதவர்

ஒன்றான பெரியோர்கள் சொன்னால் காது
உற்றதனைத் தான்கேட்டுங் கேளார் போலே
கன்றான கருவி வந்து காதில் தானும்
கடுஞ்சத்தம் கேளாமல் அடைத்துப் போகும்
குன்றான குருவந்து முன்னே நின்று
குணமான போதத்தைச் சொன்னா லுந்தான்
அன்றான அந்தகன்போ லாரோ வென்று
அடைவாகக் கேளார்கள் அசடர் தானே. 477

அசடான மூடர்கட் கிந்த நூலை
அளித்தாக்கால் அனேகந்தான் நரக மெய்தும்
கசடான பயல்களுக்கு வாத நூலைக்
காட்டினாலே வெகுவினைகள் கண்முன் காணும்
துசடான அறிவோர்க்கு இந்த நூலை
சூட்டினால் சூட்சத்தில் சொர்க்க மாகும்
பசடான மனம்பார்த்து சோதித் துத்தான்
பக்குவமாய்ச் சீடருக்கு வாதம் சொல்லே. 478

சொல்லவுமே ஆனந்தந் தோடிதத் தோடே
சூட்சமுமாய் இன்னூலின் சொருபங் கண்டு
வல்லவுமே சித்தியாகவ றுமைபோ லுண்டு
மனத்தையெங்கும் சொல்லொட்டார் போதம் பார்ப்பாய்
சுல்லவுமே வார்த்தைதனைச் சொன்னோ ருக்குச்
சுத்தமான வங்கிசங்கள் நூறு முத்தி
அல்லவுமே பூரணத்தில் மருவும் பாரு
அறிவுள்ள வர்க்களித்தால் அடையுந் தானே. 479

(அ.போ.) :—வங்கிசங்கள்=வம்மிசங்கள்=கிளைகள்; பின்தோன்றல்கள்; இதம்=அன்பு.

அடையாது துன்மார்க்கர்க் களித்தால் நூலை
ஆதியான கிளைகளெல்லாம் நரக மெய்தும்
கிடையாது வாதமென்றும் பொய்யாய்ப் போகும்
கேளாது தசநாதம் காதில் தானும்
படையாது சித்தியென்றும் பொய்யாய்ப் போகும்
பெற்றாளும் அப்பனுந்தான் பிரிந்து போவார்
இடையாது துலாத்தோர்க் கெல்லாம் கிட்டும்
ஏதேது பார்த்தாலும் பொய்யா காதே. 480

## படிகக்கல் தோற்றம்

பொய்யாத படிகக்கல் பிறவி கேளு
பூசைசெய்தார் நாதாந்தி சுகந்த மாலை
எய்யாத இந்திரன்தான் மலைக ளெல்லாம்
ஏற்றமான வச்சிரத்தால் சிறகைக் கொய்ய
பையாத பருவதத்தில் நின்று தானும்
பளிச்சென்று படபடத்துப் பொறிகள் வீழ்ந்து
துய்யாதப் பிரகாசத் தோடுச் சுவாலைச்
சிறிதாகப் பொடிவிழுந்துப் படிக மாச்சே. 481

(அ.பொ.):—வச்சிரம்=குலிசம் (இந்திரன்படை).

## படிகக்கல் சத்து

படிகந்தான் பஞ்சலோகங் கலையெல் லாம்தான்
பற்பங்கள் செய்துவைக்கும் பாக மாகும்
திடிகந்தான் சூதமது தீபன மாகும்
சித்தியர்க சாரணைக்குச் சுருக்கு மெத்த
தடிகந்தான் முன்போலே சத்து வாங்கி
தாயிட்டுச் செந்தூரம் செய்து வுண்ணு
வடிகந்தான் வயிரம்போல் உடல தாகும்
மாசற்ற லோகத்தில் ஆயிரத்துக் கொன்றே. 482

(அ.பொ.):—படிகம்=படிகக்கல்; தாய்=தங்கம்; வடிகந்தான் = வடிவம் (அழகு).

ஒன்றியுமே நூல்பார்த்து மகிழ்ச்சி யுற்று
உயர்ந்ததான பொன்பார்த்து மகிழ்ச்சி யாவார்
புன்றியுமே பொன்பருவந் தன்னைப் பார்த்து
புளகித்து மெய்மறந்து மகிழ்ச்சி யாவார்



அன்றியுமே அறுசுவையில் மனமு மூண்டு
அதிகமான மதத்தினாலே மகிழ்ச்சி யாவார்
வன்றியுமே வானந்தம் தாண்டிப் போன
வரையதனை ஒருவருந்தான் காணார் காணே. 483

## பூசை விளக்கம் விளம்பல்

காணாத வானந்தம் கடந்து போன
கடுவெளியாம் கொடியவெளித் துரியம் புக்க
தோணா வானந்தத் தாயி பாதம்
தோத்தரித்து மனதிற்குள் பூசை பண்ணு
பூணாத பிரம்மத்திற் குபசா ரந்தான்
பிரியமான பாலேது பழமு மேது
தூணாத தீபந்தான் தூப மேது
செப்புவாய்தான் பிரம்மமுன்னு மோசொல் லாயே. 484

சொல்லவுமே வுண்மையான மனதே பூசை
சுத்தமனத் தன்பேதான் பாலு மாகும்
புல்லவுமே புத்திபுட்பம் விவேக மன்னம்
பொறுமையான சாந்திநீர்தான் தெளிவே தூபம்
தெல்லவுமே கோடான கோடி சித்து
தெளிந்துபாரே உனதுள்ளே சிந்தை கூர்ந்து
உல்லவுமே வுனக்குள்ளே இருந்த சித்தை
ஓமென்று வெளிநோக்க வுருவ மாமே. 485

வெளியேதான் பாலன்னம் வத்து தூபம்
மிக்கான தீபவுப சாரந் தானும்
களியேதான் கல்லதுவும் பேசுமோ சொல்
கடந்துமேதான் அண்டரண்டம் நிறைந்த சோதி
ஒளியேதான் உனக்குள்ளே யெல்லாம் பாரு
உருகுமேதான் உயர்ந்திட்ட சோதி தானும்
அளியேதான் ஆதியில்லை அந்த மில்லை
ஆனந்தந் தனிலமுந்தி யாடி டாயே. 486

## சுக்கான் தோற்றம்

ஆடவுமே சுக்கான்கல் தோற்றங் கேளு
அரக்கன்தான் அவன்பேரு சுக்கா சூரன்
நாடவுமே இருடிபன்னி நவரத் தினத்தின்
நாடியேதான் ஆபரணந் தன்னைத் தானும்

ஓடியேதான் பறித்துமவன் கொண்டு போனுன்
ஊரார்தன் னுடமைதனக் காசை கொண்டு
தேடியேதான் பறித்தாயே அசுரா நீயும்
சிறுகல்லாம் சுக்கான்கல் ஆகென் றுளே. 487

சுக்கான்கல் லாகென்றே இருடி தேவி
செப்பமாக சாபமிடச் சுக்கா னுனுன்
இக்கான கல்தனிலே யியம் மெத்த
ஏற்றமான படிநான்கு அளந்து கொண்டு
மக்கான கல்தன்னை யொருபாண் டத்திட்டு
வாழையுட கிழங்குச்சாறு படிதான் பத்து
புக்கான கல்பாண்டம் தன்னில் வார்த்து
பேரான ரவிதனிலே வைத்தி டாயே. 488

## சுக்கான் தூய்மை

வைத்திடவே மாதந்தான் புளிப்பு மேறி
வாகன காடியாகு மட்டாய் வாங்கி
உய்த்திடவே சுக்கான்கல் உடைத்து தானும்
ஊறவைப்பாய் வாழையான காடிக் குள்ளே
நைத்திடவே நால்சாமம் ஊற வைத்து
நன்றுகக் கொதிக்கவைத்துக் கழுவி வாங்கி
மைத்திடவே வெடியுப்பு நீரா லாட்டி
வாகான பலம்பத்து சுக்கான் தானே. 489

## சுக்கான்கல் சத்து

வாகான பலம்பத்து சுத்தி சுக்கான்
வாதமென்ற குடோரியொரு பலந்தான் போடு
தேகான திசைகாரங் குடோரி யொன்று
சிறப்பான கரட்டரிதார மொன்று போடு
தாகான சவ்வீரம் பலந்தா னென்று
தாக்கியரை வெடியுப்பு நீரி னுலே
வேகான வில்லைதட்டிப் புடத்தைப் போடு
விடுக்கான குகையிலிட்டு வுருக்கி டாயே. 490

(அ.போ.) :—வாதகுடோரி; செய்முறை பா. எண் 255—256.

உருக்கவுமே யியம்போல் சத்து மாகும்
உறுதியாக சத்தெல்லாம் பொருக்கிக் கொண்டு
மருக்கவுமே பின்பொருக்கால் மாட்டி யூது
மணியெல்லாம் பொருக்கியேதான் மாட்டி யூது



அருக்கவேதான் ஐந்துமுறை உருக்கி யாட்டி
ஆனபின்பு சத்தெல்லாம் ஒன்ருய்க் கூட்டி
தருக்கவேதான் நட்பதனில் உருக்கிச் சாய்த்து
சத்தெடுத்துச் சாரணைதான் செய்தி டாயே. 491

செய்திடவே அசுரன்போல் வேக முண்டாம்
சீக்கிரத்தில் அண்டரண்ட பதமும் தாண்டும்
மய்திடவே மனிதனக்குக் கடுவோட் டத்தான்
மாட்டிடவே முடியாது அளவு தானும்
கொய்திடவே தங்கமிட்டு செந்தூரித் துண்ணு
குடதிசையில் போயிருக்கும் பருதி போலாம்
நய்திடவே நவலோகம் நூற்றுக் கோடும்
நலமான மாற்றதுவும் பத்து மாமே. 492

## இரசமணி பேதங்களும், செய்முறையும்

ஆமென்ற சத்ததுநூற் றிருபத் தெட்டு
அடுக்காக வெவ்வேருய்ச் சத்தை வாங்கி
தாமென்று அணைந்துமேசா ரணையைச் செய்து
தனித்தபின்பு பாடாணம் இருபான் நான்கும்
ஓமென்றே ஒவ்வொன்ருய்ச் சத்து வாங்கி
ஊட்டியேதான் சாரணைகள் செய்த பின்பு
நாமென்ற நவலோகச் சத்தை யூட்டு
நாடியபின் நவரத்தி னசத்தை யூட்டே. 493

சத்தூட்டிப் பின்புதான்தங் கச்செம் பாக்கி
தனியேதான் விடுவித்து மாமூலிச் செம்பு
இத்தூட்டி நாற்பத்தி நான்கு மூலி
எடுத்துமேதான் வெவ்வேருய்ச் சத்து வாங்கி
மத்தூட்டி விடுவித்தால் சாரணை தானென்று
மாணவநீ வாயிலிட்டால் ககன மோடும்
சித்தூட்டி அஞ்சுதரம் விடுவித் தாக்கால்
சித்தாடும் எட்டுவித சித்தி தானே. 494

தானென்ற சித்தியென்று இருபத் தொன்று
சத்தூட்டி விடுவித்தால் கமலி னியாமே
ஆமென்ற ஐம்பத்தி யொன்று தானும்
அணைத்துமேசா ரணைதான் விடுவித் தாக்கால்
தேனென்ற சித்தியதாம் யோகத் துள்ளே
சேர்ந்துநின்ற சொருபமணி யென்று பேரு
கானென்ற எட்டுவித சித்தி யாலும்
கைகடந்த கமலினியின் மணியு மாமே. 495

மணியான சொருபமென்ற மணியி னாலே
மதிப்பான பதந்தாண்டி பேரண் டந்தான்
கனியாக மீண்டுவந்தார் மூல நாதர்
கருணையான பாட்டரெதிர் ஒருவர் காணேன்
நணியான சொருபம்போல் ஞானங் காட்ட
நலமான மரபுக்குள் எங்கு மில்லை
அணியான அறுபத்து நால்வ ருள்ளே
ஆருக்குங் கிடையாது சொருபந் தானே. 496

தானேதான் ஐந்துவிதச் சாரணை தந்தால்
தன்மையாம்நா கார்சுனக்கு ளிகைதா னென்றும்
காணேதான் கடுவோட்டம் சுருக்கு மெத்த
கண்முன்னே பராபரத்தைக் காட்ட மாட்டார்
ஆனேதான் அகத்தியராம் முனிவர் கையில்
அடர்ந்தோடும் குளிகையொரு லகிமா வுண்டு
கோனேதான் மச்சரிடம் கொடும்பே தியொன்று
குணத்தோடே மூன்றுவரை தாண்டி டாதே. 497

வரையான கோரக்கர் கையில் தானும்
மதிப்பான போகியென்ற குளிகை யொன்று
நிரையான இடபர்கைச் சாய்கை பேதி
நேரான அறுபத்து நால்வ ருள்ளே
உரையான ஒவ்வொருவர் கையிலொவ் வொன்றும்
ஒன்றின்மேல் மறுகுளிகை இல்லை இல்லை
முறையான மூலவர்க்கத் துள்ளே தானும்
மூர்க்கமான குளிகையது ஐந்து தானே. 498

அஞ்சினுட பேரேதோ வென்று கேட்கில்
ஐக்கியமாம் பூரணத்தின் சொருப மாகும்
கஞ்சினுட கமலியொடு அட்ட சித்தி
கடியநவ லோகத்தில் பரிசிக் கயேமம்
துஞ்சினுட சிவதரிச னமாகு மாகும்
சகத்திலுள்ள மண்மலைகள் பரிசிக் கயேமம்
பஞ்சினுட பாலில்விட்டுக் குடித்தீ ரானால்
பரிவாகக் காயசித்தி நிமைக்குள் ளாமே. 499

ஆமென்ற பாட்டர்தி ருமூல நாதர்
ஐந்தல்லோ மணிகண்டார் ரெண்டு சொல்வி
நேமென்ற ரோமாபுரிக் கடலில் தானும்
நிச்சயமாய் ஆதிரசங் கொண்டு வந்து



ஏமென்ற வெட்டாக மணிதாஞ் செய்து
ஏற்றமாக போகியொன்று காமி யொன்று
தாமென்ற சந்தானம் சுரபி போடு
சமர்த்தான எட்டுவித சித்தி யாமே. 500

எட்டுவித மட்சயமும் கமலினிக் குளிகை
அடங்காத சொருபமென்ற குளிகை தானும்
கட்டமான குளிகையது எட்டுஞ் சொன்னேன்
கறையற்ற பூரணமுங் கண்முன் தோன்றும்
நட்டமாக நவலோகம் பரிசிக் கயேமம்
நாவிலிட்டு வுமிழ்நீரை யுள்ளே கொள்ள
வட்டமான சந்திரன்போல் முகமு மாகி
மாதுளம்பூ நிறம்போலே உடல தாமே. 501

## ஈரக்கல் தோற்றம்

நிறமான ஈரக்கல் தோற்றங் கேளு
நித்தியான சூரனென்ற ராட்ச தன்தான்
திறமான தேவாதி தேவ ரெல்லாம்
திடுக்கமிடப் பண்ணியேதான் துடுக்கு செய்தான்
அறமான தேவரெல்லாம் ஓடிச் சென்று
அபயமிட்டார் விட்டுணுவை யணுகிக் கேட்டு
பிறமான கருடனைத்தான் திருமால் தானும்
போய்நீதான் அசுரனையே கொல்லென் றாரே. 502
(அ.பொ.):—திடுக்கமிட=அஞ்சி நிலைகுலைய; துடுக்கு=கேடுகள்.

ஏன்றதுவோர் மொழிகேட்டுக் கருடன் தானும்
எத்தனித்துப் போரதுதான் செய்யும் போது
ஆன்றதுவோர் அசுரன்தான் கடும்போர் செய்து
ஆற்றுமல் மூர்ச்சையாகி யிருக்கும் போது
மூன்றதுவோர் கருடன்தான் மூக்கி னாலே
முனிந்ததொரு அசுரன்வ யிற்றைக் கிழித்து
ஈன்றதுவோர் ஈரலைத்தான் புசித்த போது
ஏற்றமான அசுரன்தான் மரித்திட் டானே. 503

மரித்துமேதான் வைகுண்டம் தன்னி லேக
மதிப்பான அசுரன்தன் ஈரல் தானும்
தரித்துமேதான் வயிறுதன்னில் செரியா மல்தான்
தாங்காமல் அபானத்தால் விட்டு விட்டான்

திரித்துமேதான் சிந்தினதோர் மலைகள் பூமி
திவலைபட்டு ஈரக்கல் தோற்ற மாச்சு
விரித்துமேதான் ஈரக்கல் மெழுகூர்ந்து சிவப்பாய்
மேன்மையாகக் கனமாக விளங்கும் பாரே. 504

ஈரக்கல் சத்து

விளங்கியதோர் கல்லெடுத்து சணல்வித்துச் சமனாய்
விட்டுமேதான் காடிதனில் கொதிக்க வைத்து
அளங்கினதோர் தண்ணீர்விட் டலம்பி வாங்கி
ஆதியாக முன்போலே சத்தை வாங்கு
சளங்கினதோர் சத்தெடுத்துக் குளிகைக் கீந்து
சாரணைதான் தீர்த்திட்டால் குளிகை தானும்
புளங்கினதோர் கேசரத்தில் எழும்பும் போது
பேசாமல் பசியில்லா தோட லாமே. 505

ஓடினாலே கடுவோட்டம் சித்தோட் டமல்ல
ஊழித்தீ யதனுக்குள் ஓட லாகும்
பாடினாலே அண்டமெல்லாம் உருவிக் கேட்கும்
பயமில்லை உடலதற்கு அழிவு மில்லை
கூடினாலே யார்க்குமேதான் பிடிகொ டாது
கூப்பிட்டால் பூரணமும் கூடப் பேசும்
வாடினாலே சித்தென்ன குளிகை யென்ன
மருத்துவந்தான் என்னயினி மனம்பே யாச்சே. 506

மனமான ஈரக்கல் சத்துக் குள்ளே
மாட்டுநீதான் நான்கிற்கு மொன்று தங்கம்
இனமான நாகங்கா ரீயம் சூதம்
ஏற்றமான கந்தியரி தாரந் தானும்
கனமான மனோசிலையும் சத்துக் குத்தான்
கால்வாசி கூட்டிடவே களங்கு மாகும்
தனமான நவலோகத் தீந்தா யானால்
தப்பாது பத்தரைதான் தாக்கி யாடே. 507

தாக்கினால்தான் நிலையான போதந் தன்னில்
தனித்தோடும் மலைமண்ணும் பொன்மை யாகும்
வீக்கினால்தான் விண்ணுகும் போதத் துள்ளே
வேருக விளங்கிற்று உயிரி னங்கள்
ஆக்கினால்தான் அருள்பொருள் இரண்டு மொன்று
அடங்கிற்று போதத்துள் ஒடுக்கந் தோணும்
போக்கினால்தான் பிறவிவந்து கலந்த தென்ன
பிரித்திட்ட மண்ணீரும் தீயில் வீழ்ந்தே. 508



பிறவி தத்துவம் கூறல்

வீழ்ந்துமேதான் மிக்கான வாயு சேரில்
விடுபட்ட பலப்பலவாம் விவர மாகி
காழ்ந்துமேதான் கர்மகர்மப் படிநி லைத்து
கனவதுமே கண்டாற்போல் கன்மந் தோன்றும்
மாழ்ந்துதான் மனதினுட தோற்றம் போலே
மயக்கத்தில் சீவனது மருவிச் சென்று
ஆழ்ந்துமதே அனேகந்தான் கோடி பிறவி
அளவிடாத யோனியிலும் உற்பவிக்குந் தானே. 509

உற்பவிக்கத் துணிந்துப்பி றவியெ டுத்தால்
உயர்ந்திட்ட யந்திரம்போல் பிறவி தோற்றும்
விற்பவித் தடுத்துமேதான் விவேகம் பாரார்
மிரட்சியாக மனந்தன்னால் தோணெட் டாது
துற்பவித்து சுகாதீதத் தழுந்தொட் டாது
சுணங்கனும்தான் மனமான மாயப் பாம்பு
அற்பவித்து ஆசையது பூண்ட தானல்
ஆருக்கும் விடுபடாதே யாசை தானே. 510

விடுபடாத பலத்தாலே மனந்தான் சென்று
விரைந்துமேதான் செகச்சாலத் தாசை கொண்டு
தடுபடாதே தாமரையின் நீரைப் போலே
தாங்கியேதான் அறிவழிந்து தளர்ச்சி யாகும்
கெடுபடாதே புத்திக்குள் மாயம் பூண்டு
கேடாச்சு போதத்தில் புகுத்தொட் டாது
அடுபடாதே மாய்கையிட்டு தனித்து நின்றால்
ஆசையான பிறவிய தற்றுப் போமே. 511

இராசவர்த்தனக்கல் தோற்றம்

கருத்தான ராஜவர்த்தந் தன்னைத் தானும்
காரணமாம் பிறவிபது சொல்லக் கேளு
நருத்தான நாகேந்தி ரனென்னும் ராஜன்
நலங்கியுமே வாதத்தில் வெகுநாள் தானும்
அருத்தான அமளிபட்டுப் பொருளெல்லாம் போய்
அரசிழந்து துக்கித்தே எளிமை யாகி
நருத்தான நாடுவிட்டுக் காடு புக்கி
நலிந்தபோதோர் தபசிவந்து சேர்ந்திட் டாரே. 512

(அ.போ.) :—அமளி—ஆரவாரம்.

வந்துமே கானகத்தில் இராசன் கிட்டே
மனக்குறைதா னென்னவென்று கேட்க வேதான்
தந்துமே சொல்லுமென்று தபசி கேட்க
தாள்பணிந்தே அடியேன்தன் தன்மை கேளும்
நந்துமே நாடாட்சி மிகவும் மாண்டு
நலிந்துமதே வாதத்தில் பொருளெல் லாம்போய்
பந்துமே ஆட்சிதனைப் பறித்துக் கொண்டார்
பரதேசி யாகியிங்கு வந்திட் டேனே. 513

(அ.பொ.) :—பந்துமே=பந்துவுமே (குறுக்கல்); பரதேசி=பிச்சைக்காரன் (வெளிநாட்டான்).

இங்குவந்தி லைகனிகாய்த் தன்னைத் தின்று
இழந்தும்தான் மனக்குறையாய் வாடிப் போனேன்
இங்குவந் திப்படித்தான் நானி ருந்தேன்
ஈன்றெடுத்த தாய்போலே இங்கு வந்தீர்
இங்குவந்தேன் தேவரடிக் கண்ட போதே
எனைப்பிடித்த துன்பங்கள் எல்லாம் போச்சு
இங்குவந்த குருவேநீ யருள்செய் யென்று
இணையடியில் வீழ்ந்திறைஞ்சி ஏத்தி னனே. 514

(அ.பொ.) :—இறைஞ்சி=வணங்கி.

ஏற்றவுமே மனமகிழ்ந்து சித்தன் தானும்
எளிதானக் குளிகையொன்று கையி லீந்து
வீற்றவுமே விவரமாக வாதம் சொல்லி
மேதினியில் கொள்ளாத திருவைக் காட்டி
ஆற்றவுமே போவென்று அனுப்பி விட்டு
ஆகாய வீதியிலே மறைந்து போனர்
நாற்றவுமே அரசனுந்தான் மனம்ம கிழ்ந்து
நாடாண்டு வாதமெல்லாம் பார்த்திட் டானே. 515

பார்த்திட்டுக் குளிகைகட்டி வாதம் செய்து
பாங்கான குருவகைகள் செய்து பார்த்து
சேர்த்திட்ட செந்தூரம் களங்குச் சுண்ணம்
திறமான சத்துவகை மெழுகு தானும்
கோர்த்திட்டு வாதங்கள் செய்து பார்த்து
கொஞ்சமாக பொன்செய்த லாகா தென்று
மார்த்திட்டு மலைவனைத்து பொன்னைச் செய்ய
மனதிலெண்ணி மலையருகில் வந்திட் டானே. 516



வந்துமே லட்சந்தான் கரிகள் கொட்டி
மதிப்பான துருத்திகளைச் சுற்றி வைத்து
முந்துமே ஆட்கள்விட் டுதச் சொல்லி
முற்றுமே மலைசிவந்த பருவம் பார்த்து
கொந்துமே குருவெடுத் தெங்கும் வீசி
குளிகையிட வேணுமென்று கையில் வாங்க
சிந்துமே சித்தரெல்லாம் சிவன்முன் வந்து
செப்பினுர்தாம் மலையேம மாச்சென் றுரே. 517

ஆச்சென்ற மொழிகேட்டு சிவனுர் தாமும்
அன்பாக சொர்னுகர் சனனைத் தானும்
நாச்சென்ற அரசனைத்தான் கொன்று போட்டு
நற்குளிகைத் தன்னையேகொண் டுவாயென் றுரே
தேச்சென்ற சிவன்சொன்ன மொழியைக் கேட்டு
சினந்துமேதான் சொர்ணவயி ரவரே தானும்
ராச்சென்ற குளிகைதனைப் பறித்துக் கொண்டு
ராசனைத்தான் வெட்டிமலை போட்டிட் டாரே. 518

(அ.பொ.) :—சொர்னுகர்சன்=பொன்னைத் தன்னிடம் இழுப்பவன்=சொர்னவைரவர்.

போடவுமே அரசனுந்தான் வெந்து போனுன்
போரான குளிகையி லிருந்த தாலே
மூடவுமே முத்திபெற் றிராச வர்த்தனம்
மூவுலகம் பேராகி யிருந்து போச்சு
நாடவுமே நாகேந்தி ரராசன் தானும்
நளினமான மதத்தாலே வர்த்த னமானுன்
வாடவுமே வர்த்தனமும் ரெண்டு வகையாம்
மதிப்பான நாமத்தின் பரிசு கேளே. 519

பரிசதுதான் இராசவர்த்த னமது நன்று
பாங்கான இராசன்னி யவர்த்த னமென்றும்
பிரித்துத்தான் இரண்டுவகை ஏதென் றுக்கால்
ஏற்றமான வுத்தமந்தான் சொல்லக் கேளு
அரித்ததுதான் அரைத்துமது கட்டியாக
அழுத்தமான குளிகையைப்போல் கனத்து காணும்
பொரிவிழுந்து தேசசாயி ருக்கும் தானே. 520

(அ.பொ.) :—தேசாய்=ஒளிப்பிழம்பு.

இருக்குமதே வர்த்தனந்தான் குற்றமில்லை
இயம்பியபின் வர்த்தனத்தின் இயல்பு கேளு
மருக்குமேதான் சராசரத்து கனமில் லாமல்
மயில்கழுத்து நிறம்நீலப் பொறியுங் காணும்
திருக்குமேதான் நிர்மலமு மாகத் தானும்
நேராக விருந்ததென்றால் ரெண்டாம் பட்சம்
பருக்குமேதான் பலப்பலவாம் புள்ளி வீழ்ந்து
பாரமது இல்லாமல் லேசா கத்தான்
உருக்குமேதான் சரசரப்பாய் ஒளியில் லாமல்
ஊற்றைப்போலி ருந்தாக்கா லாகா தாமே. 521

ஆகாத வர்த்தனத்தை யகற்றிப் போடு
அழகாக மிருதுவாய்க் கனமு மாகி
தாகாத குளிர்ச்சியாகச் சாயந் தானும்
தானுகி தீபன்னி யமலை யாகி
வேகாத வீரியவி ருத்தி யாகி
விக்கலொடு குட்டங்கள் வாயு சிலேத்மம்
போகாத சோகையொடு பாண்டு வாயு
பிரமியங்கள் பெருவயிறு மாறிப் போமே. 522

மாறியநல் வர்த்தனத்தைக் கல்வத் திட்டு
மறவாத வயக்கரண்டி தன்னுக் குள்ளே
தூறியநல் சூதத்தைக் கொதிக்க வைக்க
சூதந்தான் கட்டுண்டு மணிபோ லாடும்
தேறியநற் செந்தூரம் சிவப்பு மெத்த
திறமான நவலோக நூற்றுக் கோடும்
வீறியான காயமது சட்டை கக்கும்
விளங்குமேதான் கதிரொளிபோல் மேனி யாமே. 523

## இராசவர்த்தனக்கல் சத்து

மேனியான வர்த்தனம் பலந்தான் பத்து
மிக்கான தொங்குவதாய் கிழியாய்க் கட்டி
வானியான வாழையுட கிழங்குக் காடி
வார்த்துமேதான் புங்கவிதை தேங்காய் மட்டும்
சீனியான பொடித்துமேதான் கூடப் போட்டு
சிறுதீயாய் பொங்காமல் காய்ச்சிச் சாமம்
ஆனியாக ஆறவிட்டு அவிழ்த்துக் கொட்டி
ஆதியான வெடியுப்பு நீரால் தானே. 524



நீராலே அரைத்திட்டுக் குடோரி தானும்
நேராக வெங்காரம் வீரம் கூட்டி
மூராலே மூன்றுநாட்கள் அரைத்த பின்பு
முழங்கவொரு புடம்போட் டெடுத்துக் கொண்டு
ஏராலே குகையிட்டு ஊதி னுக்கால்
ஏற்றமான சிவந்தநிற மாகத் தானும்
தாராலே சத்ததுவு மாகி நிற்கும்
தாக்கியேதான் கரடெடுத்து முன்போ லூது. 525

ஊதியுமே ஐந்துதரம் சத்தை வாங்கி
ஒருமிக்கச் சத்தெல்லாம் உருக்கிக் கொண்டு
பாதியுமே நட்பதனில் வுருக்கிச் சாய்த்து
பதினைந்து முறைதானும் சென்ற பின்பு
நீதியாகக் குளிகைக்குச் சத்து மீந்து
நேராக விடுவித்தால் நிமிடத் துள்ளே.
ஆதியுமே அண்டரண்டம் தாண்டி யோடும்
அமர்ந்திட்ட சத்துக்குத் தங்கஞ் சேரே. 526

தங்கந்தான் நாவிலொன்று கூடச் சேர்த்து
தாக்கியுமே மெழுகுகட்டி கிண்ணி வார்த்து
அங்கந்தான் அடித்தூரில் மண்தான் கட்டி
அழகான வாலுகையின் மேலே வைத்து
துங்கந்தான் சுத்தித்த சூதம் விட்டுச்
சுயமான பொன்மத்தஞ் சாறு தன்னில்
புங்கந்தான் பூநீறு நாவி லொன்று
போட்டுமேதான் கலக்கிடுவாய் நாள்தான் மூனே. 527

மூனுநாள்கள் ஆனபின்பு தெளிவி றுத்து
முயற்சியாக கிண்ணிக்கரை வாசி வார்த்து
நாலுநாளே நான்குசாமம் எரித்தா யானல்
நலங்காமல் இட்டலிபோல் கட்டிப் போகும்
தோனுநாள் சூடனுட தீயில் வாட்டி
துப்புறவாய் எண்ணெய்விட்டு கரண்டியி லுருக்கு
ஆணவுமே பதின்கழஞ்சி நிறுத்துக் கொண்டு
அந்தெடைக்குச் சவ்வீரம் கூடப் போடே. 528

கூடவேதான் சூதத்தில் பாதி தானும்
குந்தனத்தை பூட்டியே அண் டோட்டுப் பொடியும்
நாடவேதான் தங்கமிட்ட ரசம்சவ் வீரம்
நடுவிலிட்டுப் புடம்போடக் குருவு மாகும்

வாடவேதான் புனுகோடு கலக்கிக் கொண்டு
வைத்திடவே நாசியினில் மணமே காணும்
போடவேதான் பித்தளைதன் விலேதான் பூசி
போரான தீபத்தில் காய்ச்சி டாயே. 529

(அ.பொ.) :—குந்தனம்=இரத்தினம்.

## குளிகைத் தொழில்

காய்ச்சிடவே கனகமது பத்து மாகும்
கற்பாந்தம் தானிருக்கும் காய சித்தி
பாச்சிடவே சரக்கெல்லாம் கட்டிப் போகும்
பாரமான சத்திதுதான் வர்த்தனச் சத்து
தாச்சிடவே சத்தூட்டி விடுவித் தாக்கால்
சார்ந்தவட வாக்கினிக்குள் போக லாகும்
தோச்சிடவே குளிகையது கடல்சு ருக்கும்
துரியாதீ தமெல்லாமே தோன்றுந் தானே. 530

(அ.பொ.) :—வடவாக்கினி=கடலில் இருக்கும் குதிரை முகத்தோடுள்ள தீர ; கடல்நீரை மிஞ்சவொட்டாமல் காத்தல் இதன் தொழிலாம்.

ஆமிந்த குளிகையில்லா கிரியை யேற்றி
அடங்காத சுரபிபோலே இரண்டுண் டாக்கி
பூமிந்த பிரித்துநன்ருய்ப் புகலக் கேளு
பொன்னென்றில் வெள்ளியொன்றில் சமனுய்க் கூட்டி
ஏமிந்தப் பரிசேர்ந்தால் ஏமச் சுரபி
இசைந்தமதி சேர்ந்திட்டால் ரசிதச் சுரபி
வாமிந்த வங்கத்தில் ரசிதச் சுரபி
மதிப்பாக ஆயிரத்தில் போட்டி டாயே. 531

ஆயிரத்தில் போட்டுமே இரும்பு வலேயால்
ஆகாசம் எழும்பாமல் மேல்கட்டுக் கட்டி
பாயிரத்தில் வங்கத்தின் நீரை யெல்லாம்
பரித்துமேதான் குடத்திட்டு வெளியில் வீழும்
சேயிரத்தில் பாலிவிட்டிக் குளிகை தன்னைச்
செப்பாதே வுறக்குடிக்கில் சித்தி யாகும்
மாயிரத்தில் குளிகையிது வைத்துக் கொள்ளு
மதிப்பான ஏமமென்ற சுரபி கேளே. 532



சுரபியைத்தான் காரீயம் உருகு முகத்தில்
சூட்டினுலே யேமமது பத்த ரையாம்
முரபியைத்தான் முன்போலே மேற்கட்டு கட்டி
முதிராவின் பாலிவிட குடித்துப் போடும்
தரபியைத்தான் சுரபியுட குளிகை ரெண்டின்
சமத்காரம் சொன்னபின்பு காமனிக் கேளு
விரபியைத்தான் வேலேயுட நீர்கு டிக்கும்
மிகுந்தவட வாக்கினியை யுண்ணும் பாரே. 533

(அ.பொ.) :—சமத்காரம்=திறமை ; வேலே=கடல்.

உண்ணுமேதான் மந்திரமாஞ் சத்தை யெல்லாம்
உகந்தந்த குளிகைதன்னை வாயில் வைத்து
பண்ணுமேதான் கல்லோடு செங்கல் தூளை
பரவவேதான் ஊதிட்டு வெதுப்பப் பொன்னும்
மண்ணுமேதான் பொன்னுனல் மாற்று தன்னை
மட்டிடவே முடியாது நூற்றுக்கு மேலாம்
அண்ணுமேதான் வாயில்வைத்த குளிகை தானும்
அண்டபேரண் டமெல்லாம்தான் தாண்டிப் போமே. 534

தாண்டியேகி பேரண்டப் பதமெல் லாந்தான்
தரித்துமேதான் அங்கெங்கும் சஞ்ச ரித்து
வேண்டியுமே பலப்பலவாம் சித்தர் கையில்
வெகுவித்தை யுபதேசம் செய்து கொண்டேன்
தாண்டியுமே வறுவண்டந் தன்னில் போனேன்
சித்தர்கள் நீயார்வர்க்க மென்று கேட்டார்
மூண்டியுமே மூலருட பேர னென்றேன்
முடுக்கான சொரூபமுண்டோ வெனக்கேட் டாரே. 535

(அ.பொ.) :—முடுக்கு=மிடுக்கு=வன்மையுள்ள ; சொரூபம்=இரசமணியில் ஒருவகை.

கேட்டுமேதான் சித்தருக்குக் குளிகை காட்டி
குறித்துமேதான் மறுவண்டந் தன்னில் சென்று
வீட்டுமேதான் மறுவரையி லிருந்த சித்தர்
விடுபட்ட சித்தாநீ யார்தா னென்றுர்
தீட்டுமேதான் திருமூலர் பேரன் யான்தான்
சிறுபிள்ளை போகனென்ற முனிவ னென்றேன்
தாட்டுமேதான் தயவோடே பாண மீந்தார்
தயவோடே மதுவாங்கி தாய்க்கென் றேனே. 536

(அ.பொ.) :—பானம்=அமுதபானம்.

தாய்க்குமேதான் மதுவளித்து வாசி யூடே
தம்பித்து இழுத்துமேதான் விண்ணை நோக்க
வேய்க்குமேதான் வெளிவிட்டு விளக்கைத் தந்தான்
வெகுசித்தர் தன்னுட னுரையா டினேன்யான்
சீய்க்குமேதான் நூலினுட விவரந் தன்னைச்
செப்புமென்று கேட்கவுமே தெளிவாய்ச் சொன்னேன்
காய்க்குமேதான் நாவினுட கணக்கைக் கேளு
கருவான வெழுகாண்ட பாவென் றேனே. 537

## நூற்றெகை

பாவென்ற வேழாயி ரமாகும் பாரு
பரிவான நிகண்டதுவும் பத்தேழ் நூறு
தேவென்ற சூத்திரந்தான் எழுநூறு சொச்சம்
செப்பியதோர் நூலென்று சித்தர்க்குச் சொல்ல
ஏவென்ற இருபத்தி யேழு அங்கம்
இசைந்திட்டேன் எல்லாரு மறிய வென்று
ஆவென்ற வேதையாயி ரத்து மட்டும்
ஆடியேதான் குளிகையில் வைத்திட் டேனே. 538

## சொருபக் குளிகை

வைத்திட்ட சொருபமென்ற குளிகை கேளு
வாயிலிட சூடன்தீ வடிவம் போலாம்
தெத்திட்ட தீபம்போல் சிதையும் உடலே
சினத்தோடே நடுவீசில் கத்தி யாலே
குத்திட்ட நடுவோடில் கூடிப் போகும்
கோபம்போம் வினைபோகும் வாச னையும்போம்
தைத்திட்ட தாமதம்போம் மயக்கம் போகும்
தன்னுடைய உருவத்தின் சாய்கை போமே. 539

சாய்கைபோமே குளிகைவாயி லிடுமுன் னேதான்
தனித்திருந்த ஞானம்வந்து தண்மை யாகும்
மாய்கைபோயே யெளிதினிலே ஞானம் சாரும்
வாயிலிடு முன்னமேதான் வந்து கூடும்
சேய்கைபோமே யில்லாட்டால் ஞானம் வாரா
செயற்கையான வாசனையும் கெட்டுப் போகும்
பாய்கைபோயே பட்டம்போ லசைந்து ஆடும்
பரிசித்த குளிகையிட்டால் போத மாமே. 540



## காமதேனுக் குளிகையும், மோகினிக் குளிகையும்

குளிகையான காமதேனுக் குளிகை கேளு
குறித்துமேதான் மனந்தன்னில் நினைத்த தெல்லாம்
முளிகையாகக் கொண்டுவந்து முன்னே வைக்கும்
முன்னென்றும் பின்னென்றும் முகமுன் காணும்
அளிகையான மோகினியின் குளிகைக் குத்தான்
அதீதமான வாசமொடு கட்டில் மெத்தை
பழிகையான மனதுதன்னில் வேண்டும் பெண்கள்
பலப்பலவாம் போகமெலாம் கொடுக்குந் தானே. 541

(அ.போ.) :—வாசம்=வாழ்க்கை.

## சந்தானக் குளிகை

கொடுக்குமேதான் சந்தானக் குளிகை கேளு
குறிப்பாக மனிதரைத்தான் துண்டு துண்டாய்
வெடுக்குமென வெட்டியுமே ஒன்றாய்ச் சேர்த்து
விப்பிரமாம் குளிகையைத்தான் வைத்தா யானால்
பொடுக்குமதே சீக்கிரத்தில் பொருந்திப் பேசும்
பேரான குளிகையினால் யோக சித்தி
அடுக்குமந்த அட்சயத்தின் மணியைக் கேளு
அடங்கலாக தனதான்யம் குவித்து வையே. 542

## அட்சயக் குளிகை

வைத்துமதே அன்னத்தை கனிகள் தன்னை
மதிப்பான பொருள்நவநி தியனைத் தும்தான்
தொய்த்துமேதான் குவியலாய்க் கொட்டி வைத்துக்
குளிகையைத்தன் மேல்வைத்தால் குறிப்பைக் கேளு
எய்திடுமே செலவிடவே எல்லா முந்தான்
எடுக்கெடுக்க எப்போதும் போலி ருக்கும்
கொய்துமேதான் ககனத்தில் சுறுக்கா யோடும்
குணமான அட்சயமாங் குளிகை தானே. 543

## ககனக் குளிகை

குளிகையான ககனத்தின் குணத்தைக் கேளு
கோடிலட்சங் காதமதும் இமைக்கு முன்பு
குளிகையதால் சமாதியினில் நிலைமை யெல்லாம்
குவியாமல் கணத்திலேதான் நிலைத்துக் காட்டும்

உளிகையான உமிழ்நீரை யுள்ளே கொள்ள
உறுதியாக காயமது சித்தி யாகும்
தெளிகையான சிவசக்தி அறிவெல் லாந்தான்
தீபத்தின் சுடர்போலே தோன்றுந் தானே, 544

## சகடுக் குளிகை

தானென்ற சகட்டினுட மணியைக் கேளு
மக்கள்செத் துமறுபிற வியெடுத் ததெல்லாம்
ஓமென்ற யோகத்தின் அறிவு தன்னால்
உற்றுமேதான் மும்முறையி னுருவங் காட்டும்
நாமென்ற நாதமான வேதை கேளு
நற்சூதம் கட்டிச்சா ரணையே செய்து
வேனென்ற வில்லைபோலே வார்த்துக் கொண்டு
மெத்தெனவே தட்டினதோர் மட்டுங் கேளே. 545

## சத்தபேதிக் குளிகையும், பரிசபேதிக் குளிகையும்

தட்டினதோர் சத்தமெந்த தூரங் கேட்டத்
தனிமட்டும் நவலோகம் வேதை யாகும்
புட்டினதோர் இதுசத்த பேதி யாகும்
புகழான பரிசனபே தியைத்தான் கேளு
கட்டினதோர் குளிகையைத்தான் கையில் வைத்து
கடுலோகம் ஓடுசெங்கல் எலும்பு மண்ணில்
பட்டினதோர் மேல்காட்டப் பசும்பொன் னாகும்
பரிசனபே தியின்குளிகை குணத்தைக் காணே. 546

## குளிகை சாரணை விவரம்

காணவுமே குளிகையுட மகிமை சொல்ல
கடல்புளுகோ வென்பார்கள் சவங்கள் தானும்
பூணவுமே வாய்க்கெளிதோ சூதந் தானும்
பொற்சடையோன் மேனிதன்னில் பிறந்த விந்து
தாணவுமே வுபரசங்கள் நூற்றிரண்டு பத்து
சத்தெடுத்து சாரணைகள் ஊட்டி னக்கால்
வேணவுமே விடுவித்துத் தாதுச் சத்து
விரைந்தூட்டே அறுபத்து நாலுந் தானே. 547

(அ.பொ.) :—கடல்புளுகு=பெரும்பொய் ; சவங்கள்—பிணங்கள்.



அறுபத்து நாலான சத்தை யூட்டி
அதன்பின்பு நவலோகச் சத்தை யூட்டி
நிறுபத்தி நவரத்தி னசத்தை யூட்டி
நேர்ந்தபின்பு மூலிகையின் சத்தை யூட்டி
விறுபத்தி விடுவித்தால் சாரணை தானென்று
மிக்கான குளிகைக்கோ ஐம்பத் தொன்று
தறுபத்திச் சாரணைகள் தீர்ந்திட் டாக்கால்
சதாசிவர்க்கும் தாய்க்கும்தான் சரியாய்ச் சொல்லே. 548

## கருடப்பட்சிக்கல் தோற்றம்

சொல்லான கருடபட்சி தோற்றங் கேளு
சுயமாமுன் னாளில்தே வராட்ச தர்தாம்
அல்லான அமுதந்தான் கடைந்தெ டுத்து
அணிவருந்தான் பருகையிலே கருடன் கூட
மில்லான மிகுவதிகம் அமுத முண்டார்
மிடுக்கான மயக்கத்தால் கக்க லாச்சு
புல்லான கக்கலது புவிதன் னில் வீழ்ந்து
பிறந்ததுதான் கருடபட்சி ஐந்தாய்த் தானே. 549

அஞ்சான கருடபச்சை வெளுப்பு மஞ்சள்
ஆதியான கருப்போடு சிவப்பு பச்சை
பிஞ்சான வைந்தாக பிறப்புண் டாச்சு
பிரமியம்போம் வெளுப்புக்கே கருப்புத் தானே
துஞ்சான சத்திரத்தை மாற்றி வைக்கும்
துரிதமாக பச்சையது தோடம் போக்கும்
துஞ்சான சிவப்பதுதான் கொஞ்சம் கிட்டும்
துரிதமாக இரும்பிவிட ஈய மாமே. 550

குறிப்பு—சத்திரத்தை=குருதிக்கக்கலை.

(அ.பொ.) :—ரத்தம் + சத்தி + ஐ = ரத்தசத்தியை = சத்திரத்தை என்று பாவில் கையாண்டுள்ளதை நோக்கற்பாலது ;—ரத்தம்=குருதி ; சத்தி=வாந்தி (அ) கக்கல்.

ஈயமான நவலோகம் பற்ப மாகும்
ஏற்றமான சூதத்தைக் கட்டிப் போடும்
ஆயமான அக்கினிவெற் றிசெய் கும்தான்
அனுகினலே மதிதனிலே ஏம மாகும்

தாயமாக உட்கொள்ள காயந் தானும்
சந்திரன்போல் தானிருப்பார் கற்பாந் தந்தான்
பாயமாக பாடாண குலந்த னக்கு
பாரமழு வாளியென்று பார்த்துக் கொள்ளே. 551

(அ.பொ.) :—வாளி—படை.

## கருடப்பட்சிக்கல் தூய்மை (சுத்தி)

பார்த்ததுமே வெளுப்பதுதான் சுன்னத் துக்காம்
பச்சையது சத்துக்குப் பண்பு மெத்த
கோர்த்ததுமே கழற்சிக்காய் அளவே தானும்
குறுகநன்ருய்த் தானுடைத்துக் கருடப் பச்சை
நீர்த்துமதே பலம்பத்து நிறுத்துக் கொண்டு
நீக்கான சீலையிலே தளரக் கட்டிக்
கோர்த்துமதே குதிரையுட அமுரி வார்த்து
கெட்டியான பாண்டத்தில் கிழியே கட்டி
வேர்த்துமதே வேம்பினுட பருப்பு தானும்
மிஞ்சிடாமல் இரண்டுபத்து பலமும் போடே. 552

## கருடப்பட்சிக்கல் சத்து

பலமான திரிபலையும் பொடித்துப் போட்டு
பாங்கான அமுரியெல்லாம் சுண்டக் காய்ச்சி
துலமான கிழியைத்தான் எடுத்துக் கொண்டு
சுயமான வெடியுப்பு நீரா லாட்டி
வலமான வாதமென்ற குடோரி பலம் ஒன்று
மாசற்ற சவ்வீரம் பலமு மொன்று
புலமான வெங்காரம் பலமும் போடு
பிட்டியரை நாள்மூன்று நீரில் தானே. 553

நீரிலேதா னரைத்துநல்பு டத்தைப் போடு
நேர்ப்பாக குகையிலிட் டுதச் சத்தாம்
ஆரினிலே ஐந்துமுறை யூதிக் கொண்டு
அடைவான சத்தெல்லாம் ஒன்ருய்க் கூட்டிப்
பாரினிலே பதினைந்து முறைதான் முன்போல்
பக்குவமாய் நட்பதனில் சாய்த்துக் கொண்டு
சோரினிலே குளிகைக்குச் சாரணை தீர்த்தால்
கொண்டெழுமே கோடிலட்சங் காதந் தானே. 554



## கருடபட்சிக்கல் செந்தூரம்

காதந்தான் கருடபட்சி சத்தோ வொன்று
காணிதற்கு நாலுக்குத் தங்க மொன்று
நாதந்தான் நாகமொன்று கூடக் கூட்டி
நலமாக வொன்ருய்த்தா னுருக்கி வாங்கி
மாதந்தான் கல்வத்தில் பொடியாய்ச் செய்து
மாசற்ற சூதமொடு கந்தி தானும்
போதந்தான் தாளகமும் மனோசி லையுஞ்சேர்த்து
பொற்றலையின் சாற்றிலாட்டி மேருக் கேற்றே. 555

ஏற்றியுமே பன்னிரண்டு சாமந் தீதான்
இதமாகப் போட்டிடவே செந்தூ ரமாகும்
நாற்றியுமே நவலோக மாயிரத்துக் கொன்று
நாட்டினுல்தான் பத்தரையே மாற்று காணும்
போற்றியுமே பணவெடைதான் பாலி லுண்ணு
புளியெண்ணெய் சம்போகம் போக்கு வாய்தான்
மாற்றியுமே மண்டலந்தா னுண்டா யானுல்
மன்மதன்போல் அழகியவு ருவனு வாயே. 556

அழகியமஞ் சள்கருடப் பட்சி தானும்
அதிகமான வேக்காட்டைப் போக்கு விக்கும்
கழகியபட் சிதோடமு யர்நஞ் சுகள்தாம்
பாரமான குட்டங்கள் தோடந் தானும்
நழகியநாக் குப்பிளவை நளினப் புற்று
நாடியதோர் கண்புண்ணு மாறிப் போகும்
மழகியகண் புகைச்சலொடு மாலைகாசம்
மங்கியதோர் கண்ணழற்சி மாறுந் தானே. 557

(அ.பொ.) :—நளினம்—கண் (தாமரை).

மாறுநீர்தான் ரசங்கட்டி வாத வித்தை
மார்க்கமாகச் செய்தும்தான் வாடை பூசி
கோறுநீராய் சூதுகள்தாம் மிகவும் கட்டி
கோபமொடு மோகமானப் பெண்ணைக் கூடி
சாறுநீராய் பொன்கோடா கோடி தேடி
சந்தோடந் தானடைந்து மிக்கோர் சித்து
ஆறுநீராய் ஆங்காரக் கிளைக ளெல்லாம்
அடியோடே போய்மூழ்கும் அறிந்து கொள்ளே. 558

அறிந்துமேதான் ஆங்காரக் கோபந் தன்னை
 அகற்றிட்டால் கோபமிஞ்சி அலைக்க ழிக்கும்
பிறிந்துமேதான் சாதுதன்மை தானாய் நின்று
 பேரான அறுதலமும் முட்டிப் பாரும்
மறிந்துமுமே உளத்துக்கு வழிகாட் டாக்கால்
 வாதமொடு ஞானம்ரெண்டும் பொய்யாய்ப் போகும்
விறிந்துமேதான் வேதாந்தம் தன்னைத் தானும்
 விண்டுமதே பாராட்டால் கேடு தானே. 559

(அ.பொ.) :—அறுதலம்=ஆறு ஆதாரங்கள்; கேடு=அழிவு.

விண்டுமதே விரைந்ததற்குள் புகலப் பாராய்
 விதங்காணார் பதங்காணார் வழியுங் காணார்
ஒன்றுமதே போதத்தை யுன்னிப் பாரு
 ஒதுங்கியுமே வெளிபோன நாலைக் கூட்டு
கண்டுமதே காலையிலே மாலை வேண்டா
 கடுங்கூட்டந் தன்னிலேதான் பூட்ட வேண்டாம்
நண்டுமேதான் நடுச்சாமம் தனிவி ருந்து
 நலங்காமல் அசைவற்று இருந்து பாரே. 560

(அ.பொ.) :—நடுச்சாமம்=நள்ளிரவு.

## ஓடு முதல் மாட்டுக்கொம்பு வரை 16 வகைச் சத்து

இருந்துமதே ஓடுசெங்கல் எலும்புமயிர் நண்டும்
 இசைந்ததுவோர் நத்தைநாக ரவண்டு கிளிஞ்சல்
உருந்துமேலு மச்சிஆமை முட்டைத் தோலும்
 உரமான யானையின்தன் கொம்பு தானும்
குருந்துமதே பன்றியின்தன் கொம்பி னேடு
 கொடிதான கலைக்கொம்பு ஆட்டுக் கொம்பு
வருந்துமதே மாட்டினுட கொம்பு தானும்
 வகையான பதினாறும் பலந்தான் பத்தே. 561

பத்தாகப் பலந்தானும் வெவ்வே ருக்கி
 பாங்காகத் தூள்தூளாய் நறுக்கிக் கொண்டுக்
குத்தாகக் குண்டுமணி இலையின் சாறு
 கொட்டியேதான் பீங்கானில் ஊற வைத்து
முத்தாக மூன்றுநாள்கள் கழிந்த பின்பு
 முயற்சியாக நாலாம்நாள் வற்றக் காய்ச்சி
நத்தாக வாதமென்ற குடோரி யொருபலம்
 நாட்டமாக குதிரைப்பல் பலமுந் தானே. 562

(அ.பொ.) :—குதிரைப்பல்=குதிரைப்பல் பாடாணம்.



பல்லோடு வீரமொரு பலமும் போடு
 பாங்கான நேர்வாளம் பலமும் போடு
கொல்லோடு குக்கிலது பலமும் போடு
 குறித்தசித் தேரண்ட விதைப்பலந்தான்
தெல்லோடு தேன்வெண்ணெய் காரங் கூட்டி
 சேர்த்துமேதான் வகைவகைக்குப் பலந்தான் போட்டு
வெல்லோடு வெடியுப்பு நீரா லாட்டி
 வெவ்வேறும் விரவிமூனு நாள்தாம் வையே. 563

(அ.பொ.) :—குக்கில்=மைசாட்சிக் குங்கிலியம்; சித்தேரண்டம்=சிற்றாமணக்குப் பருப்பு.

மூனுநாள்தாம் வைத்துமதைப் புடத்தைப் போடு
 மூர்க்கமாக குகையிலிட்டு உலையி லூது
சானுநாள்தாம் கோலாட்டி வுருக்கி யூற்றி
 சத்தெல்லாம் பொறுக்கியேதான் கரட்டை யூது
பூனுநாள்ஐந் துமுறையிப் படியே யூது
 பூணான சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
பானுநாள்தாம் பதினைந்து முறைதான் சாய்த்துப்
 பாங்கான குளிகையிற்சா ரணைதான் செய்யே. 564

(அ.பொ.) :—கோலாட்டி = செங்கல்லில் கோல்போல பள்ளம் செய்து ஊற்றுதல்.

சாரணைதான் செய்திட்டால் குளிகை தானும்
 சணத்திலேதான் சந்திரமண் டலமே புக்கிப்
பூரணைதான் மனோன்மணியின் விலாச மட்டும்
 போய்மீளும் பூட்டியிதை விடுவித் தாக்கால்
பாரணைதான் பதினாறு சத்து தன்னைப்
 பாங்காக வொவ்வொன்றாய் யூட்டித் தீரு
மாரணையாய் விடுவித்தால் மற்றுச் சொன்னால்
 வாய்க்குமது போய்விடுும் மார்க்கந் தானே. 565

## மேற்படி சத்துக்களின் செந்தூரம்

மார்க்கமான சத்துகளை வெவ்வே ருக
 மாட்டியேதான் தங்கத்தை நாலுக் கொன்று
பூர்க்கமாம்நா கமதுதங்க மெடையே போட்டுப்
 புகழான கந்திமனோ சிலையுஞ் சூதம்
கார்க்கமான கனகத்தி னெடையே கூட்டிக்
 கருவாகத் தொந்தித்துத் தூளாய்ச் செய்து
மூர்க்கமான காசியென்ற மேருக் கேற்றி
 முனையான வாலுகையி லெரித்தி டாயே. 566

எரித்திடுவாய் பனிரெண்டு சாமந் தானும்
ஏற்றமாக அருணன்போல் செந்தூ ரமாகும்
பரித்திடுவாய் பணவெடைதான் பாவி லுண்ணு
பாங்காக மண்டலத்தில் சித்தி யாகும்
மரித்திடுவாய் என்றுசொல்லி துன்பம் வேண்டாம்
மதிரவிதான் உள்ளளவும் வாழ லாகும்
கரித்திடுவாய் காயசித்திக் கொன்றுக் கொன்று
காரியந்தான் மெத்தவுண்டு கருவாய்ப் பாரே. 567

(அ.போ.) :—மதிரவி=சந்திரசூரியர்.

## மருந்துசெய்யப் பொது விதிகள்

கருவான வாதத்தை விட்டா யானல்
கடினமான வாதமெல்லாம் பொய்யாய்ப் போகும்
வருவான வாட்டுத்தான் மிகுந்து போனல்
மலர்ந்தங்கே வுதிர்ந்ததுமே மண்ணாய்ப் போகும்
புருவான புடமதுதான் மீறிற் ருனல்
புகுதாமல் லோகத்தில் கண்டித் தேறும்
உருவான ஊற்றினத்தில் உருக்குஞ் சத்து
உருட்சியாக உருகாமல் கிட்ட மாமே. 568

கிட்டம்போல் சத்துகளை யூதிப் போட்டு
கெடியான வென்னூலைப் பொய்யென் னுதே
அட்டம்போல் ஆராய்ந்து சாத்தி ரத்தை
அறிந்துமேதான் திட்டமாகச் செய்து கொள்ளு
மட்டம்போல் ஆச்சுதென்றுல் ஊதி டாதே
வளமாக தாய்சேர்த்து ஊதிப் போடு
புட்டம்போல் புடம்போட்டால் பொரிந்து போகும்
பொன்செய்து காவிக்குள் புடத்தைப் போடே. 569

புடம்போட்டு பொன்னிட்டு மட்டத்துக் கெல்லாம்
பிறிந்துமேதான் நால்மூன்று வண்ணங் கண்டால்
இடம்போட்டு ஈயமிட்டு ஊதி டாதே
இனமாகப் பொன்சேர்த்து ஊதிப் போடு
தடம்போட்டு வுப்பதனை வறுத்துக் கொண்டு
தனுக்காக செங்கல்லைப் பொடித்துப் போட்டு
நடம்போட்டு வறுத்தவுப்பு நாலு பங்கு
நற்செங்கல் பொடியதுவும் பலம்மூன் ருமே. 570



மூணாக மத்தித்து ஓட்டில் வைத்து
முன்னூதி மட்டத்தைப் புடத்தைப் போடு
பூணாகப் பொன்னெட்டே இறங்கும் பாரு
போக்கோடே இறங்காமல் கடித்துக் கொண்டால்
தானாகத் தங்கம்பின் சமனாய்ச் சேர்த்துத்
தாக்கியேதான் புடம்போட இறங்கும் பாரு
வானாக மட்டமெல்லாம் இந்தப் போக்கில்
வழிபார்த்தால் தங்கமது இறங்கும் பாரே. 571

இறங்கிவிடு குளிகைக்குச் சத்துக் குத்தான்
ஏற்றமாக வேதைக்குக் குருவுக் குத்தான்
பிறங்கவுமே பலப்பலவாங் களங்குக் குத்தான்
பேரான அயநாகம் செம்புக் குத்தான்
கறங்கவுமே கன்மந்தான் போக்கு தற்குக்
கனகமாக ஆவதற்குப் பொடிதா னைந்து
திறக்கவுமே சொல்லுதற்கு வளையுப்பு நாலு
சீரான வெங்காரம் மூன்று மாமே. 572

மூன்றோடு வீரமது ஒன்றுங் கூட்டி
முனிந்துமதை இப்படியே கீழ்மே விட்டு
ஆன்றோடு மூன்றுமுறைப் புடத்தைப் போடு
ஆண்மையான பொடியின்னம் சொல்லக் கேளு
கான்றோடு காவியும்நா லெடையு மாகும்
கட்டுப்பு தான்மூன்று காரம் ரெண்டு
தான்றோடு சாதிலிங்கம் ஒன்று கூட்டி
சமர்த்தாகத் தூள்செய்து வைத்துக் கொள்ளே. 573

வைத்ததுமே பூநீறு எடைதான் நாலு
வளமான பொரிக்காரம் மூன்று மாகும்
பொத்துமேதான் பொட்டிலுப்பு மெடையும் ரெண்டு
பேரான வெடையொன்று வீரந் தானும்
நந்துமதே பொடியாக்கி வைத்துக் கொள்ளு
நற்செங்க லெடைதானும் நாலு மாகும்
கைத்துமேதான் காரமெடை மூன்று மாகும்
கனத்ததுவோர் எடைரெண்டு சாரந் தானே. 574

சாரமான சாதிலிங்கம் எடையு மொன்று
தக்கதுமே தூளாக்கி வைத்துக் கொண்டு
நாரமான சாம்பலெடை நாலு மாகும்
நலமாக பொரித்தவுப்பு யெடையும் மூன்று

காரந்தான் ரெண்டெடையே கடல்நு ரையொன்று
கல்வத்தில் பொடியாக்கி வைத்துக் கொள்ளு
பூரமான குளிகைக்குப் பொன்போ டுவிதம்
பொடிவைத்து மூன்றுபுடம் போட்டி டாயே. 575

பொடியான விதுவைந்தும் சோதிக் குந்தான்
புகழாக வொவ்வொன்றில் புடமு மூன்று
அடியான ஐந்துபொடி புடமும் போட
ஆகாத கருமசத்து அகன்று போகும்
படியான பதினைந்து புடமும் போடு
பாங்கான வொன்றையுந்தான் அமர்த்தி டாது
துடியான தோடத்தைச் சாடிப் போடும்
சோதித்தால் சோதிமய மாகுந் தானே. 576

## சோதனைசெய்த சத்தைத்தான் சூதம் உட்கொள்ளும்

சோதிக்கா விட்டால்தான் சத்தெல் லாந்தான்
சோதிமய மாகாது துலக்க மில்லை
ஆதிக்கச் செம்பருண நிறத்த தாகா
அணுகிடிலோ சூதந்தான் உட்கொள் ளாது
வேதிக்க வெல்லாது வுப்புக் குள்ளே
வேதையுந்தான் காணாது சித்தி யில்லை
நீதிக்கக் குற்றங்கள் இல்லா மல்தான்
நீக்கியுமே பலதுறையும் வேதை பாரே. 577

வேதைதானிப் படியேபா ராமல் வாதி
விரைந்துமேதான் ஈயத்தை விட்டே ஊதி
போதையேதான் பொய்ப்பாட்டு என்பா ருலகோர்
பொன்கொடுத்தால் வாதிகையில் செம்பு மாகும்
ஓதைதான் உத்தமமாம் தொழிலைப் பாரு
ஒருமுறைக்கி ருமுறைமுத் திரமுஞ் சொன்னேன்
வாதைதானே யில்லாமல் நல்லோ ருக்கு
வரிசைதப்பிப் போகாமல் வரைந்திட் டேனே. 578

வரைத்திட்டேன் வாய்வீணர் தனக்குத் தானும்
வாதந்தான் பலியாமல் மறைந்து போகும்
உரைத்திட்டேன் உட்சமய மாறில் தானும்
உறுகின்ற நல்லோர்க்கு உண்மை சொல்லு



பறைத்திட்டேன் புறச்சமய மாறில் நின்ற
பாடாண்டி தன்னோடு உரைத்தி டாதே
திறந்திட்ட வாமத்தில் அழுந்தி நின்ற
சிறியோன்தான் ஆனாலும் செப்பி டாயே. 579

(அ.பொ.) :—உட்சமயம் = அகச்சமயம் (சைவம், வைணவம், காணுபத்தியம், சாக்தம், கௌமாரம், சௌரம் என ஆறு) புறச்சமயம் (சமணம், பௌத்தம், மீமாம்சம், வைசேடிகம், சாங்கியம், காபாலிகம்).

செப்பியுமே மவுனமாக இருந்து கொண்டு
சேர்ந்தேறும் வாசியிலே ஏறி யாடு
உப்பியுமே மவுனத்தி லுறைந்துப் பாரு
ஓடுகிற நாதவிந்தா லூணிப் பாரு
அப்பியுமே வாதத்தி லழுத்திப் பாரு
ஆனந்த மாயிருந்து வாமம் பாரு
தப்பியுமே குளிகையிட் டண்டம் பாரு
சராசரங்க ளனைத்தையுந்தன் னுயிர்போ லெண்ணே. 580

தம்முயிர்போ லெவ்வுயிரும் சரியாய்ப் பாரு
தன்மையான ஆசையெல்லாம் தள்ளிப் போடு
எம்முயிர்போல் எண்ணியுமே இரக்க மாகி
ஏற்றமாகக் கண்டதெல்லாம் இகழ்ந்து போடு
வம்முயிர்போல் வாசியிலே யேறி யாடு
வாமத்தின் காமத்தை மகிழ்ந்தி டாதே
வெம்முயிர்போல் குவிமுலையா ளாசை விட்டு
விம்பம்போல் தானிருந்து விளங்கி டாயே. 581

(அ.பொ.) :—ஏற்றமாக=மேலானதாக ; விம்பம்=சிலை, படிமம்.

## பூநாகந் தோற்றம்

விளங்கியதோர் பூநாகத் தோற்றஞ் சொல்ல
வியந்துலகில் சித்தியெலாம் தான்கொ டுக்கும்
புளங்கியதோர் பூருவத்தில் அசுராள் தேவாள்
பெரிதான ராட்சசர்க ளெல்லாங் கூடி
வளங்கியதேர் மகாவிண்டு சமூகத் திற்றுன்
வத்துமேதான் எல்லாரும் அடிப ணிந்து
தளங்கியதோர் சகலருமே நோயி னால்தான்
தத்தளித்துத் துன்பத்தால் அழிந்திட் டேமால். 582

(அ.பொ.) :—சமூகம்=முன்னிலை.

தாழ்ந்துமேதான் போகாமல் நித்தி யராக
தருக்கியுமே இருப்பதற்கு வுபாயம் சொல்லும்
ஆழ்ந்துமேதான் அனைவருமாய்க் கேட்கும் போது
அப்போது மகாவிண்டும் அறிந்து சொல்வார்
எழுந்துமேதான் நீங்களெல்லாம் ஒன்றுய்க் கூடி
ஏற்றதொரு பாற்கடலில் சென்று தானும்
பாழ்ந்துமேதான் பாற்கடலில் மந்திர கிரியை
மத்தாக நாட்டியுமே மர்த்திப் பீரே, 583

(அ.பொ.) :—நித்தியராக=அழியாமல் எப்போதும் நிலைத்திருப்பவராக ; மர்த்திப்பீர்=கடைவீர்,

மர்த்தித்தால் நாம்வருவோ மென்று சொல்லி
வந்தோரை அனுப்பிவிட்டு விண்டு தானும்
அர்த்தித்தார் எல்லாரும் ஒருமித் துத்தான்
அரியமந்தி ரகிரியைமத் தாக நாட்டி
வர்த்தித்தார் வாசுகியை நாணுப் பூட்டி
மதிப்பான ராட்சசரும் சுரரும் தானும்
ஓர்த்தித்தார் அசுரரொரு புறம்க யிற்றை
உம்பர்கள் தாம்மறுபு றமேயி ழுத்தார். 584

(அ.பொ.) :—நாணுப்பூட்டி=கடைகயிருகச் சேர்த்து.

இழுத்திடவே மந்திரகி ரிதலை கீழாச்சு
எல்லாரும் விஷ்ணுவைத்தான் வழிபட்டு நிற்க
கொழுத்திடவே கூர்மாவ தார மாகி
குனிந்துமேதான் மந்திரகி ரியைத்தாங் கிடவும்
விழுத்திடவே விரைவாகக் கடையும் போது
விடங்கக்க ஆலகாலத் தையுமே தானும்
உழுத்திடவே பரவியேதான் எங்கும் பொங்கி
உக்கிரசங் காரமாகத் தகிக்க லாச்சே. 585

(அ.பொ.) :—கூர்மம்=ஆமை ; உக்கிர=மிக்கசத்தி, சுருசுருப்பு ; சங்காரம்=அழித்தல் ; தகிக்க=எரிக்க.

தகிக்கவேதான் தேவாதி தேவ ரெல்லாம்
தனித்தசிவ னண்டைபோய்க் காத்தி யென்ன
அகிக்கவேயட் சயத்தால்கை யமர்த்தித் தானும்
அழைத்துமேதான் நஞ்சதனை ஏற்றுக் கொண்டார்



மகிக்கவேதான் மறுபடியும் கடையும் போது
மதிப்பான அமுதத்தை யெடுத்துக் கொண்டு
துதிக்கவேதான் மகாவிஷ்ணு மோகினி யாகி
தேவராட்ச சஅசுரான்சி தைப்பித் தாரே. 586

(அ.பொ.) :—சிதைப்பித்தார்=அழியச்செய்தார்.

சிதையுற்ற அமுதத்தைப் பருகும் போது
தேவர்கள் போலசுரா ளும்கொண் டிட்டார்
விதையுற்ற மகாவிஷ்ணு தான றிந்து
விடுக்காக அசுரருண்ட அமுதந் தன்னை
வதையுற்ற வாந்தியாய் எடுத்துப் போட
மார்க்கந்தான் செய்துவைத்து கக்க லாக்க
புதையுற்ற பூமிதனில் அமுதம் வீழ
புருடோத கசெந்துவாக சபித்திட் டாரே. 587

(அ.பொ.) :—புருடோதக செந்து=மண்புழு.

சபித்திடவே சமுத்திரத்தின் கரையில் தானும்
தங்கிடவே பூநாகம் தோற்ற மாச்சு
கபித்திடவே சமுத்திரத்தின் கரையில் தானும்
கனமான அலையிரண்டு வற்றும் போது
தபித்திடவே தலையெடுத் தெட்டிப் பார்க்கும்
தாமதமே யில்லாமல் இழுத்துக் கொள்ளும்
உபித்திடவே பூநாகம் விதம்ரெண் டாகும்
உண்மையாக குருதிபோலொன் றுண்டு தானே. 588

## பூநாக விவரம்

ஒன்றுதானே வெளிறினதோர் சிவப்பு மாகும்
உயர்ந்திட்ட சிவப்பதுதான் உத்த மந்தான்
பன்றுதானே சத்துக்குப் பலித மெத்த
பாங்கான ரசாயனத்தீ பனியு மாகும்
வின்றுதானே வெளிறினதோர் சிவப்பு தானும்
மேன்மையான மருந்துக்கு நிதியு மாகும்
கன்றுதானே போட்டெடுத்த ஆவைப் போலே
கதறுமேதான் பூநாகம் ரசத்தில் தானே. 589

(அ.பொ.) :—பலிதம்=வெற்றியாம் ; ரசாயனம்=உடல்தேற்றி ; தீபனி=செறிப்பிக்கும் சாதனம் ; நிதி=வைப்பு.

பூநாகம் தானென்றும் பூறைக் காலி
பெருத்தநில வேரென்றும் பூசிப் பானென்றும்
கூநாகம் கோபீறு ரத்த ஜந்து
குணமான பூலதாசந் தாகஞ் சித்தி
நாநாகம் மாதத்துண் டகமு மாகுந்
நன்மையான வச்சிரநல் மாணி யுமாகும்
வேநாகம் விடங்களெல்லாம் போக்கி வைக்கும்
விடுபட்டப் பூநாக விவர மாமே. 590

விவரமான பூநாகம் இத்தை விட்டு
வேறென்று நீர்த்தாழ்ந்த விடங்கள் செருதி
சிவரமான செந்தரையில் சேற்று மண்ணில்
சின்னமாக குப்பையினில் திரளா யுண்டு
தவரமாக நாங்கூழ்தா னென்ற பேரு
நன்மையாகப் பாராது சத்து தானும்
குவரமாக சத்துக்குள் குணமொன் றில்லை
குப்பையிலே கிடக்கின்ற நாங்கூழ் தானே. 591

ஆமென்ற முன்சொன்ன பூநா கந்தான்
அளந்துமேதான் படியொன்று பாலில் போட
வாமென்ற மண்ணெல்லாங் கக்குங் கீழே
மறுநாள்தான் அதையெடுத்துச் சட்டி யிட்டு
நேமென்ற நீர்விட்டுக் கழுவிப் போட்டு
நேர்ந்ததுவோர் ஆட்டுச்சா ணிதன்னி லேதான்
வேமென்ற பூநாகம் தனைப்பி சைந்து
வில்லைபோலே இலேசாகப் பண்ணி டாயே. 592

(அ.பொ.) :—ஆட்டுச்சாணி=வெள்ளாட்டு மலம்.

பண்ணியுமே மிடுக்கான வெயிலில் போட்டு
பாந்தமாக வுலர்த்தியேதான் மண்வீ ழாமல்
புண்ணியுமே பெரும்பாண்டந் தனில டைத்து
பெருஞ்சட்டி யால்மூடி மண்ணைச் செய்து
நண்ணியுமே நால்சாமம் எரித்த பின்பு
நழுகாம லாறவிட்டுக் காடி வார்த்து
கண்ணியுமே கையாலே பிசைந்த பின்பு
கருதியதோர் சாம்பலெல்லாங் கழல ஆதே. 593

கழலவேதான் சாம்பலெல்லாங் கரைத்தி றுத்து
கனமான செம்பெல்லா மடியில் நிற்கும்
மழலவேதான் மேல்சாம்பல் இறுத்துப் போட்டு
மின்னலாக செம்புபோலே யடியில் நிற்கும்



சுழலவேதான் சூதமொரு பலந்தான் போட்டு
துழாவிடவே செம்பெல்லாம் பிடித்துக் கொள்ளும்
உழலவேதான் உருண்டைபோல் வாங்கிக் கொண்டு
ஒக்கவேதான் போடுகிற மருந்தைக் கேளே. 594

## பூநாகச் சந்து

மருந்துதானே யேதென்றால் சொல்லக் கேளு
வாதமென்ற குடோரியும்வெங் காரம் வீரம்
திருந்தவேதான் பஞ்சமித்தி ரமுந்தான் கூட்டி
திறமான வெடியுப்பு நீரா லாட்டி
உருந்துதானே ஓட்டிவிட்டுப் புடத்தைப் போட்டு
உருட்சியான குகையிலிட் டூதிப் போட
திருந்துதானே செம்புபோலே சத்தாய் நிற்கும்
திறமான மித்திரனில் சாய்த்தி டாயே. 595

சாய்த்திடவே பதினைந்து தரந்தா னானால்
சத்தெடுத்துக் குளிகையெடைக் கெடைதா லிய
ஆய்த்திட்ட வசுரன்போல் முகமு மாகி
அடைந்ததெல்லா முட்கொள்ளா தீப னந்தான்
வேய்ந்திட்டு முந்தியிடு பூநா கச்சத்து
விரைந்திட்டு பின்புமற்ற தெல்லா மூட்டு
காய்த்திட்ட பூநாகச் சத்தில் தானும்
கனகமய மாகுந்தான் கண்டி டாயே. 596

கண்டதொரு குளிகைக்குப் பச்சைச் சூதம்
காட்டினாலே ஆவென்று பிடிக்கும் பாரு
உண்டதொரு நூறுதொந்தம் உண்ணு முண்ணும்
ஊட்டியுமே இச்சூதம் சாரணைச் செய்ய
பண்டபரி பூரணமும் பராப பரைத்தாய்
பளிச்சென்று காட்டிவைக்கும் பரிவாய்த் தானும்
தண்டதொரு நாலையுந்தான் அடக்கி வைக்கும்
தாண்டவமாம் பேரண்டந் தன்னில் தானே. 597

## விளக்கங் கூறல்

தன்னிலேதான் வேதையைத்தா னுட வென்றால்
தன்மைதனி லிருப்பதற்கு வேலை யில்லை
வென்னிலேதான் வேலையுட நீர்பற் றுது
விளக்கமாக மைகாப்புச் சாற்ற வென்றால்
எண்ணிலேதான் யான்பார்த்தேன் முடிவைக் காணேன்
ஈசுவரன் நூல்கண்டு இயம்பிட் டாரே. 598

இயம்பிட்ட எந்தனுட வாத நூலை
எவரெவர்கள் பார்த்தாலும் முழுதும் பாரு
பயம்பிட்ட வெந்நூலைப் பாந்த மாக
படபடப்பாய்ப் பாராமல் கருவாய்ப் பாரு
நயம்படவே நடுக்காண்டம் முதலுக் குள்ளே
நவலோகக் களங்குதனை நாடிப் பாரு
அயம்பிட்ட வேதையது அடுக்க லாகும்
அடர்ந்துமேதான் சாத்திரத்தின் கருவைக் காணே. 599

(அ.பொ.) :—இயம்பிட்ட=சொன்னதான ; படபடப்பாய்=துரிதமாக ; கருவாய்=கருத்தூன்றி.

## நற்புத்தி புகலல்

காணாத வாதம்வந்து புத்தி மட்டாய்
கடுகியுமே பிறப்பில்லை யென்று சொல்லி
தோணாத கோடான கோடி பாவம்
சூட்சமாகக் கனவதனை நினைப்பாய்ப் பாவி
பூணாதப் பிறவியென்ற பிறப்பு தானும்
புத்திகெட்ட நீசனாகப் பிறப்பாய் காணே
நாணாதப் பிறவியிலே சுகிர்தம் செய்தால்
நலமான சுகிர்தத்தா லீவாள் தாயே. 600

(அ.பொ.) :—சுகிர்தம்=நல்லகன்மம் (அ) புண்ணியம்.

ஈயவுமே வாதசித்தி தன்னைப் பார்த்து
இளமங்கை தனக்காகப் பாவம் செய்வார்
தோயவுமே வாதத்தின் பொன்னைக் கண்டு
துணிகரமாய் அடித்தாலே துடுக்குச் செய்வார்
ஏயவுமே இகத்துக்கும் பரத்துக் குந்தான்
ஏற்றமது இல்லாமல் இழந்து போவான்
பாயவுமே பல்காட்டி விளையாட் டாக
படிப்படியாய் பாவத்தைச் செய்வார் பாரே. 601

(அ.பொ.) :—ஏய=பொருந்தி.

பாரிந்த லோகத்தோர் தனக்குத் தானும்
பருவமாகப் புத்திசொன்னேன் பார்த்துக் கொள்ளு
நேரிந்த புத்திவிட்டால் வாதம் பொய்யாம்
நேரான மனதெல்லாம் ஒத்துக் காணும்



காரிந்த தேகத்தைக் கற்ப மூண்டு
கடுகியுமே வாசிதன்னி லேறி யாடு
வாரிந்த மாறியுமே மூன்றும் வீதி
வரிசையாக ஏறியே மருவி டாயே. 602

(அ.பொ.) :—கடுகி=விரைந்து.

## மனிதர் பல் முதல் முத்துச்சிப்பி வரையில் (7) சத்துகள்

மருவியுமே மனிதர்பல் செவ்வட் டைதான்
மழுத்தியஇந் திரகோபம் கோழி நெஞ்சும்
தருவியுமே தவளையுட எலும்பி னோடு
தாக்கான கரடிநகம் முத்துச் சிப்பி
கருவியுமே இவ்வேழும் வெவ்வே றாக
கனம்பார்த்து வெவ்வேறு நிறுத்துக் கொண்டு
குருதியுமே கோமயத்தி லூறப் போட்டு
குருகவுமே மூன்றும்நாள் எடுத்துக் கொள்ளே. 603

எடுத்துமேதான் வெவ்வேறாய் வைத்துக் கொண்டு
ஏற்றமான பொடியாகத் தானு ருக்கி
வடுத்துமேதான் வாதமென்ற குடோரி வீரம்
வகையான வெங்காரம் குன்றி வித்து
தடுத்துமேதான் ஏரண்ட வித்தி னோடு
சாங்கமான நேர்வாளம் வேம்பின் வித்து
விடுத்துமேதான் புரசினுட வித்தி னோடு
விவரமாக வகைவகைக்குப் பலமு மாமே. 604

(அ.பொ.) :—புரசினுடவித்து=பலாசவிதை.

பலமான இதுவெல்லாம் வெடியுப்பு நீரில்
பாங்காக அரைத்திட்டு மூன்று நாள்தாம்
பிலமான மனிதர்பல் தன்னில் போட்டு
பிலத்தரைத்து புடம்போட்டுக் குகையி லூது
குலமான முத்துப்போல் மணியு மாகும்
கொடிதான கரடெடுத்துப் பின்னு மூது
அலமாக ஐந்துமுறை யிப்படித் தானூது
அடங்கலுமே இப்படியே யூதி டாயே. 605

ஊதியுமே இப்படித்தான் சத்தை வாங்கி
உருவெடுத்து நட்பதனில் பின்பு சாய்ப்பாய்
பாதியுமே பதினைந்து முறைதான் சாய்த்து
பாங்காக ஒவ்வொன்றாய்க் குளிகைக் குத்தான்

நீதியுமே கொடுவித்து விடுவித் துப்பார்
நேரான குளிகைதன்னை வாயில் வைத்தால்
வேதியுமே அண்டத்தில் சுருக்கா யோடும்
விரைந்துமேதான் மிடுக்காகும் குளிகை யாமே. 606

மிடுக்காகும் குளிகைதன்னை செந்தூ ரித்துண்
வெகுதூரம் வெகுலோக மெட்டி யோடும்
மடுக்கான மணிபோலே உடல தாகும்
வாகான கையிரண்டும் கல்தூ ணாகும்
திடுக்கான சீக்கிரத்தில் சித்தி யாகும்
செப்பரிது இவ்வேழின் செந்தூ ரந்தான்
இடுக்கான லோகத்தி லெட்டி யோடும்
இவ்வேழு மார்க்கத்தின் இயல்பு தானே. 607

இயல்பான வாதத்தை முன்னே பாரு
ஏற்றமான பொறியெல்லா மிடிந்தே போகும்
கயல்பான உலகத்தின் காட்சி யெல்லாம்
காரணத்திற் கிடமென்று கருத்தி லெண்ணி
வயல்பான வாசிதன்னி லேறி யாடி
மனதுன்னி இருந்திட்டுக் காலை யாட்டு
நயல்பாக மாறியுமே மூன்றும் வீதி
நாலையுந்தான் உனக்குள்ளே நாடி டாயே. 608

(அ.பொ.) :—காலை=காற்றை ; நாலை=சிதாகாசம், மதியொளி மண்டலம், அமுதபானம், உன்மணித்தாய்த் தரிசனம்.

நாடியுமே மனதுன்னி நாலைப் பாரு
நாய்போலே அலையாதே வாதந் தன்னில்
வாடியுமே மயங்காதே வாய்பே சாதே
மதியோடே மகத்தான நூலைப் பாரு
பூடியுமே பூலோக வாசை தானும்
பொறிகலங்கி பிடரியேறித் தானே கொல்லும்
தேடியுமே தேசமெங்கும் எச்சில் தின்று
திருடனாக வுலகத்தோர் சீயென் பாரே. 609

(அ.பொ.) :—மதி=புத்தி.

## கருக்கோள் விவரம், வாத விவரம்

இணக்கமாக கன்னியவள் பூத்தா ளாகில்
இயங்கியுமே ஐந்தாளுள் கணவன் சேரில்
உணக்கமாக கருக்கோடல் தோற்ற மாகி
உதிரத்தில் மலமிஞ்சில் ஊமைப் பிள்ளை



தணக்கமாக நீர்மிஞ்சில் குருடு மாகும்
தர்யார்தான் உதிரத்தில் வன்னி மிஞ்சில்
பிணக்கமாகப் பெரும்பாடாய்ச் சாய்த்துப் போடும்
பிரண்டுமேதான் பைக்குள்ளே வாயுக் கேளே. 610

(அ.பொ.) :—கருக்கோடல் = பிள்ளையுண்டாதல் ; வன்னி = தீ (பித்தம்). பை=கருப்பை.

வாயுவது மிஞ்சிவிடில் சுக்கி லத்தை
வர்த்திக்க வொட்டாமல் முறித்துப் போடும்
வாயுவதில் ஆகாச மிஞ்சி னின்றால்
அழகான மங்கையரும் மலடி யாவாள்
பேயுவது வாதத்தில் பிருதிவி மிஞ்சில்
புகுதாமல் மேல்பிடித்துக் கடித்துக் கொள்ளும்
தாயுவது நீர்மிஞ்சில் லோகந் தன்னில்
தாக்கினாலே மிகவூறி யுறங்க லாமே. 611

(அ.பொ.) :—வர்த்திக்க = பெருக, வளர ; முறித்துப்போடும் = தடுத்துத் திருகிவிடும் ; புகுதாமல்=நுழையாமல் ; லோகம்=உலகம், பிருதிவி.

உறங்கியுமே வன்னியது உயர்ந்து மிஞ்சில்
உறுதியான புடத்தில்பொன் மாய்ந்து போகும்
திறங்கியுமே வாயுவது மீறி னக்கால்
சிட்டமாகப் பந்துபோல் கறுப்பாய்ப் போகும்
வறங்கியுமே வான்தானும் மிகவே மிஞ்சில்
வண்ணங்க ளில்லாமல் மாய்ந்து போகும்
இறங்கியுமே இம்முறையில் இசைந்து பாரு
ஏற்றமாக வாதமெல்லா மெளிதி லாமே. 612

(அ.பொ.) :—வான்=ஆகாயம் ; சிட்டம்=அதிக வேக்காட்டாக் மண் ணுருகி வலித்து போதல் ; புத்து=புற்று.

## கருக்கோள்வதில் வயதறிவது

எளிதாக வயதினுட ஏற்றங் கேளு
இடைமண்ணில் எழும்பியுமே பூரித் தோடில்
வளிதாக வாழுகின்ற பெண்ணே யாவாள்
வயதங்கே நூறதுவும் மகிழ்ந்து நிற்கும்

தெளிவாக வாசியது நீரி லோடில்
செயமான வயததுவும் எண்ப தாகும்
களிதாக தீயதனில் ஓடி னுக்கால்
காலந்தா னறுபதென்று கருத லாமே. 613

(அ.பொ.) ;—இடை=இடகலை ; மண்=பிருதிவி ; நீர்=அப்பு.

கருதியுமே வாயுதன்னில் அடங்கி நின்றால்
காலந்தான் நாற்பதென்றே கருத லாகும்
வெருதியுமே விண்தனிலே யோடி னுக்கால்
விளங்கியுமே இருபதாம் வயது மாகும்
பருதியுமே பஞ்சபூதங் களெல்லாந் தானும்
பாங்காக வொடுக்கத்தில் கருப்ப மாகில்
குருதியுமே குழந்தையிலே சாவு மாகும்
கோடான கோடியென்ற பிறவி யாச்சே. 614

பிறவியாக தானென்ற பூத மேறில்
பிரித்துமேதான் தனஞ்செயனும் ஆடுங் காலம்
திறவியாக கடிகைதன்னைத் திட்ட மாகச்
சீரோடே பிரித்துமேதான் விளக்கிப் பாரு
கறவியாக கணக்கதுவும் சரியாய்ச் சென்றால்
கடிகைக்குள் வயதெல்லாம் வெளியாய்ப் போகும்
அறவியாக ஆதியந்தம் பிரித்துப் பார்த்து
அறிந்துமேதான் வயதில்மிகு நிதான மாக்கே. 615

ஆக்கியுமே மனிதருட கருப்பம் போலே
அறிந்துமதே வாதகரு வறிந்து கூட்டு
தாக்கியுமே இதுரெண்டு மொத்துப் பார்த்துச்
சாதகத்தைத் தானறிந்து சமர்த்தாச் செய்வாய்
பாக்கியுமே சரக்கின தைந்து பூதம்
பாங்காகத் திறந்திட்டு நிகண்டில் சொன்னேன்
போக்கியுமே அவனாளாய்ப் போகொட் டாமல்
புகுந்துமேதான் சாத்திரத்தில் புகுந்து பாரே. 616

(அ.பொ.) ;—சாதகம்=ஆதாயம் (அ) ஆக்கந்தரும் நோக்கம் ; அவனாள்=கெட்டதினம்.

புகுந்துமதே சரக்கினிலே ஐந்து பூதம்
பிரித்துமதே ஒவ்வொன்றாய்த் திறந்து பார்த்து
அகுத்துமதே அரக்கில்நின் றசாயம் போலே
ஆரஞ்சால் பலனுண்டு வாத முண்டு



துகுத்துமதே ஆறுதலம் சோதித் தேறு
சொக்கியுமே இதிலுறைந்து சேர்ந்தா னானல்
மகுத்துமதே தேறியேதான் மன்ன னாகி
மதிப்பான சிவிகையின்மே லேறு வானே. 617

(அ.பொ.) ;—ஆரஞ்சால்=ஆராய்ந்தால் ; சிவிகை=பல்லக்கு.

ஏறியேதான் சிவிகைதனைச் சுமக்கும் பாவம்
எண்ணாதே இறுமாந்து பேரு டைத்தாய்
தேறியுமே மனதுதானும் ஆங்கா ரத்தால்
சினமாகிக் கண்டினையும் தானு மாவார்
மாறியுமே மனம்பிடித்து சிவயோ கத்தின்
மார்க்கத்தின் வழிபாடாய் மருவி விட்டால்
ஊறியுமே வுறைந்தாக்கால் யோகந் தன்னில்
உத்தமமாம் வாதம்வந்து உறையுந் தானே. 618

## சங்கு தோற்றம்

உறைக்கின்ற சங்கினுட தோற்றங் கேளு
உற்றதுவோர் துவாபரமா யுகந்தன் னில்தான்
பறைகின்ற பாஞ்சசன்னி யனென்று தானும்
பாங்கான யட்சனவன் கொடுமை மிக்கோன்
நிறைகின்ற மேகவண்ணன் தனக்குத் தானும்
நேர்ந்ததுவோர் குருவின்தன் செல்வன் தன்னை
நறைகின்ற இராக்கதன்தான் விழுங்கி விட்டு
நடுக்கடலில் ஒளிந்துகொண்டான் நடுங்கித் தானே. 619

(அ.பொ.) ;—மேகவண்ணன்=திருமால் ; செல்வன்=பிள்ளை.

நடுங்கியுமே குருதானும் கடலுக்[]கேதான்
நாடிவந்து தலைமுழுக்குச் செய்த[]பின்பு
திடுங்கியுமே பிள்ளைதன்னைத் தேடும் போது
தேசதேசத் திலெல்லாருமே காணு மற்றுன்
ஒடுங்கியுமே மாயவன்றன் பக்கம் வந்து
உருகின்ற கடலில்த லைமுழுக்குக் குப்போய்
மடுங்கியுமே பிள்ளைதன்னைத் தேடிப் பார்த்தோம்
மாதேச தேசமெல்லாந் தேடி னோமே. 620

தேடியுமே தேசமெங்கும் ஆராய்ந் திட்டோம்
சிக்கவில்லை யென்றுசொன்னார் திருமால் முன்னே
நாடியுமே மாயவன்தான் மனதி லெண்ணி
நடுக்கடலில் ஒளிந்திருந்த அசுரன் தன்னை

மூடியுமே பிடித்துவந்து வயிற்றைக் கீறிப்
　　பிள்ளைதனைப் பார்க்கிலுமே இல்லா ததாலே
பாடியுமே சங்கிரண்டு விருக்கக் கண்டு
　　பதறியுமே தானெடுத்தார் விஷ்ணு தானே. 621

(அ.பொ.) :—சிக்க=அகப்பட ; மாயவன்=மால்.

எடுக்கவுமே அசுரன்தான் வீடுபே றுற்றான்
　　எமதர்ம ராசனையும் தான ழைத்து
கொடுக்கவுமே குருவினுட பிள்ளை தன்னை
　　குணமான சங்குரெண்டும் விஷ்ணு தாமும்
தடுக்கவுமே தம்மண்டை வைத்துக் கொண்டார்
　　தயவாக விந்திரனுக் கொன்றை ஈந்தார்
படுக்கவுமே பாஞ்சசன்னி யருகே வைத்தார்
　　பாங்கான தேவதத்தம் அளித்திட் டாரே. 622

(அ.சொ.) :—வீடுபேறு=மோட்சம் ; தம்மண்டை=தம்மிடம்.

## சங்கு சந்து

அளிக்கவுமே தேவதத்த மென்ற சங்கை
　　அருச்சுனர்க் களித்தானே இந்திரன் தானும்
களிக்கவுமே சங்கதுவும் பலந்தான் பத்து
　　கழுகிடவே வுவர்மண்ணும் சுக்கான் சுண்ணம்
சளிக்கவுமே தண்ணீரில் சமன்க ரைத்து
　　சங்குதனைப் போட்டெரிக்கச் சுத்தி யாகும்
புளிக்கவுமே பொடியாக்கி வெடியுப்பு நீரில்
　　போட்டரைத்து வாதமென்ற குடோரி போடே. 623

(அ.பொ.) :—கழுகிட=கழுவிவிட ; உவர்மண்=உழமண் என்பர்;
சுக்கான் சுண்ணம்=கற்சுண்ணும்பு.

போடவுமே சவ்வீரம் பலந்தா னென்று
　　போக்கியதோல் அதுவும் பலந்தான் குன்றி
வீடவுமே வெங்காரம் பலமு மொன்று
　　மேஷத்தின் சீவலது பலமும் ஒன்று
தாடவுமே தாளகமும் பலமு மொன்று
　　தாக்கான குதிரைப்பல் பாடா ணமொன்று
கூடவுமே குக்கிலது பலமும் ஒன்று
　　குண்டுமணி யிலைச்சாற்று லரைத்தி டாயே. 624

(அ.பொ.) :—குன்றி=குன்றிமணி ; மேடத்தின் சீவல்=வெள்ளாட்
டுக் கொம்பு சீவல்.



அரைத்துமதை வில்லைதட்டிப் புடத்தைப் போடு
　　அதட்டியுமே குகையிலிட்டு வுருக்கி னுக்கால்
மறைத்துமதே மணிமணியாய்ச் சத்து மாகும்
　　மாசற்ற சத்தெல்லாம் பொருக்கிக் கொண்டு
புரைத்துமதே ஐந்துமுறை யிப்படி யூதி
　　பொருக்கியுமே சத்தெல்லாம் நட்பத னில்சாய்
குரைத்துமதே குளிகைக்குச் சாரணை யீந்து
　　குணமாக விடுவித்தால் நாத மாமே. 625

நாதமான குளிகையிலே வோடும் போது
　　நலங்கீதம் காதுகளில் செவிடா கிப்போம்
பாதமான குணந்தானும் மவுன மாகும்
　　பறக்கையிலே பசியில்லை சோப மில்லை
வேதமான முடிவான ஞான மீறும்
　　விண்ணுலகில் சித்தரோடு வினவ லாகும்
காதமான கோடிலட்சங் கடிகை யாகும்
　　கண்கொள்ளாச் சித்தியெல்லாங் காணும் பாரே. 626

காணவுமே களங்கிட்டுக் கடிசு கண்டால்
　　கனகத்தை நாவிலொன்று சேர்த்துக் கொண்டு
பூணவுமே சுக்கான்கல் தன்னைத் தானும்
　　பெருமையாக கோமியம்விட் டரைத்துக் கொண்டு
தோணவுமே வட்டமான குகைபி டித்து
　　சுறுக்கான களங்கிட்ட லோகம் வைத்து
வாணவுமே வங்கமென்ற நாளத் தூது
　　வடிந்துமதே பழுப்புமைதான் யற்றுப் போமே. 627

அற்றுப்போம் ஆட்டெலும்பு சுட்டுக் கொண்டு
　　அரைத்துமதை காடிவிட்டு மைப்போல் தானும்
வற்றுப்போம் வட்டமான குகைப்பி டித்து
　　வலிந்ததோர் லோகத்தில் தாய்ச்சேர்த் தூது
செத்துப்போம் தாயில்லாக் களங்கு மெல்லாம்
　　செப்பியதோ ரிப்படிதா னூதா விட்டால்
இத்துப்போம் கம்பிக்கு வரமாட் டாது
　　எந்தெந்தப் படிபார்த்தும் பொய்யாய்ப் போமே. 628

போகாம லெருமையுட மாட்டுச் சாணி
　　பெருங்கிளிஞ்சல் சுண்ணமது சமனுச் சேர்த்து
வாகாமல் வாட்டம்போல் குகைபி டித்து
　　வாசான களங்கைவங்க நாளத் தூது

சாகாமல் லோகமது சத்து மாகும்
தாயிட்டுச் சோதித்துச் சவளை யாக்கு
நீகாமல் மூட்டத்தை மூட்டி யூது
நிமிடத்தில் குற்றங்கள் நீங்கிப் போமே. 629

நீங்கவுமே மாக்கல்லு பலமு மொன்று
நேரான வளையலுப்பு அரைப்ப லந்தான்
வாங்கவுமே பொன்சேர்ந்த களங்கு தானும்
வாறுக்கும் வாராம லுடைந்த தென்றால்
ஓங்கவுமே யிதில்வைத்து ஊதிப் போடு
உதிராமல் பட்டயம்போல் வொதுங்க லாகும்
தீங்கவுமே களங்கதுவும் தீய்ந்தி டாது
செப்பியதோர் முறையெல்லாந் தெளிந்து கொள்ளே. 630

தெளிந்துமேதான் பூநீறு அரைப்ப லந்தான்
சீனமது கால்பலத்தை யொக்கக் கூட்டி
பிழிந்துமேதான் பழச்சாறு விட்ட ரைத்து
பிலக்கவுமே வட்டம்போல் குகையைப் பண்ணி
கழிந்துமதை கரியோட்டின் மேல ரைத்து
கனமான வங்கமென்ற நாளத் தூது
சலித்துமதே விட்டாக்கால் வாத வித்தை
தக்காது கருத்தாளாய்த் தொழிலைப் பண்ணே. 631

பண்ணவுமே பழஞ்செங்கல் பொடிதா னுலு
பருசான கல்லுப்புப் பலமும் ரெண்டு
விண்ணவுமே பழச்சாறு விட்ட ரைத்து
விரியாமல் வட்டமாக மூசை செய்து
கண்ணவுமே கலிக்கின்ற லோகந் தன்னில்
காரியம் விட்டுமேதான் யிதையே யூது
உண்ணவுமே கைவேணுஞ் சகலத் திற்கும்
உதவிபோலூற் றுக்குத்தான் மூசை யாமே. 632

(அ.பொ.) :—பழஞ்செங்கல்=பழைய செங்கல்.

ஆமென்ற கருவளையல் பலமு ரெண்டு
அழகான கறியுப்பு பலமு மொன்று
தாமென்ற காடிவிட் டரைத்துக் கொண்டு
தகுந்ததோர் களங்குதன்னை மூசைக் குள்ளே



நாமென்ற நடுவைத்து நாளத் தூது
நற்சாதி லிங்கத்தைப் பத்துக் கொன்று
வேமென்ற வெங்காரம் சமனுய்ச் சேர்த்து
மிரளாதே பொடித்துமதை முகத்தில் தூவே. 633

(அ.பொ.) :—கருவளையல்=வளையலுப்பு ; முகத்தில்=உருக்குமுகத்தில்.

தூவவுமே தூசியெல்லாம் அகன்றுப் போகும்
சுப்பிரமாய்த் தானிருக்கும் துலக்க மாகும்
பாவவுமே சாம்பலது பலமும் ரெண்டு
பாங்கான வளையல்மண் பலமு மொன்று
காவவுமே காடிவிட்டு அரைத்துக் கொண்டு
கல்வடைபோல் மூசைபண்ணிக் களங்கு வைத்து
நாவவுமே வங்கமென்ற நாளத் தூது
நலமான மிருதாரு காரங் கூட்டே. 634

(அ.பொ.) :—சுப்பிரம்=துலக்கம்=பரிசுத்தம். மிருதாரு=மிருதாரு சிங்கி ; காரம்=வெங்காரம்.

கூட்டவுமே பத்துக்கு ஒன்று தானும்
கூறுக பொடித்துமேதான் முகத்தில் தூவு
பூட்டவுமே பொடிப்பெல்லாந் தான டங்கி
பொன்போலே மணியுமாகப் பூட்டிப் பாரு
மாட்டவுமே விபூதியது பலமும் ரெண்டு
மாசற்ற வளையல்மண் பலமு மொன்று
தேட்டவுமே தேனுலே யரைத்துக் கொண்டு
சிறுமூசை யாய்ப்பிடித்துக் களங்கை யூதே. 635

ஊதவுமே காந்தமது பலமும் ரெண்டு
உதிர்கின்ற மண் தானும் பலமு மொன்று
கோதவுமே கொள்ளுச்சாறு தனில ரைத்து
குறுகவுமே மூசைபண்ணிக் களங்கை வைத்து
போதவுமே வங்கமென்ற நாளத் தூது
பொரிக்காரம் பத்துக்கு ஒன்று கூட்டி
நீதவுமே சிறுமாக்கல் சமனுய்ச் சேர்த்து
நேகரைத்துத் தூள்செய்து மேலே தூவே. 636

தூவியுமே பூதிவிட்டுச் சுருக்காய்த் தானும்
சோதிக்கக் குற்றங்க ளற்றுப் போகும்
பாவியுமே நெகடையைத்தான் சித்த ரெல்லாம்
பண்பாக விதிக்கவில்லை இதுதா னென்று

நீவியேழா யிரத்தில்தான் நிலைக்கச் சொன்னேன்
நிகடவைத்துக் களங்கெல்லாம் ஊதிப் போடு
தேவியுமே சொல்லிடவே கேட்டுக் கேட்டுச்
செப்பினேனே நூலுக்குள் தெளிவாய்த் தானே. 637

தெளிவான வெண்கூழாங் கல்தா னென்று
சிந்தாத கல்லுப்பு அரைப்ப லந்தான்
பிளிவான பழம்புளிதான் கரைத்த நீரில்
பிறழாமல் தானரைத்து மூசை செய்து
களிவானக் களங்கைவைத்து நாளத் தூது
குற்றங்க ளெல்லாந்தா னகன்று போகும்
பளிவான பளிச்சென்று ஊற லற்றுப்
பாங்கான நிர்மலந்தா னுகும் பாரு. 638

## பவழந் தோற்றம்

ஆகின்ற பவழத்தின் பிறப்புக் கேளு
ஆதியான வலாசூரன் அரக்க னென்பான்
தாகின்ற ராட்சசன்தன் தசைக்கோ சந்தான்
சண்டையிட்டுத் தேவரெல்லா மிருக்கும் போது
தோகின்ற கடல்தன்னில் போய்வி ழுந்து
சுத்தமான பவழமது தோற்ற மாச்சு
ஏகின்ற இந்திரன்வச் சிராயு தத்தால்
ஏற்றமான மலைதன்னின் சிறகைக் கேளே. 639

(அ.பொ.) :—தசைக்கோசம்=மாமிசம் ; (திருவிளை. மாணிக்கம் விற்ற படலம் பார்க்கவும்).

கேளேவச் சிராயுதத்தால் சிறகைக் கொய்ய
குருதியது கடல்தன்னில் போய்வி ழுந்து
ஏளேநீ இவ்விரண்டால் பவளந் தானும்
ஏற்றமான வுற்பத்தித் தானு மாச்சு
வாளேதான் வலன்தசையில் தோற்ற முற்ற
மாசற்ற பவழத்தின் வன்மை கேளு
வேளேதான் வெளிறினதோர் சிவப்பு மாகி
மிக்கான குன்றிமணி நிறமு மாமே. 640

(அ.பொ.) :—கொய்ய=அரிய.

நிறமான முருக்கம்பூ இதழ்போ லுந்தான்
நிசாசூரன் சதையிலுற் பத்தி யான
குறமான பவழநிறம் கனமு மாகும்
குருதியாம லைசிறகிலுற் பத்தி யான



திறமான பவழத்தின் குணத்தைக் கேளு
சிவந்துமேதான் கடலினடி தன்னில் தானும்
பிறமான பவழமான கொடியே பொன்று
பெரும்நத்தைப் பிரபையுமா யிருக்குந் தானே. 641

(அ.பொ.) :—முருக்கம்பூ = முள்முருக்கம்பூ (செந்நிறம்) ; நிசாசரன்=அரக்கன் ; பிரபை=ஒளி.

## பவழ வைப்பு

இருக்குமேதான் கிளிமூக்கின் நிறமே யொன்று
ஏற்றமான அபூர்வமாகக் கிட்டும் பாரு
பருக்குமதே சங்கினுட மாவோர் பங்கு
பாங்கான லிங்கமரைப் பலமுங் கூட்டி
தருக்குமதே விளாம்பிசினித் தண்ணீ ராலே
தாக்கியரை மூன்றுநாள்ப வளம்போல் செய்து
உருக்குமேதான் உலறவிட்டு மடவை மீனை
உருவயிற்றைக் கீறியதில் வைத்தி டாயே. 642

(அ.பொ.) :—அபூர்வம்=அருமை.

வைத்துமேபாண் டத்தில்கால் வாசி தானும்
வளமான கிளிஞ்சில்நீர் அடியில் போட்டு
தைத்துமேதான் மீனதினை யதிலே வைத்து
சாங்கமாக கால்வாசி சுண்ணம் போட்டு
நைந்துமேநா லுபடி நல்ல தண்ணீர் விட்டு
நலமாக நீரெல்லாம் வற்றக் காய்ச்சி
வேய்த்துமதே வெந்நீரில் கழுவிப் போட
மெழுகூர்ந்து பவழம்போ லிருக்குந் தானே. 643

(அ.பொ.) :—மெழுகூர்ந்து=வழுவழுப்பாய்.

தானென்று பவழமது கடிசுண் டாகும்
கடல்தன்னில் விளைகின்ற பவழந் தன்னை
மேலெங்கும் தரித்துமேதான் இருந்தால் தானும்
மிக்கான சம்பத்தும் புகழு முண்டாம்
பானென்ற பவழத்திற் கருங்கு ணந்தான்
பாங்கான வுத்தமந்தான் சொல்ல லாகும்
ஊனென்ற மத்திபமாங் குணங்கள் தானும்
ஒன்பதென்றே வுரைத்திடவே வுகந்து பாரே. 644

(அ.பொ.) :—கடிசு=உறுதி, கடினம் ; சம்பத்து=செல்வம்.

உகந்துமேதான் உத்தமத்தை வழுத்தக் கேளு
உருட்சியுற்று இனியதாக கனமாய்த் தோணும்
அகந்துமேதான் கடைதலையுஞ் சமனாய்க் கண்டு
அழகுமாக மெழுகூர்ந்து பரும னாகும்
இகழ்ந்துமேதான் ஈனங்க ளில்லா தாகில்
ஏற்றமான வுத்தமமே சொல்ல லாகும்
நகர்ந்துமேதான் தோடகுணம் நாட்டக் கேளு
நளினமான நிறம்கருகி கரடு மாமே. 645

கரடாகி நீர்புகுதல் மெலிந்தி ருக்கில்
கனமான புழுவரித்தல் கறுப்பாய்க் காணும்
முரடாகி லேசாதல் வெள்ளை யாதல்
முதிரகன்ற பவழத்தின் குணந்தா னாகும்
உரடாகி யுதிக்கின்ற சூரி யன்தன்
ஒளிபோலும் ரத்தமாக பிரபை யானால்
பரடாகி வுறைக்கல்லில் உறைத்துப் பார்த்தால்
பாங்கான மேல்நிறம்போ லுள்ளே காணே. 646

(அ.பொ.) :—முதிரகன்ற=முதிராத ; பிரபை=ஒளிக்கற்றை.

## நவரத்தின சத்துக்குச் செயநீர்

உறையினிலும் மேல்நிறம்போ லுள்ளே கண்டால்
உத்தமந்தான் மிகுதியென்று சொல்ல லாகும்
நிறையினிலும் பவழமது சத்துக் குந்தான்
நேரறிந் தெடுத்தும்தான் சத்தை வாங்கி
பரையினிலு மதிகமாக செய்நீ ரொன்று
பாடுகிறேன் நவரத்தி னச்சத்து வாங்க
திரையினிலுஞ் சீனமது பலந்தா னூறு
திறமான வெடியுப்புப் பலமும் நூறே. 647

## சீனவெடியுப்புத் தீநீர்

கூறான ரெண்டையுந்தான் பொடியாய்ச் செய்து
நுட்பமான அடிகனத்த தோண்டி யிட்டுத்
தாறான வாலையாம்சட் டிமேலே மூடி
தாக்கான மண்செய்து அடுப்பி லேற்றி
நீறான தீயிட்டுத் தீநீர் வாங்கு
நீர்வந்து நின்றதென்றால் சொல்லக் கேளு
வேறானத் தீநீரை யடைத்துக் கொண்டு
மேல்சட்டி வாலையைத்தான் வாங்கிப் போடே. 648



## சீனவெடியுப்புச் செயநீர்

வாலையைத்தான் வாங்கியுமே அப்பால் வைத்து
வளமான புளியதுவும் ஐம்ப தாகும்
ஆலையைத்தா னராய்ந்தே யெடுத்துக் கொண்டு
அன்புடனே வுப்புநின் றுருகும் போது
பூலையைத்தான் புளியதனைப் புட்டுப் புட்டு
பெரும்பாக்குப் போலுருட்டி சுருக்குப் போடு
சோலையைத்தான் சுழன்றுருகி சுண்ண மாகும்
சுரண்டியெல்லாம் பீங்கானில் வைத்தி டாயே. 649

## பவழச்சத்து

வைத்திடவே செயநீராம் வாங்கிக் கொண்டு
மாட்டிடுவாய் வீரம்வுரம் சூடன் தானும்
துய்த்திடவே வராகனெடை பொடித்துப் போட்டு
சூட்டிடவே பவழமது பலந்தான் பத்து
கொய்திடவே கோமியத்தி லூறப் போட்டு
கொதிக்கவைத்து குன்றிமணிச் சாற்றா லாட்டி
வெய்திடவே வெங்காரக் குடோரி வீரம்
வெடியுப்பு நீர்தன்னா லரைத்தி டாயே. 650

(அ.பொ.) :—உரம் = கந்தகம் ; கோமியம் = பசுவின் சாணம் ; பசுவின் சிறுநீர் என்பது பரவை வழக்கு.

தன்னினால ரைத்திட்டு வகைக்கோர் பலந்தான்
தாக்கான புடம்போட்டுக் குகையி லிட்டு
உன்னினாலா திட்டுத்தான் கீழே கொட்டி
உருண்டதுவோர் சத்தெல்லாம் பொருக்கிக் கொண்டு
அன்னினாலே ஐந்துமுறை யுருக்கி யாட்டி
அடைவான சத்தெல்லாம் பொருக்கிக் கொண்டு
பன்னினாலே நட்பதனில் சாய்த்திட் டாக்கால்
பாங்கான முத்துப்போல் மணியு மாமே. 651

## பவழக் களங்கு

மணியெடுத்துச் சூதத்தில் சாரணை செய்தால்
மதிப்பான ககனத்தில் மன்னி யோடும்
அணியெடுத்துச் சத்துக்கு நாவி லொன்று
அடைவாகப் பொன்சேர்த்து நாகங் கூட்டி

தனியெடுத்து வுருகையிலே சூதந் தன்னை
தாக்கான நாகத்தில் தொந்தித் தீவாய்
கெனியெடுத்து கந்தகத்தை யுருக்கு முகத்தில்
கொடுத்திடவே களங்காகும் நூற்றுக் கொன்றே. 652

## பவழச் செந்தூரம்

களங்கத்தை பொற்றலையின் சாற்று லாட்டி
கனபுடமாய் மூன்றுபுடம் போட்டெ டுக்க
வளங்கத்தை மாதுளம்பூ நிறம்போ லாகும்
வகையாக பணவெடைதான் தேனி லுண்ணு
பிளங்கத்தைச் சிங்கத்தின் பலமுண் டாகும்
பேரிருளாய் இருந்தாலும் ஒளியுண் டாகும்
பளங்கத்தை யுகந்தானும் பாரில் வாழ்ந்து
பதினறு வயதுபோலி ருப்பார் தானே. 653

பதினறு வயதுபோல்தான் தானி ருப்பார்
பவழத்தின் பொடிதன்னை வெடியுப்பு நீரில்
கதினறு நாள்தானும் பிசறி வெய்யில்
காயவைத்துக் கனபுடமாய்ப் போட்டெ டுக்க
சுதினறுச் சுண்ணும்பு தானு மாகும்
சுறுக்காகத் தாம்பூலந் தின்ப தற்கு
விதினறுக் காயசித்திக் கடுத்த சுண்ணம்
விடுக்காக சுண்ணத்தின் விவரங் கேளே. 654

விவரந்தான் மூத்திரக்கி ருச்ச னம்போம்
மிடுக்கான கூடியபித்தங் காசம் போக்கும்
அபரந்தான் கண்ணுக்குள் அழற்சிப் போக்கும்
அதிட்டான பூதங்கள் அகன்று போகும்
திபரந்தான் தீபனமாம் மலத்தைப் போக்கும்
சுக்கிலந்தான் மிகவூறும் சுரபி யாகும்
கபரந்தான் காயசித்துக் கடிதி லாகும்
கண்டுகொள்ளா வேதையுமாம் கடிசில் தானே. 655

(அ.பொ.):—கண்ணுக்குள் அழற்சி = கண்ணெரிவு; தீபனம் = பசித்தீத் தூண்டி.

## ஞானயோகங் கூறல்

கடிசான வங்கென்று வாங்கு வுள்ளே
கனிந்துருகி சிங்கென்று மூலம் பாரு
நெடிசாக நாலையுமே நிலைத்து வாங்கு
நிலைவிட்டு அசையாதே நினைவாய்ப் பாரு



வாடிசாக மெள்ளமெள்ள வூதி வாங்கு
வாங்கையிலே மனதுாணி மனதால் ரேசி
நடிசாக நான்குமுள்ளே நிலைத்துப் போகும்
நாதாந்தத் தாய்பதத்தை நாடிக் காணே. 656

(அ.பொ.):—ஊணி = ஊன்றி; நிலைத்து = ஒரே மனதாய் நிலைத்து.

நாடிப்பார் நான்குமுள்ளே நிலைத்துக் காணும்
நலங்காமல் நினைவாலே நயந்து பாரு
வீடிப்பார் மயங்காதே மாய்கை மூடும்
விரைந்துமனோன் மணித்தாய்தன் விரிவு தோணும்
மூடிப்பார் கருவிவந்து மூடிப் போகும்
மெய்யிற்குள் அங்கமெல்லாம் விரைந்து பாரு
ஊடிப்பார் மனந்தன்னை வுனைந்தி டாதே
ஒக்கவுமே வாதசித்தி யோகசித்தி யாமே. 657

(அ.பொ.):—மாய்கை=(உலகவழக்கு) மாயை.

யோகசித்தி யொன்றோடு ஞான சித்தி
உடலழியாக் காயமென்று வுறுதி யாகும்
ஆகசித்தி யாறுதலம் வெளியாய்ப் போகும்
அதீதமான நிர்மலத்தில் ஐக்கிய மாக்கும்
வாதசித்தி வாசனையைத் தகர்த்துப் போக்கும்
வருவதில்லை போவதில்லை மாட்டு மொண்ணில்
சூதசித்தி சமாதிக்குள் இறுத்துங் கற்பம்
சூட்சமிதைப் போலொன்றும் தோற்றி டாதே. 658

(அ.பொ.):—நிர்மலத்தில் ஐக்கியமாகும் = பரம்பொருளோடு இரண்டறக் கலத்தல் (சாயுஜ்ஜியம்); இறுத்தும் = தங்கவைக்கும்.

தோன்றுமல் வேதசித்தாந் தங்க ளென்பார்
துலங்கியதோர் சமரசந்தான் சூட்ச மென்பார்
நான்றுமல் நாதாந்தம் போதாந்த மென்பார்
நன்மையுற்ற காலாந்த மென்று சொல்வார்
ஆன்றுமல் உட்புகுந்து ஆதிடங் காணர்
அதிலிருக்கும் உற்பனத்தை அறிய மாட்டார்
வேன்றுமல் நீரேது வேடந் தானேது
விரித்திதையே யறியார்கள் வீணர் தானே. 659

(அ.பொ.):—வேதாந்தம் = உடனிடதம்; சித்தாந்தம் = மெய்கண்ட சாத்திரம்; சமரசம் = ஒருமைப்பாடு; நாதாந்தம் = பிரணவப்பொருள்; போதாந்தம் = அறிவின் எல்லை; காலாந்தம் = இறுதிக்காலம்; ஆதிடம் = ஆறுதாரங்கள்; உற்பனம் = மேன்மை.

### ஐந்நவத்தைக் கூறல்

தானான சாக்கிரமும் சொப்பன மாகும்
    தலம்பெரிய சுழித்தியுடன் துரிய மாகும்
தேனான துரியாதீ தங்கடந்து நோக்கச்
    சிறப்பான பூரணந்தான் சேர்ந்து கொள்ளும்
வீணான மூலத்தில் விரைந்தே யூத
    வெளிமயக்கு தானெல்லாம் வேறென் றில்லை
வானான சிவனோடும் ஆயி வந்து
    வசனிப்பார் காயசித்தி மகிழ்ந்து காணே. 660

### முத்துத் தோற்றம்

மகிழ்ந்துமேதான் முத்தினுட வண்மை கேளு
    மதிப்பான ராட்சசன்தான் ராகு என்பான்
அகிழ்ந்துமேதான் அசுரன்மா பலவா னாகும்
    ஆண்மையான அழகுடையோன் பூரு வத்தில்
நெகிழ்ந்துமேதான் அமுதமது கடைந்தெ டுத்து
    நீங்காமல் பந்தியிலே தேவர்க் குத்தான்
பகிழ்ந்துமேதான் விஷ்ணுவுமே அமுதந் தன்னை
    பகிர்ந்துவரும் வேளைதனில் ராகு தானே. 661

ராகுயென்போன் தேவபந்தி தனையிச் சித்து
    ராட்சசன்தான் பந்திவிட்டு பந்தி வந்து
பாகுயென்போன் நடுப்பந்தி தனிலி லிருந்து
    பகிரயிலே அமுதத்தை வாங்கிக் கொண்டான்
தாகுமென்போர் சந்திரசூ ரியர்கள் தாமும்
    சடுதியாக விட்டுணுவின் சமூகத் தில்தான்
நாகுயென்போன் ராட்சசன்தான் ராகு வாகும்
    நடுச்சபையில் அமுதத்தைச் சாப்பிட் டானே. 662

(அ.போ.) :—பந்தி=வரிசை ; தேவபந்தி=தேவர்கள் அமுதமுண்ணும் வரிசை ; பகிரயில்=பங்கிடும்போது.

சாப்பிட்டா னென்றுசந்தி ரசூரியர் கூற
    தரித்துமேதான் மகாவிஷ்ணு கோப மாகி
ஆப்பிட்டா னென்றுசக்க ராயு தத்தால்
    அசுரனவன் தலைதனையே வீசிப் போட
தாப்பிட்ட தலையதுபோய் கடலின் தரங்கத்
    தாக்கான கரைதனிலே விழுகும் போது
காப்பிட்ட அமுதந்தான் கழுத்தில் கொஞ்சம்
    கனத்திருந்து கடல்தனிலே தெரித்த தாமே. 663



### முத்துத் தோன்றும் பொருள்கள்

தெறித்துமேதான் பலதுளியாய் திவலை யாகி
    திவலைதனைத் திமிங்கிலமீன் வயிற்றில் சங்கு
தறித்துமேதான் முத்தான சிப்பி மூன்றும்
    சாப்பிடவே திவலைதன்னைக் கர்ப்பமாகி
குறித்துமேதான் முத்துக்கள் தோற்ற மாச்சு
    குறிப்பாக இன்னும்பல் தோற்ற முண்டு
அறிந்துமே அதுவேதான் யானைக் கொம்பு
    அதிட்டான கரும்புதனில் மூங்கில் தானே. 664

(அ.போ.) :—இன்னும்பல்=இன்னும்பல.

மூங்கிலிலே பன்றியுட மத்த கத்தில்
    மீறினதோர் பாம்பினுட தலைதன் னில்தான்
ஆங்கிலிலே ஐந்துவிதம் தோன்ற லாச்சு
    ஆகின்ற முத்தினுட பரிசைக் கேளு
தீங்கில்லாச் சிப்பியிலே பிறந்த முத்து
    தேசாகி லேசில்லாக் கனமு மாகி
ஊங்கிலிலே வுருட்சியாக சிவந்த வண்ணம்
    உயர்ந்தவெகு கூட்டமுமா யிருக்குந் தானே. 665

(அ.போ.) :—மத்தகம் = தலைமண்டை ; தேசாகி = ஒளியுடையதாய் ; இலேசில்லா=நொய்தாய் இன்றி ; கனம்=திண்மை.

கூட்டமான வெகுகூட்டந் தானு மாகிக்
    குழைந்துவெகு சந்தானத் தோடுங் கூடி
நாட்டமான விண்மீனின் பிரபை யாகி
    நற்சிப்பி தனிலும்தான் தோன்றும் முத்தாம்
தேட்டமான திமிங்கிலமா மீனில் தானும்
    சிறப்பாகத்தோன் றியமுத்தின் திறமை கேளு
மீட்டமான மின்னலாக தூய தாகி
    மெழுகூர்ந்து கனமுமாகி இருக்கு மென்றே. 666

(அ.போ.) :—விண்மீன்=உடு (நட்சத்திரம்).

இருக்குமேதான் சங்கினிலே தோன்று முத்து
    ஏற்றமான வெள்ளைபொன் வண்ண மாகும்
பருக்குமேதான் பாஞ்சசன்னி என்னும மேலாம்
    பஞ்சசங்கி லுற்பவித்த முத்தைக் கேளு

அருக்குமேதான் ஆண்டுகாலங் களிலே தானும்
ஆலங்கட் டியின்பருமன் நிறமும் போன்று
பொருக்குமேபு ருமுட்டை யளவு போலும்
பொன்றுமுமே தானிருக்கும் பெருகுந் தானே. 667

(அ.பொ.) :—உற்பவித்த=தோன்றிய.

பெருக்கவுமே பாஞ்சசன்னி யத்தின் முத்தை
போற்றிசெய்து தரிசித்தால் வீடு பேறே
பருக்கவுமே காமத்தால் கற்பிணி யழித்த
பாவங்க ளெல்லாந்தான் பறந்து போகும்
முருக்கவுமே முன்சொன்னக் கரும்பு மூங்கில்
மூர்க்கமான யானைபன்றி பாம்பின் முத்து
வருக்கவுமே கொஞ்சமாக பிறக்கும் பாரு
மதிப்பாகத் துர்ப்பலமாய் கிடைக்குந் தானே. 668

(அ.பொ.) :—துர்லபம்=கிடைத்தற்கரிது.

கிடைக்கவேதி மிங்கிலமீன் சங்கு தன்னில்
கிடைக்கின்ற முத்ததுவும் கொஞ்ச மாகும்
படைக்கின்ற முத்தான சிப்பி தன்னில்
பாரமான தோற்றமது மிகுதி யாகும்
அடைக்கவுமே தோன்றுதலெப் போதோ வென்றால்
ஏற்றமா ன ஆனியோடே ஆடி தன்னில்
மடைக்கவுமே மழைபெய்து கடனி லேதான்
மதிப்பான நீர்பெருகில் வண்மை கேளே. 669

வண்மையாக நல்லதண்ணீர் மேலே தானும்
மல்லாந்து வாய்விட்டு ஊர்ந்து நிற்கும்
வெண்மையான மழைத்திவலை வாயில் வீழ
வீழ்ந்தமட்டும் பிரமாணம் தோற்ற மாகும்
வெண்மையாக கருப்பந்தான் ஆண்டு மட்டும்
கெடுவீதங் களில்லாமல் நின்று தானால்
தண்மையான முத்ததுவும் உருட்சி வெள்ளை
தளுக்காக கனத்துமேதான் தரிக்கும் பாரே. 670

(அ.பொ.) :—கெடுவீழங்கள்=அழிவுக்கான காரணங்கள்.

தரிக்குமேதான் ஆணிமுத்து இத்தை விட்டு
தனித்தநடு மத்தியிலே அவதி யானால்
பிரிக்குமேதான் பெருங்காற்று கடலி ரைச்சல்
பெரிதான அலைமோதல் கண்டு தானால்



விரிக்குமேதான் சிப்பியது விசார முற்று
மெத்தவுமே பயம்வந்து முழுமை யுருது
கரிக்குமேமான் கரடுகட்டிப் புரையு முண்டாய்
களங்கமாக பாதியாகப் பொரிச லாமே. 671

(அ.பொ.) :—அவதி=கேடு ; முழுமையுருது=கருவளர்ச்சி முதிரா மல் ; பொரிசல்=விரிசல் (கீறல்).

## முத்து உண்டாகும் நாடுகள்

பொரிசலாகப் போயிருக்கும் சிறப்பு மில்லை
புகழான ஆடியிலே மழையு முண்டாம்
வரிசலாக ஆண்மட்டும் சலன மின்றி
வாகாக தோற்றமுற்ற முத்து தானும்
உரிசலாக மிகுதியுந்தான் உத்தம மாகும்
உற்பவிக்கும் நாடுகள்தாம் சொல்லக் கேளு
தெரிசலாகச் சிங்களநந் நாட்டில் தானும்
தேர்ந்தசெப்பப் பாரசீக நாடு தானே. 672

(அ.பொ.) :—வரிசலாக=முறையாக ; சலனம்=கடற்கொந்தளிப்பு; வாகாக=வகையாக ; சிங்களம்=ஸ்ரீலங்கை ; செப்ப=செப்ப நாடு ; (தற்போது ஜப்பானெனப்படுகிறது). பாரசீகம்=பெர்ஷியா எனனும் நாடு.

தேசமதாம் தாமிரவ ருணிநு ழைவாயில்
செப்பரிய கடலிரச்ச வுராட்டி ரதேசம்
ஏசவுமே பருவாத்த ருகான வாவி
இசைந்திட்ட வுந்திகௌப ரதேசத் தில்தான்
பாசவுமே பாண்டியனு டிவ்வி டந்தான்
பாங்கான முத்ததுவும் தோற்ற முறுந்தான்
மாச்சிங்க ளதேசத்து தோற்ற முற்ற
மாசற்ற முகத்தினுட வளப்பங் கேளே. 673

(அ.பொ.) :—நுழைவாயில்=சங்கமமாகும் இடம்.

வளப்பமான கனமாகி வழவ ழுப்பாய்
மதிப்பான அழகுள்ள ஒளியு மாகும்
பளப்பமான பாரசீக நாட்டில் தானும்
பாங்கான முத்தினுட குணத்தைக் கேளு
களப்பமான கனமுமாகி பெருநஞ்சு போலே
கடைந்தாற்போல் வேர்விடத்திற் மிஞ்சா மற்றுன்
தளப்பமான சமபாக மாகத் தானும்
தாம்பிரப ரணிமுகத்துக் கடலில் கொள்ளே. 674

கடலில்தான் வுற்பத்தி யான முத்து
களிம்பற்ற செம்புநிற மாகத் தோணும்
மடலிலேதான் மாதுளம்பூ நிறம்போல் காணும்
மாசில்லாப் பச்சைநிற மாகத் தோணும்
வடலிலேதான் வழவழப்பும் ஒளியு மாகும்
வளைசலாக பங்கமுமாய் விகார மாகும்
குடலிலேதான் குடிலமான நீறு மாகும்
கூருன சவுராட்டி ரதேசந் தன்னில்
உடலிலேதான் தோற்றமுற்ற குணமுந் தானும்
உயரந்தான் மேடுபள்ள மில்லை தானே. 675

## நல்ல முத்தின் இலக்கணம்

இல்லையேதான் சமனுகக் கரடு மில்லை
இடிவான சொரியில்லை விண்மீன் போலே
உல்லையேதான் உத்தமமாங் குணத்தி னூடே
உருட்சியாக பெருமுத்தாய் வழவ ழப்பாய்
அல்லையேதான் அழகாகிப் பரிசுத் தமாகி
அதிகவொளி யுள்ளநீரின் குமிழி போலாய்
பல்லையேதான் பசுவெண்ணெ வண்ண மாகி
பாங்கான உருட்சியான கனமு மாமே. 676

கனமாக வொவ்வொன்றுக் கொவ்வோர் பக்கம்
கதிப்பில்லாக் கடைசல்போல் திரட்சி யாகும்
வனமாக வழவழப்பு அதிக மாகி
மங்களாகா ரமுமாகத் தானிருக்கும்
இனமான இதற்குள்ளே மத்தியக் குணந்தான்
ஏற்றமுமாய் பருமகார முமாகி யேதான்
தினமான சிவப்புமான வெறிப்பு மாகும்
தேசமாம்ச வுராட்டி ரமுத்து தானே. 677

முத்துமாமோர் பர்வதத்தின் வாவி தானும்
முதுமையான நதிக்கரையில் பிறக்கு முத்து
நத்துமான விண்மீன்கள் போன்றி ருக்கும்
நளினமாகச் சமபாகம் உருட்சி யாகி
பத்துமாக பக்கங்கள் சாய்வில் லாமல்
பளிங்குபோலே வெளுப்புள்ள ஒளியு மாகி
மெத்துமேதான் சுக்கான்போல் சோதி யாகும்
மேன்மையான முத்தினுட விவரங் கேளே. 678



விவரமான கவுபேர நாட்டின் முத்து
விகாரமான தகடாக நீள மாகி
கவரமான கருப்பாகி லேசு மாகி
கஞ்சமான கிண்கிணியின் ஓட்டைச் சத்தம்
நிவரமான பார்வைக்குப் பீடை யாகி
நிரையுண்டாய் மேல்பருத்துக் கீழ்ச்சி றுத்து
தவரமாய்த்தான் கரடாக மிகுதி யாகும்
தாக்கான கவுபேர நாட்டின் முத்தே. 679

(அ.போ.) :—கஞ்சம் = வெண்கலம்; கிண்கிணி = ஒருவகை சதங்கை.

தாக்கான பாண்டியநந் நாட்டின் முத்து
தளுக்காகி மகாசுத்த மாயி ருக்கும்
மீக்கான மெத்தவுந்தான் ஒளியும் பெற்று
மிடுக்காகத் திரண்டுவிந்து போன்றி ருக்கும்
நோக்கான எழுநாடு தன்னில் தானும்
நுடக்கான தோற்றந்தான் குணங்கள் சொல்லில்
தேக்கான தட்சிணநா டுடைய முத்து
செப்பிடிலோ வுத்தமக்கு ணந்தான் காணே. 680

(அ.போ.) :—தளுக்கு=ஒளிமிக்கு; தட்சிணநாடு=தென்தேயங்கள்; எழுநாடு=தற்போது ஜப்பான் என்னும் நாடாக இருக்கலாமென்று ஊகிக்கப்படுகிறது : நுடக்கான=சுகமில்லாதது போன்ற தோற்றம்.

## முத்தில் தோடமுண்டாகக் காரணம் கூறல்

குணமான முத்துக்குக் குற்றந் தானும்
கூறியதோர் பெரியகுற்றம் நான்கு மாகும்
மணமான மத்திபக்கு றைகள்தா னுறு
மதிப்பான முத்துக்கு வகுத்துண் டாச்சு
இனமான வேதினுலே வந்த தென்றுல்
இருந்ததுவோர் தானம்விட்டுப் பெயர்ந்த தாலும்
கனமான கர்ப்பவுற்பத் தியாம தனில்தான்
கெடுகிறதும் மரித்தபடி யான தாலே. 681

## முத்தின் குறைகுணங்கள்

மரித்ததுவோர் பெருங்காற்றுப் பட்ட தாலும்
மழையில்லாக் குணத்தாலும் தோட மாச்சு
கரித்ததுவோர் கரடாகி இலேசு மாகி
கனமான தோடங்கள் தோற்ற மாச்சு

விரித்ததுவோர் தோடத்தை விளம்பும் போதில்
மீன்கண்போல் முத்ததுவும் இருந்த தானுல்
துரித்ததுவோர் மச்சாட்சி தோட மாகும்
சூட்சியிலே இதைத்தரித்தால் சொல்லக் கேளே. 682

சொல்லவுமே புத்திரர்கள் நாச முண்டாம்
சுப்பிரந்தா னில்லாமல் கரடு கட்டி
கல்லவேதான் கறுப்பாக விருந்த தென்ருல்
கத்தகதுற்புத் தோடமென்றும் பேராம் தானே
தல்லவுமே இதைத்தானும் தரித்தா ராகில்
தன்னுடைய சுற்றமெல்லாம் மரண மாமே
ஒல்லவுமே ஒன்றின்மேல் ஒன்ற டுக்காய்
ஒதுக்கலாக கோணலாயி ருந்தால் கேளே. 683

(அ.பொ.) :—புத்திரநாசம் = பிள்ளைகள் மரித்தல்; சுப்பிரம் = தெளிவு; ஒல்ல=பொருத்தமாக.

இருக்கின்ற முத்தினுட குற்றங் கேளு
இசைந்ததிரி விருத்தனும்வித் தியாதோ டந்தான்
தருக்கியேதான் இதைத்தானும் தரிப்பா ராகில்
தரித்திரந்தா னடைந்துதுர் பிட்சமாவான்
அருக்கின்ற அவ்விருத்த மாமா யிருந்து
அழுக்கடைந்து பாம்புபோலே தானும் நீண்டு
செருக்கின்ற ஆகாத குணமாய்க் காணும்
சிந்தித்தே இதைத்தரித்தால் செப்பக் கேளே. 684

(அ.பொ.) :—துர்பிட்சம் = (மழை மறுத்து) பஞ்சமாதல்; அவ் விருத்தம்=வட்டவடிவமின்றி.

செப்பவுமே அபகீர்த்திக் கார னுவான்
சிறந்தமாதோ டங்கள்தாம் நான்கு மாச்சு
மப்பவுமே மத்திமதோ டங்க ளாறில்
வகைசொல்ல வழுக்கடைந்த தான முத்தை
தப்பவேதான் தரித்தேதான் உண்டாக் காலே
சகலமாஞ் சம்பத்தும் செரித்த லாகும்
நெப்பவுமே மக்கினமாய் நீருண்மேகம்
லேசான கருப்புமாக வனிவு தானே. 685

(அ.பொ.) :—அபகீர்த்திக்காரன் = இகழத்தக்க = இழிந்தவன்; செரித்தலாகும்=சீரணித்தலாகும்.



வளைவாக குற்றமாக இருந்த முத்தை
மார்க்கமாகத் தரித்தாலும் உண்டிட் டாலும்
உளைவாக வுத்தியோக மில்லா மற்ருன்
உட்கார்ந்து கொண்டிருப்பான் நித்தி யந்தான்
அளைவாக அவ்விருத்த மாயி ருந்து
அழன்றுமேபொ ரிந்துபுண்டு இருந்த தானுல்
தளைவாகத் தரித்துமேதான் உண்டா னுக்கால்
சகலசம்பத் துமேதரிக்காது பாரு பாரே. 686

(அ.பொ.) :—அழன்று=வேக்காடு கொண்டதாய்; பொரிந்து= பொரித்ததுபோல மேடு பள்ளங்களுடைய வாய்; புண்டு=உடைசலாய்; தரிக்காது=நிலைக்காது.

தருக்கான காடுகள்தாம் தூசு மாசு
சாதுவான லேசான முத்து தன்னை
மருக்கான மத்திபதோ டங்க ளைத்தான்
மருவவேதான் தரித்தாக்கால் தோட மாகும்
உருக்கான வுத்தமந்தான் உரைக்கக் கேளு
உருட்சியாக வெளுப்பாகிக் கனமு மாகி
பெருக்கான பருமனுய்த்தான் அழுத்த மாகி
பேரான வழவழப்பாய் அழகு மாமே. 687

அழகாகி எங்குமேவ ருநிறைய நின்ருல்
ஆணிமுத்து மிகுதியுமே வுத்த மமாகும்
குழவாகி குழிவுகுண்டு சொத்தை ரேகை
குறித்தவங்க வீனங்கள் இல்லா தாகி
தழகாகி சறுவிருத்தம் பொரியில் லாமல்
தளுக்கான சுபமான குணத்தைப் பார்த்து
புகழாக யிருந்தமுத்தைத் தரித்த பேர்கள்
பேரின்பம் ஆயுள்வர்த் திக்கும் தானே, 688

(அ.பொ.) :—உருநிறைய=வடிவம் எடுப்பாக; குழவு=திண்மை யின்மை; குழிவு=பள்ளம் விழ்தல்; குண்டு=மேடுகள்; சொத்தை= கரைந்துகாணல்; ரேகை=கோடுகள், அங்கவீனம்=வடிவில் குறை பாடு; வர்த்திக்கும்=மிகும்.

### வைப்பு முத்தும், பிறவி முத்தும் தெரிய

வர்த்திக்கும் லட்சுமியின் கடாச்ச முண்டாம்
மகத்தான சகலபாவங் களையும் போக்கும்
நர்த்திக்கும் வியாதியெல்லாம் நாச மாகும்
நல்முத்தும் அவமுத்தும் அறிய வேண்டி

கர்த்திக்கும் கல்லுப்பும் சாரம் ரெண்டும்
கலந்தரைத்துக் கோமியத்தின் பாத்தி ரத்தில்
பர்த்திக்கும் பசுவினுட கோமி யத்தை
பாத்திரத்தில் நிறையவிட்டுப் பாங்கைக் கேளே. 689

(அ.பொ.) :—நர்த்திக்கும்=நடனமிடும்; அவமுத்து=கெடுதலான முத்து.

பாங்கான முத்ததனை யதனி விட்டு
பருவந்தான் ஒருநாழி சென்ற பின்பு
தாங்காக எடுத்துமேதான் முத்து தன்னைச்
சம்பாநெல் உமியில்வைத்து வுராஞ்சிப் பாரு
மூங்காக முன்னிருந்த படியி ருந்தால்
முத்துதானே பிறந்ததென்று அறிய லாகும்
வாங்கான வைக்கின்ற முத்தே யானால்
மறுநிறமாய்ப் பேதித்துப் போகுந் தானே. 690

(அ.பொ.) :—உராஞ்சி=தேய்த்து; வைக்கின்ற=செயற்கைமுறையில் செய்யப்பெற்ற.

## முத்து வைப்பு

பேதித்த முத்துகளின் வைப்புக் கேளு
விளங்கியதே கழிப்பட்ட முத்தா னாலும்
ஓதித்த முத்துச்சிப்பி ஓடா னாலும்
உவர்மண்ணும் சுண்ணம்பும் சமனாய்ச் சேர்த்து
ஆதித்தத் தண்ணீரை யளந்து விட்டு
ஆண்மையான ஒன்றுக்கு நான்கு தண்ணீர்
நாதித்து அதில்விட்டு வற்றக் காய்ச்சி
நல்லதண்ணீர் சுண்டியபின் கழுவிப் போடே. 691

கழுவியுமே வுலர்த்தியபின் பொடிய தாக்கிக்
கனத்ததோர் சீலைகட்டி வடித்துக் கொண்டு
குழுமியுமே முத்தெருக்கன் செவிச் சாற்றால்
முழங்கரைத்து மிளகுபோலு ருண்டை செய்து
துழுவியுமே சூரியகாந் தத்தி னாலே
சிமிழ்போலே செய்தும்தான் உருண்டை வைத்து
நழுவியுமே மேல்மூடி உளுந்த தாலே
நலங்காமல் சிறக்கவுமே சீலை செய்யே. 692

செய்துமதே தீட்சணமாம் வெய்யில் வைத்துத்
தீர்க்கமாக ஏழுநாள் கழிந்த பின்பு
பைத்துமதைத் திறந்திட்டுப் பார்த்திட் டாலே
பளிச்சென்று முத்துப்போ லுருகிவெவ் வேருய்



நெய்த்துமேதான் விண்மீன்கள் போலு மாகும்
நாட்டிலுள்ளோர் தாமறியார் வைப்பே யென்று
பெய்த்துமேதான் பிறந்தமுத்துப் போலே யாகும்
பேசியது போல்பார்த்தால் வேருய்ப் போமே. 693

(அ.பொ.) :—தீட்சணமாம்=கடுமையான; விண்மீன்=நட்சத்திரம்; நெய்தது=வழுவழுப்புண்டாய்.

## முத்துச் சுத்து

வேருக முத்துகளைப் பரீட்சித் துத்தான்
வெள்ளைநிற மானமுத்து பலந்தான் பத்து
மூருக முத்தெருக்கன் செவிச்சாறு தன்னில்
மூன்றுநாள்கள் ஊறவிட்டு மோரால் கழுவி
பேருக வெடியுப்புச் செய்நீ ராலே
பிலத்தரைத்துச் சவ்வீரம் பலமு மொன்று
கூருக வாதமென்ற குடோரி யொன்று
குண்டுமணி பருப்பதுவும் பலமு மொன்றே. 694

பருப்பதுவும் பலமுமொன்று கார மொன்று
பாங்காக விதையெல்லாம் நேக ரைத்து
முருப்பதுவும் சுத்தித்த முத்து கூட்டி
முத்தெருக்கன் செவிச்சாறு விட்ட ரைத்து
நெருப்பதுவும் யிட்டுமேதான் புடத்தைப் போடு
நேராக குகையில்விட்டு வுருக்கி னக்கால்
தருப்பதுவும் சத்ததுவாஞ் சிவந்தி றங்கும்
சத்தெல்லாம் பொறுக்கியேதான் பின்னு மூதே. 695

பின்னுமதே கரடெடுத்து ஊதச் சத்தாம்
பொறுக்கியுமே கரடெடுத்து பின்னு மூது
அன்னுமதே ஐந்துமுறை யுருக்கிப் பின்பு
ஆராய்ந்து சத்தெல்லாம் பொருக்கிக் கொண்டு
உன்னுமதே வுருக்கியேமித் திரனில் சாய்த்து
உருக்கியுமே குளிகைக்குச் சுருக்குப் போடு
தன்னுமதே விடுவித்தால் குளிகை தானும்
தவளம்போல் வெண்மையாகத் துலக்க மாமே. 696

## முத்துச்சத்துச் செந்தூரம்

துலக்கமான சத்ததுவும் பலந்தா னென்று
சூட்டிடுவாய் தங்கத்தை நாலுக் கொன்று
நலக்கமான நாகமந்த வெடையே போட்டு
நற்சூதம் தொந்தித்துத் தங்கம் ரெட்டி

விலக்கமான கந்தியோடு தாளகம் சிலையும்
வீதித்துத் தங்கமெடைப் போட்டுக் கொண்டு
முலக்கமான முத்தெருக்கன் செவிச்சாற் றிலாட்டி
முனையாகப் பொடிபண்ணிக் குப்பிக் கேற்றே. 697

(அ.பொ.) :—ரெட்டி=இருபங்கு.

ஏற்றியுமே பன்னிரண்டு சாமந் தானும்
இதமாக முத்தீயும் போட்டுப் பின்னே
ஆற்றியுமே எடுத்துப்பார் அருணன் போலாம்
ஆயிரத்திற் கொன்றிடவே அதிக வேதை
தேற்றியுமே பணவெடைதான் தேனி லுண்ணு
செழுங்கஞ்சம் போலிருக்கும் உடலந் தானும்
சாற்றியுமே சதுர்யுகமோர் நாளாய்ப் போகும்
சதாசிவன்தான் கொண்டகற்பம் யானுண் டேனே. 698

(அ.சொ.) :—செழுங்கஞ்சம்=செழித்த செந்தாமரை.

## முத்துச் சுண்ணம்

கற்பந்தான் உண்பதற்குச் சுண்ணங் கேளு
கனமான முத்துக்குள் கரட்டு முத்து
முற்பந்தான் முத்தெருக்கன் செவியின் சாற்றால்
மூன்றுநாள்தாம் ஊறவிட்டே அகலில் வைத்து
புற்பந்தான் புடம்போட்டு ஆற விட்டால்
பொரிந்துமேதான் சுண்ணாம்பே யாகும் பாரு
சிற்பந்தான் கற்பத்தை தின்னும் போது
தின்பதற்குத் தாம்பூலச் சுண்ணந் தானே. 699

தாம்பூலந் தின்பதற்கு முத்துச் சுண்ணம்
தாக்கான கற்பூர வள்ளி யிலைப்பூசு
கோம்பூலக் கொட்டைப்பாக் கதனைச் சீவி
கொள்ளமட்டும் தாம்பூலந் தின்ன நன்று
வேம்பூலந் தின்றுவந்தால் மிடுக்காம் சித்தி
விதறுகின்ற தந்தமெல்லாம் இறுகிப் போகும்
காம்பூலம் காயசித்திக் கெடுத்த சுண்ணம்
கைகண்ட படியானும் கருதி னேனே. 700

(அ.பொ.) :—விதறுகின்ற=ஆடுகின்ற; தந்தம்=பல்; மிடுக்கு=வன்மை; எடுத்த=ஏற்ற.



கருதியோர்சுண் ணமதுபித்தத் தைக்க பத்தைக்
காசத்தைச் சுவாசத்தைச் சயமதைப் போக்கும்
அருதியதோர் விக்கலையும் தீமாந் தத்தை
அரோசிகத்தைப் போக்கியுமே பலமுண் டாக்கும்
வெருவியதோர் வீரியந்தான் விருத்தி யாகும்
மெய்தளர்ச்சி நீரையெல்லாம் விண்டு போக்கும்
நருதியதோர் கற்பாந்த காலந் தானும்
நாட்டிவைக்கும் சூட்சமதை நயந்து காணே. 701

(அ.பொ.) :—சயம்=என்புருக்கி (ஈளைநோய்); தீமாந்தம் =அக்கினி மந்தம்.

## வைரம் தோன்றிய வகை

நயந்துமதே வைரத்தின் தோற்றந் தன்னை
நாட்டியுமே நாலுக்குள் நயந்து கேளு
மயந்துமே மகாமாயை என்னும் சத்தி
மதிப்பான காசிபராம் முனிதன் னோடே
வியந்துமே புணர்ச்சிசெய்ய அசுர னான
விருத்தரான சூரனவன் தோற்ற முற்றான்
அயந்துமே பராக்கிரம சாலி யாகி
அசுரர்கட்கு அரசனாக வாகி னானே. 702

ஆகியுமே ஈரேழு புவன மெல்லாம்
அவனடக்கும் வசதியெல்லாம் முடையா னாகி
தேகியுமே தேவேந்தி ரன்முதல் தேவர்
திசையான அட்டதிக்கு பாலர் தாமும்
ஏகியுமே இவர்களெல்லாம் அசுரன் தன்னால்
ஏற்றமாகப் போரதனில் வாதை பட்டார்
தாகியுமே பிரளயகா லத்தி டியொலி
சண்டமாரு தம்போல்வான் சூரன் தானே. 703

சூரன்தன் உபத்திரவம் தன்னி னாலே
சுரேந்திரனே முதலானோர் நடுந டுங்கி
வீரன்தன் பயத்தாலே அப்பா லேகி
வேகமாய்த்த தீசிமுனி யிடத்துங் கேகித்
தாரன்தான் தவசுபண்ணு மாச்சிர மத்தில்
சகலருமே வந்துதானே கூடி நின்றார்
கோரன்தன் முனிசுவரன் அபச்செந் தாரம்
கோடிநாள்தின் றுவச்சிரம்போல் காய மாச்சே. 704

காயந்தான் கோடிசூரி யவொளிப் போலே
　　களிப்பான ஆனந்தக் கனித ராகி
ஆயந்தான் யாவர்க்குந் தயவு மாகி
　　ஆவலாகக் கேட்டதெல்லாம் கொடுப்பா ராகி
மாயந்தான் மனதுடைய மகிழ்ச்சி யாகும்
　　மகத்தான வேளையில்வந் தடிப ணிந்தார்
மோயந்தான் முப்பத்து முக்கோ டிதேவர்
　　முனிவான இந்திரனும் உரகர் தானே. 705

உரகந்தான் சகலருந்தான் ஒன்றாய்க் கூடி
　　ஒருமித்து வந்துமேதான் அடிப ணிந்தார்
தரகர்தாம் ததீசிமகா முனியு மப்போ
　　தயவோடே அஞ்சலிபந் தந்தான் பண்ணி
விரகர்தாம் வந்தசெய லேதோ வென்று
　　விளம்பவென்று முனிகேட்க தேவர் சொல்வார்
அரக்கர்தாம் அசுரனென்ற விருத்ரா சூரன்
　　அவனுடைய வுபத்திரவம் அருள்செய் தாரே. 706

(அபொ.) :—விரகர்=வேட்கை மிக்கவர்.

அருள்செய்து எங்களுக்கு அசுரன் தன்னால்
　　அடங்கலாகாத் துன்பந்த னைத்தாங்க வில்லை
தெருள்செய்து அவனைத்தான் வெல்வ தற்குத்
　　தேவரீரே கருணையினால் கொல்ல வேணும்
வெருள்தன்னை தேவரீர்தம் எலும்பு தன்னை
　　வேண்டிவந்தோம் சகலருந்தான் என்று சொன்னார்
பருள்செய்த முனீசுவரர் மனதி லெண்ணிப்
　　பார்த்துமேதான் பூருவக்கி யானத் தாலே. 707

(அ.பொ.) :—பூருவம்=பழைமை (இறந்தகாலம்).

பூருவமாய் எலும்பதனைக் கொடுத்திட் டாக்கால்
　　பேரான கீர்த்தியுண் டென்றே எண்ணி
காருவமாய் எலும்பதனைக் கழித்து மிக்க
　　கனமான மகிழ்ச்சியாலே ஈந்தார் தாமும்
மூருவமாய்வச் சிரதண்டு முதுகெ லும்பை
　　முனிந்தெடுத்து இந்திரன்தான் சிற்பி கையில்
கூருவமாய்க் கொடுக்கவுமே விசுவ கன் மன்
　　கொண்டுபோய்தான் ஆயுதமாய்க் கடைந்திட் டானே. 708



கடைந்துவச் சிராயுதமாய் வாசவன் கையில்
　　கொடுக்கவுமே வாசவனும் வாங்கிக் கொண்டு
அடைந்துமேதான் அசுரனைவச் சிராயு தத்தால்
　　அறுத்திடவே இராட்சதனும் செத்துப் போனான்
படைந்துமேதான் தேவரெல்லாம் பயந்தெ ளிந்து
　　பாங்கான முனிதன்னைப் புகழ்ந்து கொண்டு
விடைந்துமேதான் அவரவர்கள் விடுதி போனார்
　　வல்லமையாம் இந்திரனும் போயி னானே. 709

(அ.பொ.) :—வாசவன்=இந்திரன்; விடுதி=வீடு (இருப்பிடம்).

போயினபின் விசுவகன்மா கடையும் போது
　　போரான ததீசிமகா முனியெ லும்பை
காயினபின் கடைந்தெடுத்த தூட்கள் தானும்
　　காற்றிலேதாம் மிகப்பறந்து பூலோ கத்தில்
வேயினபின் விழுந்தவிட மங்கங் கேதான்
　　விழுந்துமேதான் வைரந்தான் தோற்ற மாச்சு
நாயினபின் நானாவித வண்ணத் தோடே
　　நாடியுமே வைரத்து வமாச்சு தானே. 710

குறிப்பு—வச்சிரம்=வைரம்.

வச்சிரந்தான் மகாபலமாய் தோற்ற மாச்சு
　　மதாந்திரன்தான் பின்பொன்றின் வயணங் கேளு
தச்சிரந்தான் வலனென்ற ராட்ச சன்தான்
　　சமர்த்தான அசுரனென்போன் எலும்பு மாகும்
பச்சிரந்தான் பூருவத்தில் அமுதந் தன்னைப்
　　பரிசான இராக்கதரும் தேவ ரெல்லாம்
நச்சிரந்தான் தாங்களுமே நித்திய ராக
　　நரைதிரையாம் பிணிமூப்புச் சாக்கா டாமே. 711

(அ.பொ.) :—மதாந்திரம்=மாற்றுக்கொள்கை ; வயணம்=வகை.

சாக்காடே இல்லாமல் இருக்க வேண்டி
　　தனித்தமந்தி ரகிரிதனை மத்தாய் நாட்டி
ஆக்காடு சேடனைத்தான் கயிறாய்ப் பூட்டி
　　ஆதிமகா விஷ்ணுவுந்தான் ஆமை யாகி
மாக்காடு மந்திரமா மலைய டிக்கு
　　மசகாமல் ஆமையதை ஆதாரம் வைத்துத்
தேக்காடு தேவரெல்லா மொருபு றந்தான்
　　சீறுகின்ற அசுரானோர் பக்கந் தானே. 712

(அ.பொ.) :—சேடன் = பாம்பு ; வாசுகி என்னும் பாம்பு ; (ஆதி சேடனில்லை).

பக்கந்தான் இராக்கதர்கள் கயிறி ழுக்க
பாங்கான வமுதத்தைக் கடைந்து வாங்கி
ஒக்கந்தான் இருந்துக்கொண்டு பந்தி யாக
ஊண்சிறந்த வமுதத்தைப் புசிக்கும் போது
அக்கந்தான் சுரர்பந்தி தன்னி லேதான்
அமுதந்தான் புசிக்கையிலே திவலை சிந்த
புக்கந்தான் பூமியிலே விழுந்த வித்தை
போரான மனோன்மணியுங் கண்டிட் டாளே. 713

கண்டாக்கால் அசுராள்தாம் மருக்கால் தானும்
கருதியுமே புசிப்பார்கள் என்று எண்ணி
பண்டாக்கால் தானதனை மறையப் பண்ண
பருதியினால் தானலர்ந்து வச்சிர மாச்சு
விண்டாக்கால் பூமியிலே விழுந்த விந்து
விடுபட்டு நிமிளையுமே தோன்ற லாச்சு
சுண்டாக்கால் கருடப்பட்சிக் கல்லு தானும்
தெறித்தவிந்து லர்ந்துமேவுற் பத்தி யாச்சே. 714

## வச்சிர பேதங்கள்

உற்பத்தி வச்சிரத்தின் பேதந் தானும்
உண்டாச்சு நான்குவண்ணம் உயர்வு தாழ்வு
பிற்பத்தி பிரம்மசத்திரி வைசிய ரோடு
பேரான சூத்திரன்தான் நான்கு மாகும்
விற்பத்தி பிரம்மனது வெள்ளை யாகும்
விளங்கியதோர் சத்திரியன் சிவப்பு மாகும்
இற்பத்தி வைசியவச் சிரமே மவண்ணம்
ஏளிதான சூத்திரவச் சிரம்க ருப்பே. 715

(அ.பொ.) :—நான்குவண்ணம்=நாலு சாதி (இனம்); ஏமம்=பொன்.

கருப்புமாய்ச் சாதியுமே நான்கு மாச்சே
காணவுமே மூன்றுவித பேத மாச்சு
பொருப்புமாய்ப் புருடவச்சி ரமொன்றொன் றுண்டு
போரான புட்பவச்சி ரமொன் றுண்டு
அறுப்பான அன்னவச்சி ரமொன் றுண்டு
அதிகந்தான் மூன்றுவித பேத மாச்சு
விருப்பமாய்ப் புருடவச்சி ரவிருத் தம்போன்று
மிகுத்ததோர்பூ ரணகளைகள் தானு மாமே. 716



## வச்சிர குணங்கள்

களையுமாக ஒளிவிட்டுக் கனமு மாகிக்
கதித்தரேகை புள்ளியில்லா மலுமே தானும்
தளையுமாகச் சமமாகி நீரோட் டமாகித்
தனுக்காகத் தானிருக்கும் புருட வைரம்
விளையுமாய்வி குவச்சிரம்வி ளம்பக் கேளு
மிக்கான கோணமாக ரேகை வீழ்ந்து
பிளையுமாக புள்ளியுண் டாய்த் தானி ருக்கும்
பிரிந்தன்ன வச்சிரத்தின் பேதங் கேளே. 717

பேதந்தான் முக்கோண முருண்ட தாகிப்
பிரகாச மில்லாமல் தானி ருக்கும்
ஏதந்தான் வச்சிரத்தின் கடைசி பட்சம்
இதற்கேற்றம் விகுவச்சி ரமிதற் கேற்றம்
போதந்தான் புருடவச்சி ரமுமா குந்தான்
புருடவச்சி ரமிரசத்தைக் கட்டும் பாரு
நீதந்தான் விகுவச்சி ரந்த ரித்தால்
நேர்ந்தசவு பாக்கியங்கள் சம்பத்து மாமே. 718

சம்பத்துப் போகபாக் கியமும் ஒளியும்
அணிவதனால் உண்டாகும் நலமு முண்டாம்
கம்பத்துள் அண்ணமென்ற வச்சி ரந்தான்
கனமில்லா வல்பசத்து மாயி ருக்கும்
அம்பத்து அலம்பனமா கவேதான் காணும்
ஆண்மையான புருடவைரம் ஆணுக் காகும்
இம்பத்துப் பெண்வைரமது பெண்ணுக் காகும்
ஈரான அன்னவைரம் அண்ணற் காமே. 719

(அ.பொ.) :—சம்பத்து=செல்வம்; போகம்=துய்த்தல்; பாக்கியம்=கொடுப்பனை.

## வச்சிரம் தோன்றும் நாடுகள்

ஆமென்ற புருடவைரம் பலமாம் மெத்த
அதிகவச்சி ரத்தோற்ற மெங்கே யென்றால்
ஏமென்ற இமையோர்பர் வதத்தின் பக்கம்
ஏற்றமான மதங்கதேசத் திலுமே தானும்
தாமென்ற சவுராட்டி ரதேசந் தன்னில்
தாக்குமேதான் பவுண்டிரதே சமது தன்னில்
காமென்ற கலிங்கமென்னும் தேசந் தன்னில்
கவுசலாவெ னுதேசத்தில் காணுந் தானே. 720

(அ.பொ.) :—இமையோர்பர்வதம்=இமயமலை.

## தேசவச்சிர குணங்கள்

காணுமேபெண் ணுதடம்சர் வாபர தேசம்
கண்டதிந்த தலமெட்டும் வைரத் தோற்றம்
பானுமேப வுண்டிரதே சவச்சி ரந்தான்
பச்சைவண்ண மாயிருக்கும் பலகை யாகும்
மானமேம தங்கதேசத் திலுற்ப வித்த
மாவச்சி ரம்மஞ்சள் வண்ண மாகும்
கூனமேதான் சர்வாபர தேசந் தன்னின்
கூர்மவச்சி ரம்நீருண் டமேக மாமே. 721

மேகமான சவுராட்டி ரதேசந் தன்னில்
விளங்குமேதான் தோன்றியநல் வச்சி ரந்தான்
வேகமான வெளுப்பாகி வைர மாகி
மிக்கவுமே கெட்டியாகத் தானி ருக்கும்
பாகமாய்இ மையோர்பர் வதத்தில் தானும்
பண்பாக தோற்றமுற்ற வச்சி ரந்தான்
தாகமான தாம்பிரத்தின் சாயை போன்று
தனித்தவண்ணம் அப்படியே காணும் பாரே. 722

தானான பெண்ணுத டத்தில் தோன்றும்
தனித்தவச்சி ரம்சந்தி ரன்பி ரயைபோன்று
வேணுக வெளுப்பாகத் தானி ருக்கும்
மிக்கவேக லிங்கதேசத் துற்ப வித்த
வானன வச்சிரமே ஏமம் போலே
மதிப்பான கவுசலாதே சத்து வைரம்
கானன வாகைப்பூ வண்ணங் காணும்
கதித்ததான தேசத்தின் கணக்கு தானே. 723

## வச்சிரப் பரீட்சை

கணக்கோடே வைரத்தின் பரீட்சை காணில்
கனத்ததோர்பு ருடவச்சி ரமான தைத்தான்
புணக்கோடே பொன்னுரைக்கும் கல்லின் மேலே
பொருந்தவைத்து இருப்புச்செம் மட்டி தன்னால்
அணக்கோடே அடித்திட்டால் மயிர்ப்பி ரமாணம்
அசையாது வெடியாது அழுந்தி டாது
சினக்கோடே சிதைவில்லை சிறுத்தி டாது
சிதறுது சிதைவுகள்தாம் இல்லாது பாரே. 724



சிதைவில்லா வச்சிரத்தால் மறுவை ரத்தைச்
சேர்ந்தநுனி யேரல்கீ றிவுடைநீ ததானால்
விதையில்லா விலையேற்ற வச்சிர மாகும்
மிக்கான வைரத்திற்குக் குலிசமென்று பேரு
ஓதைவில்லா விலையொருவர் மதிக்க லாகா
உயர்ந்திட்ட வச்சிரமென் றறிந்து கொள்ளு
வதையில்லா வச்சிரத்தை இந்தி ரன்றான்
வச்சிரத்தால் பிநாகமாகச் செய்திட் டானே. 725

(அ.பொ.) :—பிநாகம்=சிவன் வில்.

## வச்சிரக் குரு

வச்சிரத்தைக் குருபண்ணும் வழியைக் கேளு
வாழையிலே கிடக்கின்ற தேரை தன்னை
கைச்சிரத்தைப் பிடித்துமேய ழுத்தி னுக்கால்
கனிந்துமேநீர்ப் பீச்சும்பீங் கானில் வாங்கு
நச்சிரத்தை வச்சிரத்தைச் சிவக்கக் காய்ச்சி
நால்மூன்று முறைதோய்த்துப் பிரண்டை தன்னை
அச்சிரத்தை யரைத்துமேவச் சிரத்தில் கவசம்
அழுத்தமாகக் கட்டியுமே வுலரப் போடே. 726

(அ.பொ.) :—நால்மூன்று=பன்னிரண்டு முறை.

உலர்ந்தபின்பு மண்செய்து குக்குடப் புடந்தான்
அடுக்கியேதான் புடத்தைப்போட் டாற விட்டு
எலர்ந்தபின்பு எடுத்துப்பார் மலர்ந்தே வுப்பி
ஏற்றமாந்த வளமதுதான் பற்றிப் பாயும்
விலர்ந்தபின்பு வெண்ணீரும் வச்சி ரந்தான்
விரிக்கவென்றால் வெகுபாட்டாம் வச்சி ரக்குரு
புலர்ந்தபின்பு சூதமது பலமு மொன்று
பொருமியதோர் குருதன்னில் வராகன் போடே. 727

போட்டுமேதான் முலைப்பாலை விட்டே ஆட்டிப்
பேராக வொருசாம மரைத்த பின்பு
வாட்டுமேதான் வழித்தெடுத்த யத்தி விட்டு
வளமாக எண்ணெய்குத்தி யுருக்கிப் போடு
நீட்டுமேதா யிட்டுச்செத் தூரித் துண்ணு
நீங்கியுமே சட்டைகக்கி வைர மாகும்
நாட்டுமேந வலோகமாயி ரத்திற் கோடும்
நலமான மாற்றதுவும் பனிரெண் டாமே. 728

## வச்சிர சத்து

பன்னிரண்டா மாற்றான வைரந் தன்னைப்
பார்த்துமேதெ ரிந்தெடுத்து புருட வைரம்
தன்னிரண்டு பலந்தானும் நிறுத்துக் கொண்டு
சாங்கமாக பிரண்டையென்ற சாற்றில் தானும்
முன்னிரண்டு நாள்தானும் ஊற வைத்து
முயற்சியாங் குடோரியரைப் பலந்தான் போட்டு
கன்னிரெண்டாங் காரமரைப் பலமும் போட்டுக்
கலந்தரைத்துக் குகையிலிட்டு ருக்கி டாயே. 729

குகையிலிட்டு ருக்கிடவே சத்து மாகும்
கூட்டியேதான் சத்தெல்லாம் பொறுக்கிக் கொண்டு
தகையிலிட்டுக் கரடெல்லாம் முன்போ லூதி
சாங்கமாகச் சத்தெல்லாம் ஒன்றாய்க் கூட்டி
மிகையிட்டு மித்திரனில் உருக்கிச் சாய்த்து
மீறாமல் பதினைந்து முறையே தானும்
பகையிட்டுக் குளிகைக்குச் சாரணை செய்ய
பகலிரவு மொன்றாகும் பரிந்து காணே. 730

பரிந்துமேதான் வயிரசத்து ருகுமப் போது
பாச்சியுமே தங்கத்தில் சூதம் ரெட்டி
தரித்துமேதான் தகடாக்கிச் சூதந் தன்னைத்
தாக்கியரை முலைப்பாலில் சவ்வு போலாம்
விரிந்துமேதான் வயிரம்நின்று ருகும்போழ் தத்து
விட்டிடவே தவளையைப்போல் விழுங்கும் எட்டி
நரித்துமேதான் நாகமொடு மனோசிலை தாக்கு
நலமானக் களங்காகும் கோடிக் கொன்றே 731

## வயிரச் செந்தூரம்

களங்கெடுத்துப் பொற்றலையின் சாற்றா லாட்டிக்
கனக்கவேபு டமிடச்செந் தூர மாகும்
பளங்கெடுத்துப் பணவெடைதான் பாவி லுண்ண
பாலையான உடலதுதான் வைர மாகும்
விளங்கெடுத்து மேதினியி லெல்லாஞ் சுற்றி
விடுபட்ட நதிமலைக ளெல்லாம் பார்த்து
அளங்கெடுத்துச் சதுர்யுகமாய் ஆடித் தேர்ந்து
அனேகமான நூல்பார்த்த லையலாந் தானே. 732



## ஞானங் கூறல்

அலைந்திட்டப் படிகண்டார் மூல நாதர்
அப்படியே யான்கண்டும் ஆடித் தேர்ந்தேன்
குலைந்திந்தப் படிகண்டேன் ஞான வீதி
கூட்டினேன் ஞானத்தில் குழைந்து போனேன்
கலைந்திட்டப் படிகண்டால் அகண்ட மாவார்
கண்டிதற்குள் சாதகத்தைக் காண வென்றால்
துலைந்திந்தக் கற்பமுறை யுண்டு தேறிச்
சேர்ந்துமேதான் அறுபதமுங் கண்டு பாரே. 783

(அ.போ.) :—அறுபதம்=ஆருதாரங்கள்.

பாருநீயே துறைக்கெல்லாம் வாசிப் பூட்டு
பராபரையை முப்பாழில் தாயைக் காண்பாய்
நேருநீயே நாலான குளத்திற் குள்ளே
நிரம்பியேதான் குதித்தங்கே நீந்தி யாடு
மோருநீயே முப்பாழில் தாயைக் காண்பாய்
முலைப்பாலை யளித்திடுவாள் முனிந்து சத்தி
ஊருநீயே யதைத்தாண்டி யுள்ளே புக்கு
ஓகோகோ வொன்றுமில்லை குறியொன் றாச்சே. 784

குறியாச்சு யென்றுசொல்ல ரெண்டு மாச்சு
குவிந்துமேதான் உள்புகுந்தா லொன்று மாச்சு
உறியாச்சு உப்புமப்பு மொன்றா னாற்போல்
ஒடுங்கியேதான் உள்புகுந்தா லொன்றாய்ப் போகும்
அறியான அப்புவென்ன போத மாச்சு
அளவியதோர் நீருறைந்து மணித்தா யாச்சு
வெறியாச்சு அவள்நினைக்க விண்ணு மாச்சு
விளக்கமாக புவனமெல்லாம் விளங்கிற் றென்னே. 785

(அ.போ.) :—அப்பு=நீர்.

## பச்சை தோற்றம்

விளக்கமாகப் பச்சைதனின் தோற்றங் கேளு
வலாசூரன் இராக்கதனின் பித்து தன்னைப்
பளக்கமான கருடபக வானுந் தானும்
பறித்ததுவோர் வயிற்றைத்தான் மூக்கால் கீறி
சளக்கமான பசுகோசம் பித்து தன்னைச்
சாப்பிடவே கருடனுமே சகிக்கா மல்தான்
மூளக்கமான மூர்ச்சையினால் இரண்டு மூக்கால்
முதிர்ந்ததான நேத்திரத்தால் விட்டிட் டாரே. 786

விட் டிட்டார் மலையின்மேல் பித்து தன்னை
மிக்கான பாம்புகளைப் புசித்தோன் தானும்
மட்டிட்ட வலாசூரன் பித்து தன்னை
வாயாலே கக்காமல் மூக்கால் விட்டார்
கெட்டிட்ட பித்துதானே மலையில் வீழ்ந்து
கிளர்ந்தெழுந்த திவலையது பரவிச் சிந்த
அட்டிட்ட வங்கதேசம் தனிலே வீழ்ந்து
ஆதிக்க மரகதமும் தோற்ற மாச்சே. 737

(அ.பொ.) :—பாம்புகளைப் புசித்தோன்=கருடன்.

## உத்தமப்பச்சைக் குணம்

உற்பத்தி மரகதந்தான் குற்ற மின்றி
உத்தமமாம் குணத்தோடே வுயர்த்தி யாகும்
கற்பத்தி யுத்தமத்தைக் கருதக் கேளு
கனமாகி மழமழப்பாய்ப் பச்சை யாகி
மற்பத்தி மால்மேனி தன்னே டொத்து
மாசில்லா மின்னலாகக் காந்தி யாகிக்
கிற்பத்திக் கீற்றதுவும் இல்லா தாகிக்
கெட்டியாக பருமனுமா முத்தமந் தானே. 738

(அ.பொ.) :—மால்மேனி=திருமாலின் உடல் நிறம்; மின்னல்=பளபளத்தல்; காந்தி=ஒளி.

## மத்திமப் பச்சைக் குணம்

தானென்ற மத்திபத்தைச் சாற்றக் கேளு
தளுக்கில்லாக் கரடாகி நீல வண்ணம்
கோனென்ற வெளுப்பாகிக் கரடு மாகிக்
கனமில்லா தாகியுமே கிளையு முண்டாய்ப்
பானென்ற பார்வைக்கு விகார மாகிப்
படியான ரூட்சையாகக் களையில் லாகி
மானென்ற பச்சையது நடுவ தாகும்
மரகதமாம் பச்சையுட வண்மை தானே. 739

(அ.பொ.) :—ரூட்சை=சுரசுரப்பு; களை=அழகு; நடுவதாகும்=மத்திபமான; வண்மை=வளப்பம்.

## பச்சை சத்து

வண்மையான உத்தமமாம் பச்சை வாங்கி
வல்லாரைச் சாறுதனில் ஐந்து நாள்தாம்
உண்மையாக வூறவைத்துப் பலமும் ரெண்டு
உயர்ந்ததான குடோரியது பலமும் ரெண்டு



கண்மையான காரமரை வீரங் கால்தான்
கனிந்தரைத்துக் குகையிலிட் டூதி னுக்கால்
வெண்மையாக முத்துப்போல் சத்து மாகும்
மிரளாதே கரடரைத்து வூதி டாயே. 740

## பச்சை சத்துச் செந்தூரம்

ஊதியுமே சத்தெல்லாம் பொருக்கிக் கொண்டே
உருக்கியேமுன் போலேமித் திரனில் சாய்த்துச்
சோதியையே ஆக்கிட்டுக் குளிகைக் குத்தான்
சூட்டினாலே மரகதப் பச்சைச் சத்தை
வீதியுமே கோணுமல் ஆகா யத்தில்
விரைந்துமேதான் கொண்டெழும்பும் நிமிடத் துள்ளே
பாதியேதங் கமிட்டுச்செந் தூரித் துண்ண
பச்சைமாலின் வடிவம்போ லாகுந் தானே. 741

வடிவம்போல் ஆக்கினதோர் செந்தூ ரத்தை
மாட்டிடவே நவலோக மாயிரத் திற்கொன்று
படிவம்போல் மாற்றதுவும் பதினு ருகும்
பாங்கான நூறுதொந்தம் பற்றியேறும்
கடிவம்போல் காயசித்தி கற்ப காலம்
கழிந்துமேதான் போய்விடுமே நிமிடத் துள்ளே
இடிவம்போல் இக்கற்பம் எண்பதுக்கு மேலே
இசைந்துமேதான் கொள்ளயிலே ஏற்றந் தானே. 742

## வாசியோகம் கூறல்

ஏற்றமான வங்கென்று வுள்ளே வாங்கி
இறுதியையே சிங்கென்று மூலம் பாரு
சீற்றமான நாலையுமே வுள்ளே வாங்கு
சிதறுமல் வாசியது சிக்கும் பாரு
வீற்றமான இந்தவகை முன்னே பாரு
மெள்ளவுமே மீறுமல் விரைந்தும் ஏறு
ஆற்றமான ஆறுதலம் நினைவாய் பாரு
அறிந்திட்டால் அடுக்கெல்லாம் நிலைத்து ஆடே 743

ஆடினாலே நாலுமுள்ளே நிலைத்துப் போகும்
அறிவாலே வுற்றுப்பார் நினைவை யுன்னி
வாடினாலே மனமலைந்து விட்டி டாயே
வற்கார மனோன்மணிக்குள் வாயை மூடு

நீடினாலே கருவிவந்து மூடிப் போகும்
நினைவாலே அங்கமெலாம் நிலைத்துப் பாரு
ஓடினாலே அசைவுற்று வுன்னி யூனு
யோகசித்தி வாதசித்தி வுறுதி யாமே. 744

உறுதியான ஞானசித்தி யுடனே யாகும்
உடலழியக் காயமென்று இருக்க லாகும்
அறுதியாக ஆறுதல மறிய லாகும்
அறியவுமே நிர்மலத்தில் நிலைக்கப் பண்ணும்
திறுதியாக வாசனையும் தீர்ந்து போகும்
சேர்வதில்லை போவதில்லை சேர்க்கு மொன்றில்
இறுதியாக சமாதிக்குள் இருந்து கற்பம்
எவ்விடமும் சுகமிதைப்போ லில்லை தானே. 745

இல்லையேவே தாந்தம்சித் தாந்த மென்பார்
இயங்கியதோர் சமரசந்தா னிடமே வென்பார்
நல்லையேநா தாந்தம்போ தாந்த மென்பார்
நன்மையொத்துக் கலந்தோமே என்றுஞ் சொல்வார்
அல்லையேதான் ஆறுதல மாரு தாராம்
ஆராய்ந்துட் புக்குநின்றும் அறிந்து பாரார்
தில்லையேதான் நீயேது வேட மேது
சித்தறிவாம் மாந்தருடன் சேரொண் ணாதே. 746

(அ.பொ.) :—சித்தறிவு=சிற்றறிவு.

ஒண்ணாத சாக்கிரமும் சொப்பன மாகும்
ஓதியதோர் சுழுத்தியுடன் துரியந் தானும்
துண்ணாதது ரியாதீதங் கடந்து நோக்க
சொருபமாக பூரணந்தான் சொக்கிக் கொள்ளு
உண்ணாத மூலத்தே வுன்னி யூது
உலகெலாமே வெளிமயக்கு வேறென் றில்லை
சண்ணாத சிவனோடு தாய்தான் கூட
சந்தோட மடைந்திடவே மருவி டாயே. 747

## நீலரத்தினத் தோற்றம்

மருவியேநீ லரத்தினத்தின் தோற்றங் கேளு
வலாசூரன் கண்மணிகள் ரெண்டுந் தெறித்துத்
திருவியுமே சிவப்புரத்னஞ் சிங்கள நாட்டில்
செப்பமாக மடுத்தன்னில் வலனின் தலையை



உருவியுமே சூரியன்தான் எடுத்து வந்து
உற்றதால்தான் போட்டிடவே கங்கை தன்னில்
பருவியுமே சிங்களநன் னாட்டிற் கப்பால்
பாய்ந்ததொரு யோசனைதூ ரத்தில் தானே. 748

தானென்ற மணித்தெறித்து யோசனை தூரம்
தப்பாலே விழுந்தவிடந் தன்மை கேளு
தேனென்ற சிங்களநாட் டதற்க ருகேதான்
சேர்ந்ததுவோர் யோசனைதூ ரமப்பால் தானும்
வானென்ற வலாசூரன் கண்மணி யுந்தான்
மார்க்கமாகத் தெறித்திட்ட வண்மை கேளு
வேனென்ற பெண்ணொருத்திக் கையைத் தானும்
மிக்கதோர்மாந் தளிர்போல்கை யுடையாள் தானே. 749

மாந்தளிர்போல் கையுடைய வஞ்சிப் பெண்தான்
மரந்தானும் சொல்லக்கேள் உயரம் மெத்த
காந்தளைப்போல் கைகளினால் மரம சைத்துக்
கருஞ்சிவப்பாம் பூவதுவே எட்டா மல்தான்
வாந்தளிர்போல் உறுக்கியுமே மலர்கள் தம்மை
ஒவ்வொன்றாய் பொருக்கியுமே மடியில் போட்டு
போந்தளிர்போல் அப்பாலே போகும் போது
கொடிதான அசுரன்கண் ரெண்டு தானே. 750

(அ.பொ.) :—காந்தளைபோல்=காந்தள் மலர்போல்.

ரெண்டுமேதான் பூமியிலே கிடக்கும் போது
நிறந்தானும் பத்திபத்தி யாகப் பாய்ந்து
கண்டுமேதான் எப்படித்தா னிருந்த தென்றால்
கருநெய்தல் பூப்போலும் கேதக.மாவனம்
திண்டுமேதான் கடற்கரையில் நீருந் தானும்
சீறியுமே முன்வராமல் நெருக்க மாக
தண்டுமேதான் தாழையது நெருங்கி நிற்க
தன்னுக்குள் விழிகிடக்கக் கண்டிட் டாளே. 751

(அ.பொ.) :—கேதகமாவனம்=தாழைவனம்.

கண்டுமுமே பெண்தானு முற்றுப் பார்த்துக்
களித்துமேதான் நிற்கையிலே கணவன் வந்தான்
உண்டுமேதான் இராக்கதனும் பெண்ணைக் கண்டு
உருகியுமே விளையாடி யில்லம் போனான்

திண்டுமேதான் பூமியது செருக்க மெய்தி
தெறித்த கண்ணில் திவலைசிந்தி நிலத்தில வீழ
விண்டுமுமே நீலமது விளைவு மாகி
விளக்கமாக வுற்பத்தி யாச்சு தானே. 752

## நீலரத்தினத்தின் சாதி

உற்பத்தி நான்குவித சாதி யாகி
உகந்ததுவோர் நீலமது வெளுப்புஞ் சிவப்பும்
பிற்பத்தி பிரம்மமாம் நீ லரத்தி னந்தான்
பின்புதானே சிவப்பென்னும் நீல மாகும்
தற்பத்தி சத்திரிய நீல மாகும்
சார்ந்தபொன்னின் நிறமான நீலந் தானும்
மற்பத்தி வைசியனென் றநீல ரத்தினம்
மகத்தான கருப்பதுவும் சூத்திரன் தானே. 753

சூத்திரமாம் நீலமது நான்கு மாச்சு
தோடந்தான் இந்திரநீ லத்தைக் கேளு
மேத்திரமாம் நீலரத்தி னத்தின் மேலே
மேகம்போல் மாசதுவும் விழ்ந்து தானல்
தாத்திரமாம் தளபூத தோட மாகும்
தரித்திட்டால் இதைத்தானு மெவரே னுந்தான்
ஆத்திரமாம் சம்பத்தும் ஆயுள் தானும்
அடங்கலுமே சீரணத்தை அடையுந் தானே. 754

அடையுமேதான் நீலத்தின் மேலே தானும்
அடைந்துமேதான் சுக்கான்போல் சுரசுரப்பு கண்டால்
துடையுமேதான் சுக்கான்தன் தோட மாகும்
சுயம்பாக வெவரேனும் தரித்தா ராகில்
இடையுமேதான் தரித்திரமும் தான டைந்து
ஏழையுமாய்த் தேசாந்தி ரிதானு மாவான்
எடையுமேதான் நீலத்தின் மேலே கீற்றுய்
இத்துமேதான் பிளந்ததுபோல் படலந் தானே. 755

படலம்போல் வெடிப்புமாக சமுசயங்கள்
பாங்காகக் கண்டாக்கால் பலனைக் கேளு
புடலம்போல் புலிசிங்கம் யானை பன்றி
பொல்லாத மிருகங்கள் பயமுண் டாகும்



திடலம்போல் நீலத்தில் சிதனை கண்டால்
சிறுகலாக வுடைத்ததுபோல் தானி ருந்தால்
தடலம்போல் தரித்தாக்கால் பெண்டு பிள்ளை
தனித்துமேதான் நாசமது தானுகும் பாரே. 756

(அ.பொ) :—பலன்=பயன் ; சிதனை=விறல்.

பாரென்ற நீலமணி கர்ப்பத் துள்ளே
பரித்ததோர் மண்ணிருக்கும் ஆய்ந்து பார்த்தால்
தேரென்ற தெரிந்திருக்கும் அதற்குப் பேர்தான்
சேரனிந்த மிருத்திகாவின் தோட மாகும்
ஆரென்ற இதைத்தரித்தால் குட்டம் வந்து
அணுகியுமே தேமல்போல் உடம்பில் விழும்
நேரென்ற நீலரத்தி னத்திற் குள்ளே
நெறிபோலே கல்லிருக்கும் நினைவாய்க் காணே. 757

(அ.பொ.) :—மிருத்திகாதோடம்=மண்தோடம்.

காணவுமே கல்பார்க்கும் ஆய்வுக் காரன்
கண்டுகொள்வான் தரித்தால பகீர்த்தி யுண்டாம்
ஆணவுமே அதிகர்ப்ப தோட மென்று
அறிந்துகொள்ளு நீலரத்தி னத்திற் குத்தான்
தோணவுமே தோடங்க ளான நீலம்
சுளுக்கான ரத்தினத்தைத் தரிக்க லாகா
ஊணவுமே வுத்தமமாம் நீலந் தானும்
உயர்ந்தகுண மைந்தாகும் உற்றுப் பாரே. 758

(அ.பொ.) :—அபகீர்த்தி=இகழ்ச்சி.

## நீலரத்தினத்தின் ஐந்துவிதக் குணங்கள்

உற்றுமேதான் ஐந்துகுணம் ஏதென் றுக்கால்
உருட்சியான பருமனுகமழம முப்பாய்
பெற்றுமேதான் சோதிப்பி பிரகாச மாகி
பெய்தநல்ல நீரோட்டம் பற்றிப் பாயில்
சுற்றுமேதான் நிறஞ்சரியாய் யிருப்ப தாகி
துரும்பையதன் மேல்வைக்க ஒட்ட லாகும்
பற்றுமேதான் பஞ்சகுண முடைய தாகில்
பாங்கான நீலரத்தி னநிற மதாமே. 759

ஆமென்ற நிறந்தன்னை யறியக் கேளு
ஆதியான விட்டுணுவின் உடலது போலாம்
காமென்ற கருநெய்தல் நிறம்போ லாம்பூ
கார்கால மயில்கழுத்து வண்ணம் போலும்
தேமென்ற சிவனுடைய காள கண்டம்
செப்பமாக இதுபோலு மிருந்திட் டாக்கால்
ஏமென்ற வொருதோட மில்லை காணும்
இந்திர நீலமகா மணிதா னென்னே. 760

(அ.பொ.) :—காளகண்டம் = கருநிறக் கழுத்து : கார்காலம் — ஆவணி, புரட்டாசி.

## நல்ல நீலமணிக்குத் தேர்வு

மணிதன்னை யாதொருவன் அணிந்திட் டாக்கால்
மதிப்பான வாழ்வுதன வாதா யமுண்டாம்
திணியான கீர்த்தியுண்டாம் ஆயு ளுண்டாம்
செய்பரிட்சை நீலத்துக் கறிய வென்றால்
அணியான ஆவின்பால் புதுச்சட் டிதன்னில்
அரைச்சட்டி யிட்டுமேநீ லத்தைப் போட்டு
கணியான அரைநாழிக் கழித்துப் பார்த்தால்
கலந்துமேபா லெல்லாம்நீ லநிற மாமே. 761

(அ.பொ.) :—ஆதாயம்=இலாபம் ; திணியான=உறுதியான.

நிறமானால் இந்திரநீ லரத்தி னமாகும்
நிச்சயித்துச் சூரியப கவானின் மகன்தான்
துறமான சனிபகவான் யமதர் மராசன்
தன்னுடைய ரத்தினங்க ளென்று பேரு
அறமான யாதொருத்தர் இதைய ணிந்தால்
ஆதிமகா விட்டுணுபி ரசன்ன மாவார்
திறமான லட்சுமியின் அருளு முண்டாம்
தேசுண்டாம் ஆயுளுண்டாம் செப்பி னேனே. 762

(அ.பொ.) :—தேசு=ஒளி (தேஜஸ்).

## நீலரத்தினச் சுண்ணமும் குணமும்

செப்பினதோர் நீலத்தைத் தெரிந்தெ டுத்து
தேசியான கட்டுண்ணுக் கழுதைக் கத்தம்
உப்பினதோர் மூத்திரத்தை பாத்திரத் திட்டு
ஊறவைப்பாய் நீலத்தை ஒருநாள் தானும்



வெப்பியதோர் வென்னீரில் கழுவிப் போட்டு
மிடுக்கான சுத்தியது வாகும் பாரு
நெப்பினதோர் தேள்கொடுக்குச் சாற்றில் நீலம்
நீட்டியரை முச்சாமம் குகையில் போடே. 763

(அ.பொ.) :—தெரிந்து=ஆராய்ந்து ; கட்டுண்ணு=கட்டிப்போட்டு வளர்த்ததில்லாத (தேசி).

குகையிவிட்டுச் சீலைசெய்து சிவக்க வூதி
குளிர்ந்தவுடன் எடுத்துப்பார் கூகை நீரும்
பகையிவிட்டு வனுபானந் தன்னி னோடே
பணவெடைதான் பாலிலுண்ணு பத்தி யந்தான்
தகையிவிட்டுச் சயகாசம் குட்டம் விக்கல்
தாபசோபங் களோடுதனி யாம்காய்ச் சல்தான்
மிகையிவிட்ட குன்மமொடு மகாவி டங்கள்
மிடுக்கான சூலையெல்லா மோடிப் போமே. 764

(அ.பொ.) :—சயகாசம்=இளைப்பிருமல் (கூடிய இருமல்).

ஓடவுமே கடுஞ்சுருக்குச் சத்துக் கேளு
உத்தமமாம் நீலமது பலந்தான் நாலு
தேடவுமே வாதமென்ற குடோரி யொன்று
சிறந்திட்ட வெங்காரம் பலமு மொன்று
நீடவுமே வெடியுப்பு நீரா லாட்டி
நிறுத்திவைந்து கல்வத்தில் மூன்று நாள்தாம்
வாடவுமே வச்சிரமாங் குகையி விட்டு
மண்செய்துக் காயவைத்து வுருக்கி டாயே. 765

உருக்கியுமே ஐந்துமுறை சத்தைப் பொருக்கி
உருதியாக நட்பதனில் சாய்த்துக் கொண்டு
தருக்கியுமே குளிகைக்குச் சாரணை ஈந்து
சாய்த்திட்டால் குளிகைக்குக் கருக்கு மெத்த
வருத்தவுமே வடவாங்கி யிலோடும் போது
மாலுடைய வடிவம்போல் வருத்த மில்லை
பெருக்கியுமே பேரண்டப் பதந்தா னெல்லாம்
பிசகாமல் கொண்டுமேதான் மீளுந் தானே. 766

(அ.பொ.) :—வடவாங்கி=வடவாமுகாக்னி : இது கடலிலுள்ள தீ. பெண் குதிரை வடிவுள்ளது என்னும் புராணங்கள்.

### நீலரத்தின சத்துச் செந்தூரம்

மீளவுமே சத்தெடுத்து வுருக்கிக் கொண்டு
மீளாமல் சரியெடையாய்ப் பச்சை நாகம்
தாளவுமே சேர்த்திட்டால் நூறு தொந்தம்
சத்துக்குச் சமனெடையாய்ச் சேர்த்துக் கொண்டு
நீளவுமே நாலிலொன்று தங்கம் சேரு
நிசமான சூதமுமப் படியே சேரு
கீளவுமே பொடிபண்ணி கந்தினுல் வறுத்து
கெட்டியான குப்பியில ரைவாசி போடே. 767

அரைவாசி நிரப்பியேவா லுகையில் வைத்து
அனுகியேதீ யெரித்துப்ப னிரெண்டு சாமம்
மரையவேதான் ஆறவிட்டெ டுத்துப் பார்த்தால்
மாதுளம்பூ நிறம்போலாம் மண்ட லந்தான்
பரையவே பணவெடைதான் பாலி லுண்ணு
பாங்கான நீலமலே போலாந் தேகம்
நரைகளெல்லாம் மாறியுமே பால னுவான்
நமனுன மணியினுட சத்து தானே. 768

### வாசியோகத்தின் பெருமை கூறல்

சத்தான வாசியென்ற குதிரை தன்னை
தளரவிட்டால் தள்ளிவிடும் பேரொட் டாது
சித்தான சித்தியில்லை வாத மில்லை
திரமான யோகமில்லை ஞான மில்லை
பித்தான பித்தனைப்போல் பேய னுகி
பேரான ரசவாதம் பெருக்கச் சொல்வான்
நத்தான பெண்கள்பின் நாய்போல் சுற்றி
நன்மையற்றுப் பாவத்தில் நலங்கு வானே. 769

நலங்காமல் வாசியினில் ஏறி நின்று
நாள்தோறும் பழக்கமதி லுற்ற னுனல்
விளங்காமல் சிகாரத்தை வெளியி லூத
வெந்திடுமே நினைத்ததெல்லாம் நீருய் வேகும்
அலங்காகல் அரனுள்ளே ஆடு வான்பார்
அருகிருந்த திசநாத மடங்க வோங்கும்
புலங்காமல் பிறவியறும் ஒன்று மொன்றில்
பித்தான ஆணவமும் சமயம் போமே. 770



போமென்ற வாதமது சித்தி யானுல்
பெருமைவந்து பிரமித்துக் கண்ணை மூடும்
ஆமென்ற பிறர்பெண்ணை யனுப விப்பார்
அடுத்தவர்தம் பொருளெல்லாம் சுடுவிப் பார்கள்
பாமென்ற பாவமதை முன்பின் பாரார்
பரிகரித்த வார்த்தையினுல் பசப்பு வான்பார்
நேமென்ற பிரம்மவிகா ரத்தைப் பாரார்
நிலைத்துநின்ற காயசித்தி செய்யார் காணே. 771

(அ.பொ.) :—பிரம்மித்து=செயலற்று ; சுடுவிப்பார்=வாதம் செய்யக் கண்டபடி புடம், ஊத்து முதலிய செய்விப்பர்; பசப்புவார்=இச்சகம் பேசுவார்.

செய்கின்ற வுலகோர்க்கு வாத மாய்கை
திரமான பெரியோர்க்கு ஞான சித்தி
உய்கின்ற யோகியர்க்கு பரமா மூத்தி
உன்மணித்தாய் சொன்னதொரு வுபதே சந்தான்
வைகின்ற வத்துவைத்துப் பூசை பண்ணு
மானிடர்கள் வாதத்தில் மருவ லாகா
கொய்கின்ற வத்துவைத்துப் பூசிப் போர்க்குக்
கொழுந்துவிட் டமூலமும் கொள்ளுந் தானே. 772

கொள்கின்ற சத்தமான பரிசம் ரூபம்
கூருன சூதத்தோடு கந்த மைந்தும்
கொள்கியுமே மனந்தானும் சேர்ந்தே ஓடும்
தெளியாமல் விடுகாதே பாவ மாகும்
அள்கியுமே ஐந்துகொம்பை அறிவால் வீசி
ஆனந்த போதத்தில் அழுந்தி நில்லு
வெள்கியுமே மாயையைத்தான் விரைந்து பூசி
வேதாந்தம் தனில்நாளும் விரைந்தி டாயே. 773

(அ.பொ.):—ஐந்துகொம்பை=பஞ்சேந்திரியம்.

### புட்பராகத் தோற்றம்

விரைந்திட்ட புட்பராகத் தினது சேதி
விளம்பிடவே வலாசூரன் ஐக்கிய மானுன்
பரைந்திடவே பசுவாகி மரிக்கும் போது
பளிச்சென்று வாய்திறந் தட்ட திக்கும்

திரைந்திடவே செவிடுபட்டு போகந் தானும்
சிரித்தும்தான் பொன்னிறம்போல் வாயால் கக்கி
திரைந்திட்டு விழுந்த பித்தம் தெரிந்த தெல்லாம்
சிறந்தபுட்ப ராகமுற்பத் தியாச்சு தாமே. 774

(அ.பொ.) :—பசுவாகி=யாகத்துக்குப் பலிதரும் மிருகமாகி.

உற்பத்தி புட்பராகத் தைத்தான் கேளு
உயர்ந்தமகா மேருகிரி கொடிமு டியாமே
மற்பத்தி மயன்தானும் இந்தம ணியாலே
மதிப்பான தேவேந்தி ரரசி ருக்க
தற்பத்தி மண்டபமும் மாளிகை வீடும்
சமர்ப்பித்தான் புட்பராகத் தினாலே தானும்
இற்பத்தி இம்மணிதான் இரண்டுவித முண்டு
இசைந்ததுவோர் பளிங்குடன்பொன் னிறந்தா னென்றே. 775

(அ பொ.) :—மயன்=தேவதச்சன்.

## புட்பராகத்தின் இயல்பு

பொன்னிறந்தான் மிருதியுமே வுத்தமு மாகும்
பேரான பளிங்குக்கல் அதம மாகும்
மண்ணிறந்தான் மாணிக்க விந்திர நீலம்
மாசற்ற விரண்டுக்கும் இதுதா னென்ற
பண்ணிறந்தான் புட்பராகத் துக்குத் தானும்
பத்துகுண முண்டுவுத்த மந்தான் கேளு
உண்ணிறந்தான் மத்திபமாங் குணத்தான் பத்து
உகந்துமேதான் பார்த்தறிந்து வுன்னிப் பாரே. 776

உன்னியுமே வுத்தமத்தின் குணத்தைக் கேளு
உயர்ந்ததோர் நீலவெளுப் பாயி ருக்கும்
மின்னியுமே மெழுகூர்ந்து குளிர்ச்சி யாகி
வெளிருன தோர்புட்ப ராகத்துச் சேதி
பின்னியுமே பொற்குன்று நிறமாய்த் தோணும்
பெரிதான வுச்சிட்ட மாயி ருக்கும்
சென்னியுமே மின்னல்நி றமாகக் காணும்
செழுமையாக கிரணங்கள் போலு மாமே. 777

போலுமாய்நிர் மலமாய்ப்பொற் கொன்றை நிறமாய்ப்
பெருமனும்ம ழமழப்பாய்த் தூய்மைக் குணந்தான்
ஆலுமாக எழுகடைச்சல் உடைசல் புள்ளி
அடர்ந்ததுவோர் கேழ்வரகு வண்ணக் கரடு



காலுமாய் கருப்போடு பெருமன் குடிலம்
கனமில்லா வெளுப்புடன்மத் திபமா கும்தான்
பாலுமாக பத்துமது மத்திப மாகும்
பாங்கான புட்பராகக் குணந்தான் பாரே. 778

## புட்பராகத்தின் சத்து

பாரென்ற புட்பராகம் தன்னைத் தானும்
பாங்கான வுத்தமமாய்த் தெரிந்தெ டுத்து
வேரென்ற வெள்ளாட்டு மூத்தி ரத்தில்
விளங்கவேயி ருசாமம் பாத் திரத்தி விட்டு
போரென்ற புட்பராகத் தையே தானும்
போட்டுமேர வியில்வைக்கச் சுத்தி யாகும்
கோரென்ற வெந்நீரில் கழுவிப் போட்டு
கதித்ததோர் வழுதலங்காய்ச் சாற்றில் போடே. 779

(அ.பொ.) :—வழுதலங்காய்=முட்கத்தரிக்காய் ; கண்டங்கத்தரிக் காய் இதில் இருவகையுண்டு.

சாற்றிவிடு இருசாமம் பரிதியில் வைக்க
தனியான குகைசுட்டுச் சாறு விட்டு
போற்றிவிடு புட்பராகந் தன்னை யிட்டு
பிசகாமல் மண்செய்து பெரும்பு டந்தான்
காற்றிவிடு காட்டெருவைக் குவித்துப் போட்டு
கனல்வைத்து ஆறவிட்டெ டுத்துப் பார்த்தால்
வேற்றிவிடு வெண்ணீரும் சூதம் கட்டும்
விரைந்தநவ லோகத்தில் ஏம மாமே. 780

## புட்பராகச் சத்துச் செந்தூரம்

ஏமமாம்புட் பராகத்தின் சத்து தானும்
ஏற்றமாக பலம்பத்து நிறுத்துக் கொண்டு
கோமமான வெடியுப்பு நீரிலை லாட்டி
குழைந்தபின்பு குடோரியொரு காசு போடு
காமமாம்வெங் காரம்கா செடைதான் போடு
கலந்தரைத்துக் குகையிலிட்டு ருக்கி னுக்கால்
சமமான சத்ததுவும் தவளம் போலாம்
தாக்கியுமே மித்திரனில் சாய்த்தி டாயே. 781

## புட்பராகம் போக்கும் நோய்கள்

சாய்த்துமேகு ளிகைக்குச்சா ரணைதா னீந்தால்
தரியாமல் ககனவழி தாண்டி யோடும்
மாய்த்துமேதான் போனவுயிர் மருவி மீட்கும்
மார்க்கமாய்ச்சத் ததனைச்செந் தூரித் துண்ணு
தோய்த்துமேவா தமுடன்சேத் துமத்தைத் தானும்
தினவுகளை கக்கலைசூட் டுமந்தத் தைத்தான்
வேய்த்துமேவிக் கல்குட்டம் தாபம் போக்கும்
மிடுக்கான தீபனந்தான் உண்டாம் காணே. 782

(அ.பொ.):—கக்கல்=வாந்தி ; தீபனம்=பசி, சீரணம்.

உண்டான மலங்களெல்லாம் கழிந்து போகும்
உறுதியாக உடலதுதான் வண்டு போலாம்
அண்டான அனேகநாள்தான் சடத்தை ஆழ்த்தும்
அறிவுண்டா மாபரண மாய ணிந்தால்
விண்டான தேவர்தம் குருவு மான
வியாழபக வான்கிருபை மிகவுண் டாகும்
தண்டான புட்பராகத் தினது சத்தைச்
சாதித்தோர் என்னாளும் சாகார் காணே. 783

## நோன்பு தவறும் ஞானியின் நிலை

சாகாமல் இருந்தவனே வாதியாகும்
சஞ்சரித்தால் பெண்ணோடு சடந்தான் நில்லாது
வேகாத தலையறிந்தோன் யோகி யாகும்
மெய்மறந்து அலைந்தாக்கால் பாவி யாவான்
ஆகாத ஆங்கார ஆண வத்தை
ஐம்புலனை யடக்கினாலே அவனே ஞானி
தேகாமல் சிகரத்தை வுள்ளே ரேசி
சிவனவனும் தெளிவான ஞானி தானே. 784

(அ.பொ):—சஞ்சரித்தால்=காம இச்சையுடன் திரிந்தால்; வேகாத தலை=சகஸ்ராரத்தைக் கண்டு சிதாகாசம் தரித்தவர். வேகாத தலையுடையவர்.

## கோமேதகத் தோற்றம்

தானான கோமேத கத்தைக் கேளு
தாக்கான வலாசுரன் நிணத்தைத் தானும்
ஆனான சண்டைதனில் அசுரால் தேவர்
அடித்திடவே நிணந்தெரித்த விடங்க ளெல்லாம்



கோனான கோமேத கம்தோற் றமாச்சு
கோமூத்தி ரவண்ணமாயி ருக்கும் தானே
மீனான வுத்தமகு ணமெப்ப டியென்றால்
மெழுகூர்ந்து நிர்மலமா சில்லை தானே. 785

(அ.பொ.):—நிணம்=கொழுப்பு.

## கோமேதகத்தின் இயல்பு

மாசில்லா தேவவண்ண மாகத் தானும்
மதிப்பான ஒளியுள்ள தாக விருக்கும்
ஊசில்லாத் தொருநீராய்த் தானி ருந்தால்
உத்தமமாங் குணமென்று சொல்ல லாகும்
வேசில்லா விச்சாய மாகக் காந்தி
மிகுந்தில்லா தேயாகி மஞ்ச ளாகிக்
கேசில்லாக் கிளைகளானப் படல மாகி
கிளர்ந்தெழுந்த குணபலநீர் புளிப்பா காதே. 786

புளிப்பான குடிலநீர்தான் இலேசு மாகில்
புரிந்திந்த குணங்கண்டால் சத்துக் காகா
களிப்பான வுத்தமத்தை அணிந்தா னால்
கனபுத்தி மிகவுமேகோ சரமு மாகும்
விளிப்பான ஆயுள்தான் நீள லுண்டாம்
மிடுக்கில்லை யென்னாளும் மெலிவு மில்லை
நளிப்பான நீர்தன்னைச் சாடிப் போடும்
தசையிலுள்ள குற்றமெல்லாந் தகர்ந்து போமே. 787

(அ.பொ.):—இலேசுமாகில்=நொய்தாகில்.

## கோமேதகக் குரு

போமென்ற கோமேத கந்தனை யெடுத்து
புரவியுட கோமயத்தில் மூன்று நாள்தாம்
நேமென்று ஊறவைத்து நிலக்குமிழ்ச் சாற்றால்
நெகிழாதே ஊறவைத்து மறுநாள் தானும்
காமென்ற கருவூமத்தன் சாற்றில் போடு
கனமான வச்சிரமாங் குகையி லிட்டுக்
கூமென்ற மேல்மூடி சீலை செய்து
கூசாதே ஊதிடவே குருவு மாமே. 788

## கோமேதகக் குருவால் நீங்கும் நோய்கள்

குருவெடுத்துச் சூதத்தில் ஓட்டி னுக்கால்
குமுரியேதான் வெண்ணையாகுங் கரியி லாடும்
திருவெடுத்த லட்சுமிதான் சிறந்தி ருப்பாள்
உடலதுவும் செழுங்கஞ்சம் போலே யாகும்
பருவெடுத்துப் பணவெடைதான் பாவி லுண்ணப்
பாண்டோடு சோகைபோமே பித்த கபமும்
திருவெடுத்துச் சுரமோடு அழலை போக்கும்
தீபனந்தான் அதிகமாகும் சுவையுண் டாமே. 789

## கோமேதகச் சத்து

ருசியுண்டாம் ருத்திரனு மாகுந் தானும்
ருதந்தியான கண்ணின்நீர் தன்னை மாற்றும்
சுசியுண்டாம் இதையணிந்தால் சூட்சும புத்தி
துரிசான புத்தியுண்டாம் கோச மாகும்
பசியுண்டாம் கோமேதகம் பலமு மைந்து
பார்த்துமேதான் தெரிந்தெடுத்துச் சத்து வாங்கி
துசியுண்டாம் சூதத்தில் சத்து ஈந்தால்
சுழலாமல் ககனவழி சுறுக்காய்ப் போமே. 790

## கோமேதகச் செந்தூரம்

போமென்ற சத்தெடுத்துச் செந்தூரித் துண்ணு
போகுமேதான் நாளெல்லாம் கடிகை யாகும்
வாமென்ற வைரம்போல் உடல தாகும்
வாள்தனக்கும் வேல்தனக்கும் அழுந்தி டாது
காமென்ற கற்பாந்த கால மெல்லாம்
காயசித்தாய் அழியாம லிருக்க லாகும்
வேமென்ற புலன்கள் வெந்து சாடிப் போகும்
விண்ணோர்கள் தங்களோடு மேவ லாமே. 791

மேவுமென்று பாட்டனுர்தி ருமூல நாதர்
வெகுகோடி சித்தருக்கு வுபதே சித்தார்
மேவுமென்று காலாங்கி அய்யர் தாமும்
விரைந்தழைத்துந் தனுக்குபதே சித்தார் மெத்த
மேவுமென்ற டியேனுமனே கம்பேர்க் குத்தான்
விடுவிக்கும் குளிகைகட்ட விவரம் சொன்னேன்
மேவுமென்றே ழுகண்டங்கள் பாவாச் சொல்லி
மேதினியோர் தங்களுக்கு விளம்பி னேனே. 792

(அ.பொ.) :—பாவாச்சொன்னேன்=செய்யுளால் கூறினேன்.



## அறிவு கூறல்

விளம்பினேனே அழிந்துபிறந் தொழியும் தொழிலாய்
விழுந்தழியா தெழுந்தருளி யமையா வின்பம்
புளம்பினேனே பொழிந்தபெருங் கருணை முகிலே
பூதலத்தில் நின்றுதுயர் போக்க நன்று
நளம்பினேனே பிரபலவாமத் திகளெல் லாம்தான்
நயந்தசாக்கி ரத்திலொரு நீராந் தன்மை
பளம்பினேனே பலப்பலவாம் நெறியெல் லாந்தான்
பரந்துபோர்வு ளமின்றிதானும் பணிதல் செய்யே. 793

(அ.பொ.):—அழிந்து=இறந்து; புளம்பினேன்=புலம்பினேன்; பிரபலம்=யாவரும் அறிந்த; வாமத்தி=வாமாசாரப் பூசனை புரிவோர். ஒருநீராம்=ஒத்த தன்மைத்தாம்; பளம்பினேன்=விரித்துரைத்தேன்.

செய்யவேதான் மனத்தாலும் சொல்லி னுலும்
சீரறிவாய்த் தோற்றிவைக்கும் தெளிவாம் போதம்
எய்யவேதான் எரிசுடுதல் தன்போ லுந்தான்
ஏற்றமான புகையிலெழும் கனலே போலும்
உய்யவே நூ லோதிமுடி பொருளைக் காணு
முதியநூல்ப லவுணர்ந்து பிணங்கும் பேய்கள்
கொய்யவுமே யானைகண்ட குருடர் போலும்
கொள்கையாக நூலோதும் குறிகள் தானே. 794

(அ.பொ.):—சீர் அறிவாய்=ஒழுக்கமும் உணர்வுமாய்; போதம்=ஞானம்; எரி=தீ; முடிபொருள்=தலைமையான (மெய்ப்) பொருள்; பிணங்கும்=மாறுபாடடையும்.

தானென்ற கலைபகரும் சமயத் தோர்கள்
தருக்கித்து வத்துவைக்கண் காணு மென்று
ஆனென்ற குருபரனுக் கன்பு செய்து
அரனுருவைப் பெறவிருக்கும் தன்மை யென்று
வேனென்ற வின்புறுநற் கனிபா ரேநீ
விருத்தங்கா வுறவிருப்பா ரியல்பு போலும்
ஆனென்ற அருவாய்ப்ப ரந்தொன்று தானும்
அஞ்சாதே சிலையுருவைக் கொள்வார் பாரே. 795

(அ.பொ.) :—தருக்கித்து=வாய்ப்போர் செய்து; அருவாய்=உருவமில்லாததாக; சிலைஉரு=படிமம்.

கொள்ளவுமே குருப்பேய்கள் கூறுந் தன்மை
குருடருக்கு குருடர்நெறி கூறல் போலும்
பொள்ளவுமே போகாதத் துயரில் மேவிப்
புகுமாறு செய்துவைப்பார் பொல்லாக் காமி
உள்ளவேயோர் ஆலயத்துள் ளேயே தானும்
அள்ளவுமே ஆகாசம் சேர மாறி
அத்தனடி பணிவார்கள் இதமாய்த் தானே. 796

(அ.பொ.) :—நெறி=வழி ; போகாத=நீங்காத ; காமி=ஆசையிக் குடையோன் ; அத்தன்=ஈசன் ; இதம்=ஹிதம்=நன்று.

காணவுமே ஆருதா ரத்தைத் தானும்
கண்டிருப்பார் கலைகள்ப திறுந் தானும்
ஊணவுமே வுலகனைத்தும் உதவி பேச்சு
உற்றுமேதான் பொருளொன்று மறிய மாட்டார்
ஆணவுமே அன்னையொடு பிதாவைத் தானும்
அருளுடைய திருமேனி தன்னைக் காணர்
நாணவுமே ஞானமய மாகி நின்று
நாடாத மனமாகி நவில்வார் காணே. 797

காணவேவா னோர்வேத கீதா தியாலும்
கண்டறியார் அனுதியாந்தா ளைத்தா னுந்தான்
தோணவுமே தொழுதலாலே விழலாம் வாறு
சுழலுவார்தாம் மாமாயைத் துயரில் வீழ்வார்
ஆணவேஆ வியைநின்று ருக்கும் ஞானம்
ஆராத வமுதுண்டு அளிக்கும் ஞானம்
பாணவுமே குழிதூர்கள் படுகும் கானம்
பகுத்தறியா மாந்தருக்குச் சித்தி பொய்யே. 798

(அ.பொ.) :—வானோர்=தேவர் ; வேதகீதம்=சாமவேதம் (மறைகளும் தோத்திரப் பாடல்களும்) ; அனுதி=தோற்றங்கொண்ட காலத்தைக் காணவியலாதது ; தாள்=பாதம்.

## சிவப்பு'இரத்தினப் பிறவி

சித்தியாம்சி வப்பிரத்தி னப்பிறப்பு கேளு
சுவர்க்கமத்தி பாதாள மூன்று லோகம்
வெற்றியான பேருடைத்தாய் விளங்கப் பட்டை
மிக்கமகா மாண்புடைய அசுரன் தானும்



புத்தியான வலாசூரன் என்று பேரு
பூருவத்தில் முக்கண்ண மூர்த்தி யான
பத்தியமாம்ப ரமேசுவரன் தன்னை நோக்கி
பாங்குடனே மகாதபசு பண்ணி னனே. 799

(அ.பொ.) :—மாண்புடைய = பெருமை பொருந்திய ; சிவப்பு ரத்தினம்=மாணிக்கம்.

பண்ணவேப ரமேசுவரன் பிரசன் னமாகி
பாங்காக முன்வந்து நம்மை நோக்கி
தண்ணவுமே தபசு பண்ணும் கரும மென்ன
சாம்பசிவம் தயவோடே தன்னைக் கேட்க
வண்ணவுமே வலாசூரன் தொழுதி றைஞ்சி
வாய்புதைந்து வலாசூரன் யேது சொல்வான்
எண்ணவுமே எனக்குத்தான் போர்மு னைதன்னில்
எவராலும் கொல்லாத வரமேன் றனே. 800

(அ.பொ.) :—பிரசன்னமாகி=எதிரே தோன்றி ; கருமம்=(வேலை) உள்நோக்கம் ; போர் முனை=யுத்த அரங்கம்.

கொல்லாத வரம்வேணும் எவரா லுந்தான்
கூர்ந்தவூழ்ப்ப யனுலும் இறந்தா லுந்தான்
நல்லதாய்ச்ச ரீரமெல்லாம் நவமணி யாக
நலமாக வுற்ப விக்க வென்று கேட்டான்
வல்லவேவீ சுவரனுந்தான் வரங்கள் கொடுத்து
மறைந்துமேதான் கயிலைக்குச் சிவனார் போனர்
தல்லாத ஈச்சுவரன் வரத்தைக் கொண்டு
சமர்த்தனாக தன்விடுதிப் போயி னனே. 801

(அ.பொ.) :—கூர்ந்த=கோபித்த ; உற்பவிக்க=தோன்ற ; சமர்த்தன்=திறமைசாலி.

போயினபின் வியாழதேவன் தன்னி னேடே
போராடி பெரும்போர்தான் செய்யும் போது
தாயினபின் தரிக்கொடாமல் தானும் பின்பு
சரிகியேதான் முதுகிட்டு வோடிப் போக
தேயினபின் தேவேந்தி ரன்வந் தெதிர்த்து
தடுக்கிடவே போராட்டம் செய்யும் போது
நீயினபின் வலன்முன்னே நில்லா மல்தான்
நீக்கான வசுரன்வ ரம்பெற்றுள் ளானே. 802

(அ.பொ.) :—வியாழதேவன்=(தேவ) குரு=பிருகஸ்பதி.

அசுரன்வ ரப்பிரசா தியென்று சொல்லி
ஆகாது விவனையொன்ருல் கொல்வ தற்கு
உசுரனென்று வலனைத்தான் கொல்ல வென்ருல்
உபாயத்தால் செபிக்கவேதான் வேனு மென்று
நசுரமாக யோசனைகள் பலவும் பண்ணி
நலமான தந்திரமே யொன்று செய்து
தெசுரனென்ற தேவேந்திர வானேர் தேவர்
சேரவுமே வலவனண்டை வந்திட் டாரே. 803

வந்துமே வலனைத்தான் தழுவிக் கொண்டு
மகாபராக்கி ரமசாலி மூன்று லோகம்
பந்துமே கீர்த்திபரி மளிக்கு தென்று
பலப்பலவாம் பெருமைசொல்லி வாச வன்தான்
உந்துமே உனக்குவரம் என்ன வேணும்
உகந்துமேதான் கேட்டதெல்லாந் தாரே னென்ருர்
நிந்துமே நெடிதான கையைக் கொட்டி
நிமிர்ந்துதான் காலத்தி டிநேராய்த் தானே. 804

நேரான விடிநுகர்ந்த முழக்கம் போலே
நகைத்துமிக வென்னசொல்வான் நல்ல செயல்தான்
நாரான வுந்தனுட நாட்டந் தானும்
நல்லகாரி யமென்னவெனும் யுத்தம் செய்து
வேரான வெற்றிப்பி ரதாப மெல்லாம்
மிடுக்கான போராட்ட மெல்லா முணர்ந்தே
சீரான சிவன்முன்னுள் என்ற னுக்குச்
சித்தமகிழ்ந் தேவர்தான் தந்திட் டாரே. 805

(அ.பொ.):—நாட்டம்=நோக்கம்.

தந்திட்டார் என்றனுக்குச் சிவன்முன் ளுள்தான்
சாகாத வரம்பெற்றேன் ஒருவர் தன்னுல்
முந்திட்ட வுனக்குவரம் என்ன வேணும்
உற்றுமேதான் கேட்டாக்கால் தாரே னென்ன
கொந்திட்ட கேட்டவரம் கொடேனே யாகில்
குருரமான சமர்களந்தன் னில்செுன் றேதான்
சுந்திட்டு ஓடினவன் தோடந் தானும்
சூழ்ந்தொக்கும் என்றுமேதான் சொல்விட் டானே. 806

(அ.பொ.):—குருரமான=கடுமையான; சமர்=போர்.



சொல்விடவே தேவேந்தி ரனிருடி தேவர்
சிவன்தன்னை யர்ச்சித்துப் பசுபதி யாகம்
வெல்விடவே யாகங்களுந்தான் விரும்பி வந்தோம்
வேண்டியதோ வெங்களுக்கு யாகத் தில்தான்
பலியிடவே பசுவாக வரவேண் டுமென்று
பதஞ்சலித்துக் கேட்டிடவே மகிழ்ச்சி யாகி
வல்விடவே வலனுந்தான் பூரு வத்தில்
மதிப்பான ததீசிமகா முனியுந் தானே. 807

ததீசிமகா முனியெலும்பைக் கழற்றி ஈந்து
தாக்கான கீர்த்திபெற வில்லை யோதான்
இதீசியுமாம் இறப்பதுவு மிழிவு மாகும்
ஈவதுதான் இயற்கையது பெருமை யாகும்
அதீசியாக யாகத்தில் வருவோ மென்ன
அடங்கலுமே மகிழ்ச்சியுமே தான டைந்து
விதீசியாக வியாழதேவ னுமப்போ தானும்
வேதவிதிப் படியாகம் செய்திட் டாரே. 808

செய்திடவே வலன்தானும் மனேவாக்குக் காயம்
சிறக்கவுமே வொருமித்த மனத்த னுகி
தெய்திடவே துணிவதனுல் பசுவு மாகி
திடாகரித்து ஆத்துமாவை யெண்ணு மல்தான்
பைத்திடவே பரிசுத்த மனமு மாகி
பண்பாக முன்சொல்த வருமல் படிக்கு
கெய்திடவே கயிற்ருலே கட்டா மற்ருன்
கட்டிட்டார் வாக்கான பாசத் தினுலே. 809

(அ.பொ.):—வாக்கு=சொல்; பாசம்=கயிறு (பிடிப்பு).

வாக்கான பாசத்தால் நிற்கும் போது
மாய்த்தார்கள் வலனுயிரை தருப்பை யாலே
ஊக்கமான வலனுயிர்தான் விடுகும் போது
உயர்ந்திட்ட வானவர்கள் பூக்கள் மாரி
தாக்காகத் தான்பொழிய விமான மேறி
சத்தியலோ கந்தனிலே சாரச் சீவன்
மீக்காக மோட்சந்தா னடைந்து போச்சு
மேருகிரி தனில்செய்த யாகந் தானே. 810

யாகந்தான் வேதவிதிப் படியே செய்து
அவயவங்கள் வாங்கியுமே வேள்வி செய்ய
மோந்தான் முடிந்தபின் பாட்டி ரத்தம்
விழுந்தவிடம் மாணிக்கம் விளைய லாச்சு
பாகந்தான் வலனுடைய பல்லு தானும்
பாங்கான முத்தாகப் பரவிப் போச்சு
பூகந்தான் வலனுடைய பிச்சு தானும்
போரான வைடூரி யமாச்சு தானே. 811

(அ.போ.) :—பிச்சு = பித்தாசயம், பித்தகோசம், பித்தநீர் முதலியவை.

ஆச்சுதேதா னசுரன்மெய் ரத்தின மாக
அடங்கலாகத் தானிருந்த படியி னாலே
தேச்சுதேதே வர்சித்தர் இராக்க தரும்தாம்
சீறியதோர் முனிகளோடு தமக்குத் தாமும்
பாச்சுமததான் பசுக்கிரந்தி தன்னுக் குள்ளே
பங்குவிதம் முன்போலே போகா மற்றுன்
நாச்சுதேதான் ரத்தினங்கள் ஆன தாலே
நவின்றெருவர்க் கொருதர்தாம் சண்டை யாச்சே. 812

சண்டைதானே பங்குவிதம் போகா மற்றுன்
தனித்தொன்றைத் தானெடுத்தெ டுத்தெ றிந்து
திண்டையாகத் திக்குகளில் எறிய வேதான்
சிறப்பாக பூமிதனில் தானு திர்ந்து
உண்டையாக உதிர்ந்தவிடம் தோற்ற மாச்சு
உயர்ந்ததோர் ரத்தினங்க ளாகத் தானும்
விண்டையாக வலனுடைய உடலந் தானும்
மேதினியெல் லாமதிக ரத்தினந் தானே. 813

## சிவப்பு ரத்தினம் தோன்றுமிடங்கள்

ரத்தினந்தான் மதாத்திரமாய் வேறே யொன்று
நாடியதோர் தோற்றமது சொல்லக் கேளு
ரத்தினந்தான் நைமிசாரண் ணியமா கத்தான்
நண்ணியமாம் புண்ணியவ னத்தி லேதான்
ரத்தினமாம் பண்ணியபூ மிதன்னில் தானும்
நற்றதிருப் பாற்கடல்மு தலான கடலும்
ரத்தினந்தான் கங்கைமுத லான ஆறு
நடியாக மகாமேரு பர்வதம் காணே. 814



காணவேதான் இமயமுதல் பர்வ தங்கள்
கனிந்துமேவி துகளிலுமுற் பத்தி யாகும்
வாணவேதாள் வலன்சிரசி லேயி ருந்த
மதிப்பான திவ்வியரத் தினத்தைத் தானும்
தோணவுமே மகாமகிமை யான தாலே
சூரியனுர் அதையெடுத்துக் கொண்டு போக
ஆணவுமே ஆகாயம் போகும் போது
ஆகாய மெலாம்சோதி பிரபை யாச்சே. 815

சோதியாக மின்னல்போல் ஆகா யத்தில்
சூரியனு டகைதனக்கும் ஒளியு மாக
ஆதியாக அசுரருக்கும் இந்திர னுக்கும்
அதுட்டியாக பெரும்போர்தான் தொடங்கும் போது
நாதியான இராக்கதரெல் லார்க்குந் தானே
இராசத்து வமானதொரு ராவணன் வந்து
பூதியான இந்திரனைப் பிடித்துப் போக
போகின்ற சூரியனின் புகழைக் கேளே. 816

சூரியனை ராகுவென்போன் பரிவேட் டிக்க
சூரியகை ரத்தினத்தை வீசிப் போட
ஆரியனும் அந்தரத்தி னமுமே தானும்
அழகான சிங்களத்தே சவாவி தனில்தான்
பூரியனும் சொற்பிரகா சத்தைப் போலே
போன்றிருக்கும் நதியதுவித் தீர ணந்தான்
காரியனும் அகலமுமா ழமுந்தான் நீளம்
கற்பகத்த ருசூழ்தனில் போட்டிட் டாரே. 817

போடவுமே சூரியனும் விட்ட மணியும்
போரான மடுவுதனில் வீழ்ந்த போது
காடவுமே காந்தியொடு கனமு மாகி
களங்கில்லா நதியில்வீ ழமாம ணிதானும்
வீடவுமே வீழ்ந்தமணித் திவலை சிந்தி
மிக்கவுமே நால்பிளவாய்ப் நரிந்து தானும்
நாடவுமே நான்கிடத்தில் வீழ்ந்து தானும்
ரத்தினமா ணிக்கமுற்பத் தியேதா னுச்சே. 818

## மாணிக்கம் தோன்றும் நாடுகள்

உற்பத்தி நாடுகளை யுரைக்கக் கேளு
உத்தமமாம் சிங்களநன் னடு மாகும்
கற்பத்துக் காளர்பு னமிரண் டாவது
கனத்தவத்தி ரமென்பதுதான் மக்க தேசம்

முற்பத்து மூன்றுந்தான் பட்ப மாகும்
முனித்ததும்பு ருதேசனுலாம் பட்சம் தானும்
இற்பத்தி நான்குதேசத் திலுமுற் பத்தி
ஏற்றமாணிக் கமென்பதுவே தானும் தானே. 819

## சிவப்பு ரத்தின குணங்களும் பெயரும்

தானான சிங்களதே சத்து மணியும்
தளுக்கான குருதிவண்ண மிதற்குப் பேர்தான்
பானான பத்மார்க்கம் என்று பேராம்
பாங்கான இதுமிகுதி யுத்தமோத் தமமும்
வானான ரசக்கிரியை தனக்குத் தானும்
மாசற்ற வுத்தமமென் றறிந்து கொள்ளு
கானான காளபுரத்துத் தோற்ற முற்ற
கனத்தரத்தி னம்குருவிந் தமென்று சொல்லே. 820

(அ.பொ.) :—குருதி=இரத்தம் ; ரசக்கிரியை=இரசவாதம்.

சொல்லவென்ற நிறந்தானும் ஏம மாகும்
சூழ்ந்தவந்தி ரமக்கதேசத்து ரத்தி னம்தான்
நல்லவென்ற சவுகந்தி யென்று பேராம்
சார்ந்தநெட்டி லிங்கத்த ளிர்போல் காணும்
துல்லவென்ற தும்புருதே சத்து மணியும்
சுழல்நீல நிறமாகத் தானி ருக்கும்
நில்லென்ற நீலகந்தி ரத்தினப் பேராம்
நேர்ந்தபத்மார்க் கமுத்தமந்தா னென்றே தானே. 821

என்றதொரு குருவிந்தம் சவுகந் திரெண்டும்
எளிதான மத்திபமாங் குணமு மாகும்
துன்றதொரு தும்புருதே சத்தி லான
சுழலான நீலகந்தி அதம மாகும்
புன்றதொரு மாணிக்கம் பூமிபே தத்தால்
பேராக நாலுவகை ரத்தின மாச்சு
பன்றதொரு பத்மார்க்கத் தினுட நிறந்தான்
பதுமம்செந் தாமரைப்பூப் போலாங் காணே. 822

(அ.பொ.) :—பேதம்=வித்தியாசம்.

தாமரைப்பூ போல்கருங்கா லிக்கட் டைதான்
தணல்போலும் சகோரபட் சிகண் ணைப் போலும்
கோமரையாங் குயில்கண்செங் கழுநீர் இதழ்போல்
குணமுண்டாம் சிங்களதே சத்து மணியும்



தோமரையாம் சூதமது கணத்திற் கட்டும்
சுத்தமான பரிசுத்த மென்று சொல்லு
சேமரையாம் சிங்களதே சத்து ரத்தினம்
செயலதுதான் மாணிக்கத் திறந்தான் பாரே. 823

திறமான இரண்டாகும் ரத்தி னந்தான்
செயலான காளபுரத்துத் தோற்ற முற்ற
குறமான குருவிந்த மென்ற ரத்தினம்
குளந்தானும் செந்தூரம் போலேயாகும்
கரமான இரண்டாகும் ரத்தி னந்தான்
கரமான காட்டாத்திப் பூப்போ லுந்தான்
கதிப்பான குண்டுமணி நிறமும் போலும்
மறமான முருக்கம்பூப் போலுந் தானும்
மாணிக்கம் குருவிந்த மென்று சொல்லே. 824

சொல்லுந்தான் சவுகந்தி யான ரத்தினம்
சுயமான குணந்தானும் சொல்லக் கேளு
மெல்லுந்தான் கொம்பரத்துச் சாயந் தன்னில்
மிக்கான நிறம்போலும் குங்கு மந்தான்
கல்லுந்தான் கரைகின்ற குழம்பு போலும்
கனத்ததோர் முயலினுட குருதி போலும்
தல்லுந்தான் சவுகந்தி யான ரத்தினம்
சாயதென்று மூன்றான ரத்தின முமாமே. 825

ஆமென்ற நாலான ரத்தி னந்தான்
அடைவான நீலகந்தி தும்புரு நாடு
நேமென்ற நீலோற்ப லயிதழைப் போலும்
நொய்யதாக மடிந்துபோமே இரும்பு போலும்
காமென்ற கடுசான நீலகந் திமணி
காணுமேதான் நீலகந்தி நீலம் போலாம்
தோமென்ற சோதனைதான் அறிய வேண்டில்
சுத்தமண்பாத் திரத்தில்தான் சொல்லக் கேளு. 826

பாத்திரத்தில் வைத்துமேக டுவெய்யில் தன்னில்
பழுத்ததுவோர் நெருப்பின்மேல் வைத்தா லுந்தான்
கோத்திரத்தில் கொஞ்சநிற மாகக் காணும்
குளிரான வுதயத்தில் இரண்டாஞ் சாமம்
நேத்திரத்தில் மெத்தவுமே ஒளியாய்க் காணும்

நிடுக்கான மத்தியானம் மயக்கும் வண்ணம்
சாத்திரத்தில் சாயுங்கா லந்தன் னிற்ருன்
சாய்ந்துமேவு திக்கின்ற பரிதி காணே. 827

காண்பொழுது புகுமுன்னே செம்மை'வண்ணம்
காரிரண் டத்தமித்தால் குழிதா மரைபோல்
காண்பொழுது ராத்திரியில் முதல்சா மத்தில்
தணிக்கமலர் விண்மீனைப் போன்றி ருக்கும்
ஆணர்த்த இரவினில்க ருநெய்தல் பூப்போல்
அடுத்தவைக ரைகோமே தகநி றமுமாகும்
வான்விடியும் நேரத்தில் வைடு ரியநிறமும்
வசையாமல் இப்படித்தான் சோதிப் பாயே. 828

## நவரத்தினம் பிறக்கும் காலம்

சோதித்த வைகாசி!ஆனி ஆடி
சுத்தமான ஆவணி புரட்டா சிதானும்
ஆதித்த ஐப்பசியோ டாறு மாதம்
அடங்கலாய்ந வரத்தினம்பி றக்குங் காலம்
காதித்த கார்த்திகையும்ம ார்கழி தன்னேடு
கார்காலம் நீங்கிதைமா சிபங்கு னியும்தான்
பேதித்த சித்திரையும் தேய்வு காலம்
பிறக்கும்தோற் றமுன் ஞறில் தானு மாமே. 829

## மாணிக்க'ரத்தின குரு

உற்பத்தி மாணிக்கம் தெரிந்தெ டுத்து
உருசியான குதிரைதனின் கோம யத்தில்
முற்பத்தி மூன்றுநாள்தாம் ஊற வைத்து
மீறியதோர் வெந்நீரில் கழுவிப் போட்டு
இற்பத்தி எருக்கம்பால் தன்னில் தானும்
இதமாக மூன்றுநாள்பா வனையே செய்து
அற்பத்தி அகலிவிட்டுப் புடம்மூன்று போட
ஆதியான மாணிக்கம் குருவு மாமே. 830

குருவெடுத்துப் பணவெடைதான் பாவி லுண்ண
கொடிதான தீபனந்தான் மிகவுண் டாகும்
கருவெடுத்து விந்துவது மிகவே ஊறும்
கடிதான பெருக்கமுண்டாம் வெப்ப வாதம்



திருவெடுத்து சிலேத்துமத்தைச் சாடிப் போகும்
சீறுகின்ற பூதவேதா ளங்க ளெல்லாம்
தருவெடுத்து ஊரைவிட் டோடிப் போகும்
சருவபாவத் தையெல்லாம் போக்குந் தானே. 831

## மாணிக்க ரத்தினச் சத்து

காணவுமே உடலதின்குற் றத்தைப் போக்கும்
கடிதான நோயெல்லாம் காணுப் போகும்
தோணவேமா ணிக்கம்தெ ரித்தெ டுத்து
சுறுக்காக பலமூன்று தூக்கிக் கொண்டு
வேணவுமே வெடியுப்பு நீரில் தானும்
மூன்றுநாள் ஊறவைத்துக் காரஞ் சேர்த்து
பூணவேகு டோரியோர்கா செடையே போடு
பிரளநன்ருய் உருக்கியுமே சாய்த்தி டாயே. 832

## மாணிக்க ரத்தினச் செந்தூரம்

சாய்த்திட்ட சத்தெடுத்து நட்பதனில் சாய்த்து
சாரணைதன் குளிகைக்கு ஈந்திட் டாக்கால்
மாய்த்திட்ட மாணிக்கப் பிரபை யாகும்
மதிப்பான அண்டமெலாம் வெளியாய்க் காணும்
காய்த்திட்ட அத்திபோலே தொழிலாம் மெத்த
கனகமிட்டுச் செந்தூரம் செய்தே யுண்ணு
நாய்த்திட்ட நவலோகம் கோடிக் கொன்று
நாதாக்க ளறிவார்கள் ரத்தினப் போக்கே. 833

## ஞானம் கூறல்

போக்கான புத்திவரும் படிதா னன்றி
பெருத்துடலும் வருமளவும் கத்து கின்ருய்
ஆக்கான ஆகாத ஊனைத் தின்று
அடியகலும் படிதானும் தெரியா தாகும்
தூக்கான தூக்குழித்தார் கைதனக் குத்தான்
தொழிலாகச் சொல்லியுமே செவிக்கின் பத்தை
பாக்கான பாவையரின் மொழியின் வார்த்தை
பண்பதனில் துயருற்றுப் படுகின் ருரே. 834

படுகின்ருர் உடலையென்றும் உயிர்விடும் போது
பாங்கான உணர்வின்றி நழுவல் கொண்டு
கடுகின்ருர் கடுகின்ற வமரர் பூமி
கலைபலவும் தான்மறந்து அழியும் நெஞ்சம்

மடுகின்ருர் தெளிவின்றி மயங்குகின்ருர்
மதிப்பான குருபரன்தன் அருளால் மேவி
அடுகின்ருர் அறுதியிடத் தெளிவா ரில்லை
ஆருயிராய் வினிலலை கின்ருர் தாமே. 835

அலைகின்ற ஞானத்தி லமுந்தி நில்லார்
ஆய்ந்துநான்ம றைதேடும் பொருளைக் காணுர்
துலைகின்ருர் பசியும்போம் பாவம் போகும்
துயரம்போம் முடிந்தபொருள் தன்னில் சேர்க்கும்
பலைகின்ற பல்லாயு ரவாண்டு காலம்
பலகோடி அண் டத்தா லெல்லா ருந்தான்
தலைகின்ற பொருள்தேடிச் சார்ந்து நின்று
சாகாமல் காயசித்திப் பண்ணி ஞரே. 836

காயசித்திப் பண்ணியேஞா னவாஞ ஞர்தான்
கலந்திருவர் கரணமது ஞான மாச்சு
தேயசித்திப் பூமாலைச் சார்ந்த ஞான
திரமான மனஞ்செயித்தால் ஞான மாகும்
ஏயசித்தி யெவ்வுயிர்க்கு முயிராய் நின்ற
இறைவன்பொற் ருள்தனையே இருத்தல் செய்வோர்
வேயசித்தி வருமறியா வேந்தன் தன்ஞல்
விளைத்ததெல்லாம் விண்ணப்ப மென்று கர்ணே. 837

காணவுமே எம்பிரான்கண் பட்டார்க் கன்ருேர்
கடுந்தேகம் வெளியாக விருப்ப தென்ருேர்
மாணவேமா யார்புதத்திற்கு வஞ்சா நின்ருேர்
மதிப்பான சித்திபெற்ற முத்த ஞரும்
தோணவுமே வரும்பாசக் கட்ட றுத்துத்
துயர்தீர்ந்த நிர்மயர்க்கு சொருபா னந்தம்
வாணவுமே வாசியிலே மேலு மாவான்
மதிப்பான யோகியென்று மருவிக் காணே. 838

## வைடூரிய ரத்தினத் தோற்றம்

மருவிநின்ற வைடூரி யதோற்றங் கேளு
மதிப்பான கற்பாந்த காலந் தன்னில்
தருவிநின்ற கடல்தானே பொழிந்து பொங்கி
தான்வழிந்த சமீபனுள் தன்னில் தானும்



உருவிநின்ற வைடூரி யந்தோற் றமாகும்
ஒளிவுதான்அ னேகவண்ண மாயி ருக்கும்
திருவிநின்ற சிங்கள நாட்டு வைடூ ரியந்தான்
சிறந்தவுற்பத் திதனைக்கப் பால்தான் கேளே. 839

கேளப்பா தூரத்தில் நவகண் டத்துள்
கெடியான விந்தகண்டந் தன்னில் தானும்
வேளப்பா விடுனசிய மென்னும் மலைதான்
மிக்கதுவோர் கோர்கமலை மக்க நாடு
கோளப்பா கொங்கணதே சத்தில் தானும்
குறிப்பான கோசலதே சத்தில் தானும்
பாளப்பா பாரசீக நாட்டில் தானும்
பாங்கான கடலருகே பண்பாய்த் தானே. 840

பண்பான வலாசூரன் பசுவாய் ஆன
பாங்கான தேவர்கள் மல்லுக் கட்டி
முன்பான வபையென்ற முலைப்பை யைத்தான்
முனிந்துமேதான் புட்டெறிந்து போட்ட நாலே
துண்பான முன்சொன்ன நாடுக ளில்போய்
துடித்துமேதான் விழக்கார்வல் காலந் தன்னில்
இன்பமாகப் பாடினதோர் முழக்கந் தன்னில்
இழுத்தெறிந்த முலைப்பைவை டூரிய மாச்சே. 841

## வைடூரிய வேறுபாடுகள்

ஆச்சேவை டூரியத்தின் வண்ணம் மூன்று
அதனில்மு தலானநிறம் எப்படியோ வெனில்
மூச்சேமூங் கிலிலைபோல்வண் ணத்தா ஞரும்
மொழிந்தரெண்டாம் ரத்தினத்தின் வண்ணங் கேளு
மாச்சேம யில்கொண் டை நிறச்சுட்டு போலும்
மருவியுமே காணுமேமூன் ருந்தி றந்தான்
பூச்சேபூ னைக்கண் வண்ணம் போலும்
போராகத் தானிருக்கும் பூண்டு பாரே. 842

பூண்டுமேதான் உத்தமந்தான் புகலக் கேளு
போரான கனசகிதத் தெளிவு மாகி
தூண்டுமேசூ ரியனினிநல் லொளியே போன்றும்
சுரப்பில்லா மெழுகூர்ந்து தானி ருக்கும்

ஊண்டுமேனி எங்குமொரு நீரோட் டந்தான்
உத்தமமாம் குணமென்றே வுரைக்க லாகும்
காண்டுமேய ணிந்தருச்ச ஊசெய்தே உண்டால்
கவுத்துபமாம் மணியென்றே கருத லாமே. 843

(அ.பொ.) :—கவுத்துவம்=திருமாலின் கழுத்திலுள்ள மணி மாலை.

கருதவேதித் தியசோப னமகிழ்ச் சியாக
கடமுடனே தானிருப்பார் மத்திபந் தான்கேள்
எருதவேய முதத்திலெப்ப டியிருக் குமெனில்
ஏற்றமான ரவிச்சாயல் மிக்கா கத்தான்
கருதவுமே கருப்பத்தில் கல்மண் தானும்
கெட்டியாக கனமில்லா தேயி ருத்தல்
விருதவேமே விருக்கக்கா யமது காணில்
மேகம்போல் படலமது இருத்தல் தானே. 844

(அ.பொ.) :—சோபனம்=சிறப்பு ; சாரு ; திருவிழா. கருப்பத்தில்=மத்திய பாகத்தில்.

விழுந்திடுதல் மேடுபள்ள மாயி ருத்தல்
மிக்கான தரிப்பதுவாய் தானும் காணல்
கழுந்திடுத லாகுமிந்த வைடு ரியத்தை
கண் ணிலேதான் பாராது மிகவும் நன்று
தழுத்திடுதல் சாதிவைடு ரியத்தைத் தானும்
சரக்காக வுரைத்துமதைப் பார்த்திட் டாக்கால்
முழிந்திடுதல் உரைக்கல்லில் உரைத்துப் பார்த்தால்
முன்னிருந்த நிறம்போலும் உரையில் பாரே. 845

## வைடூரிய சுத்தி

உறைதனிலே முன்னிருந்த நிறம்போல் கண்டால்
உத்தமமாம் சாதிவைடு ரியமு மாகும்
திறைதனிலே சிறந்தவைடு ரியத்தைத் தானும்
தேசியான மூத்திரத்தில் ஊற வைத்து
நறைதனிலே பரிதியிலும் காயப்போட்டு
நலத்தமறு நாளில்தான் பூசினிச் சாற்றில்
துறைதனிலே ஒருநாள்தான் ஊற வைத்துத்
சுத்தியான வெந்நீரில் கழுவிப் போடே. 846

(அ.பொ.) :—தேசி=கழுதை.



## வைடூரிய பற்பம் (நீறு)

கழுவியுமே சிறுபீளைச் சாறு தன்னில்
கலந்துமேதான் மூன்றுநாள்கள் ஊற வைத்து
வழுவியுமே வச்சிரமூ சைக்குள் ளிட்டு
வைத்தூது வுலைதனிலே பற்ப மாகும்
உழுவியுமே பணவெடைதான் தேனி லுண்ண
உயர்ந்ததுவோர் பித்தமதை தணியச் செய்யும்
அழுவியுமே அறிவுண்டாம் ஆயுள் நீளும்
அண்டொண்ணு பலமுண்டாம் விருத்தி யாமே. 847

## வைடூரிய ரத்தினச் சத்து

விருத்தியான மலஞ்சாடும் தீப னந்தான்
மிக்கவுமே வுண்டாகும் வித்தை யுண்டாம்
கீர்த்தியாக பலமிரண்டு எடுத்துக் கொண்டு
கெட்டியாக முன்போலே சத்து வாங்கி
தீர்த்தியாம்சூ தத்தில்சா ரணையே செய்து
தீர்க்கமாக கனவழி யோடி மீண்டால்
ஆர்த்தியாக அடுக்கிலுள்ள அதிசய யங்கள்
அடுக்காக முன்காணப் பண்ணுந் தானே. 848

## வைடூரிய ரத்தினச் செந்தூரம்

பண்ணுமேதான் தங்கமிட்டுச் செந்தூ ரித்து
பணவெடைதான் தேனிலுண்ணு பத்தி யமாக
எண்ணுமேதான் இளமையாக விருக்கச் செய்யும்
இடிதானும் மேல்விழுந்தால் துண்டாய்ப் போகும்
திண்ணுமேதான் தினகரன்போல் உடலு மாகும்
சிவயோக நாட்டமெல்லாம் தெரிந்து போகும்
அண்ணுமேதான் அரன்பாதம் வெளியாய்க் காணும்
ஆலமுண்டான் ஆட்டமெல்லாம் பார்க்க லாமே. 849

## சைவத்தின் உட்சமயம் கூறல்

பார்க்கவேசை வசித்தாந்த மான தைத்தான்
பதினாறு வகைப்பட்ட நிர்ண யந்தான்
ஆர்க்கவேய தனில்ரெண்டு சமயத் துள்ளும்
அறுவகையாம் சைவரேதாம் தங்க ளாகும்

கார்க்கவேபா சுபதங்க ளாகும் முகமாம்
காரியமாம் வாமமொடு வயிர வன்தான்
சேர்க்கவேசி வாத்வைதம்சி வசம்ம வுனந்தான்
தெளிவான வுட்சமயம் ஆறுந் தானே. 850

குறிப்பு :—சைவ உட்சமயங்கள் 1. பாசுபதம்; 2. காளாமுகம்; 3. வாமம்; 4. வைரவம்; 5. சிவாத்வைதம்; 6. சிவசம்மவுனம்.

ஆறுதனில் பாசுபதந் தன்னைக் கேளு
ஆண்டுமுதற்கொண் டிறைவன்முன் னுளதே யாகும்
பாறுதனில் பலவேறு தத்துவ மான
பாங்கான ஐம்மலங்கள் தன்னை நீக்கி
வேறுதனில் வினையில்லா வமலன் பூசை
மிக்கவுமே இறைவன்பா விதயந் தன்னில்
சாறுதனில் அன்பில்லா முத்தி யென்று
சாற்றுமேதான் பாசுபதந் தானுங் கேளே. 851

காணவுமே உடலிலுள்ள எலும்பு தானும்
கனக்கவுமே சிவத்தினுட கூறு மாகும்
தாணவுமே முன்னுரைத்த நூலி லுள்ள
விவரங்க ளெல்லாம்தான் பேணிப் பார்த்து
ஆணவுமே ஆணவத்தின் அடைவு நீக்கி
அனித்தியவு டல்சடைமு டியோடொக் கநீங்கும்
தோணவுமே கருத்தருக்கும் இடந்தான் முத்தி
சுழன்றகாளர் முகமதுதான் தோற்றுந் தானே. 852

## நாயைப் பூரிக் கனல்லாமாதும்

தோற்றுமந்த வாமத்தின் சூட்சங் கேளு
சொருபசத்தி யேயனைத்தும் ஆத லாலே
ஆற்றமான சத்தியைத்தா னுரா தித்து
அனைத்துமேதான் தருமான சமைத்த வாற்றல்
வாற்றமான பொருளதுவே கொள்ளத் தன்னில்
அருள்தருமுல் லாசமுத்தி மகிழ்வே நில்லே
தேற்றமான மிவனுர்தாம் உரைத்த மார்க்கம்
தெளிந்தறிவான் வாமியென்ற தீர்க்க வானே. 853

தீர்க்கவுமே சத்தியந்தான் கர்த்தாவாகும்
சிவம்வேண்டா மாமென்னில் செப்பக் கேளு
வீர்க்கமாக வீற்றிடாத வைய மொன்றை
விளைக்குமோதான் ஒன்றுமேயும் விளையா தானுல்



மூர்க்கமான மெய்தவத்தில் சிவமுண் டாக
மிக்கான சத்தியது சிவத்தைக் கொள்ளும்
வார்க்கமான வத்துவேதான் சத்தி யாகும்
வத்துசிவம் சத்தியது மகிழ்ச்சி யொன்றே. 854

மகிழ்ச்சியான அனுதித்து வமொன்றே யெட்டாம்
மதிலெட்டெட் டறுபத்தி னுலு மாகும்
தகிழ்ச்சியான சனகரொடு நால்வர் தந்த
சாத்திரங்க ளேட்டினது விரிவு தன்னுல்
முகிழ்ச்சியாமுன் னுதியான போக மோட்சம்
முறைமுறையாய்ப் போதித்து வகுத்து வைக்கும்
பெகிழ்ச்சியாம்பின் னுதியான முத்தி நல்கும்
பேசுமேயிவ் வாயிரத்தின் பிரிவு தானே. 855

எய்தவுமே பந்தமான பாச பந்தம்
ஏற்றமான பசுபதியே முத்த னுகும்
மூய்தவுமே முந்தியாகு மனுதி ஈசன்
மூதுயிராம் போற்றுவதே ஞான பூசை
வைதவுமே வைத்தவாய்மை யினுலே செய்ய
வழுவில்லாச் சிவசம்பத்துந் தானு மாகித்
தய்தவேதான் முத்தியென்ன சிவசம யமென்ன
தானுரைக்கும் மறுசமயந் தன்னில் தானே. 856

பிரிவான சிவாத்துவிதந் தன்னைக் கூறில்
பேணியுமே சைவசித்தாந் தன் னில்தான்
அறிவான ஆதியாக சிவனே யாகும்
ஆக்கலொடு அழிக்கல்ரெண்டு வேறு மில்லை
முறிவான மோதலாகும் மிகவுந் தானே.
முன்னவுமே மிகவுறுநல் முத்தி யுண்டாம்
இறிவான இன்பதுன்பங் களுமி யற்றினுல்
இப்பிறப்பும் மரணந்த னக்குள் ளெய்தே. 857

## சூரியகாந்தம் தோற்றம்

தானென்ற சூரியகாந் தத்தின் ரத்தினம்
தன்னுடைய தோற்றம தெங்கே யென்றுல்
ஏனென்ற யிமையோர்பர் வதத்தி லேதான்
ஏற்றமான சிங்களநந் நாட்டில் தானும்
வீனென்ற விந்தமான பருவ தத்தில்
மிக்கான கங்கையிலே நவரத் தினங்கள்
பானென்ற பிறக்குந்தா னத்தில் தானும்
படிகநிற மாகவுற்ப விக்குங் காணே. 858

காணவுமே யிந்தரத்தி னத்தில் தானும்
கலந்தசூரி யகாந்தம்சந் திரநல் காந்தம்
தோணவுமே வுற்பவிக்கும் உத்த மந்தான்
சொல்லவேத கடாகமெழு கூர்ந்த தாகி
வேணவுமே பெரிதாகி வெளுப்பாய்க் காணில்
மிகுதியுந்தான் உத்தமமென் றறிந்து கொள்ளு
ஆணவுமே அடுக்காகி சிதனை யானால்
ஆகாத தொன்றுக்கும் அறிந்து கொள்ளே. 859

கொள்ளவுமே முன்சொன்ன நாட்டில் தானும்
குளுமையான சீதளகா லத்தில் தானும்
நள்ளவுமே நட்சத்தி ரகாந்தம் தானும்
நலத்துமேதான் உற்பவிக்கும் நாடிப் பாரு
துள்ளவுமே சூரியதே வன்பெண் சாதி
சுத்தமான சாயாதே விபரிதிக் கதிரை
தள்ளவுமே சகிக்கவுமே மாட்டா மல்தான்
தகப்பன்முன் வந்தும்தான் சார்ந்திட் டாளே. 860

குறிப்பு :—சமக்ஞை என்னும் மூத்த மனைவிதான் சூரியனின் வெம்மை தாங்காமல் தன் பிதாவான துவட்டாவிடம் சென்றதாகவும் சில நூல்கள் கூறும்.

வந்துமேதான் தகப்பன்தான் மயனுக்குச் சொல்ல
மயன்தானும் சூரியன்தன் மண்ட லத்தை
கந்துமேக டைச்சல்த னில்கடைந்து போட
கடைந்தபொடி நவரத்தி னவுற்ப வத்தில்
சிந்துமேதான் மலைதேசந் தன்னில் தானும்
சிதறிடவே அதிலிருந்து சூரிய காந்தம்
உந்துமதே வுற்பத்தி தானு மாச்சு
உற்றதுவோர் பரீட்சையது வுகந்து கேளே. 861

## சூரியகாந்தக் கல்லின் பரிட்சை

உகந்துமேசூ ரியகாந்தம் தன்னில் தானும்
உத்துமேதான் சூரியன்முன் காண்பித் தால்தான்
பகர்ந்துமேதான் பஞ்சுதனில் பிடித்திட் டாக்கால்
பற்றியுமே நெருப்புண்டாம் பஞ்சு தன்னில்
அகர்ந்துமேதான் ஆகையினால் சூரிய காந்தம்
அழுத்தமான உடலமது பேதித்துக் காணும்
நகர்ந்துமேதான் நவலோகம் வேதை யாகும்
நாதாக்கள் ஆட்டெல்லா மிதனில் தானே. 862



தானென்ற இதன்பெயரை நிகண்டில் தானும்
சாற்றவில்லை யென்றுசொல்லி யிதனில் சொன்னேன்
தூனென்ற சூரியகாந் தக்கல் தானும்
சூரியரத் தினஞ்சூரி யபல மென்றும்
மானென்ற மணித்தாதி புத்தோ யென்றும்
மாசற்ற பலோகியென்றும் கற்பச் சமென்றும்
நானென்ற தபனமென்றும் ரவிமணி யென்றும்
நாட்டியதோர் சூரியகாந் தக்கல்லுப் பேரே. 863

## சூரியகாந்தக் கல்லின் குணம்

சூரியகாந் தக்கல்லின் குணத்தைக் கேளு
துரிசான வெப்பகாரி யுமாய்த்தான் காணும்
வீரியமா சில்லாத சூதத் திற்கு
மிடுக்கான நிர்மலமாய் தானி ருக்கும்
வாரியான யிதன்குணந்தான் வாதந் தன்னை
மருவியதோர் சேத்துமத்தைப் போக்கி வைக்கும்
பாரியான பரன்பூசை தனக்குத் தானும்
பாத்திரந்தான் மிகுதியுமுத் தமமா மென்னே. 864

## சூரியகாந்தத்தால் தாமிரச் சுண்ணம்

உத்தமமாம் பொருள்சுத்தி திரவியந்தான்
ஓங்கியுமே இதில்வைத்து வுண்டால் மோட்சம்
தத்துவமாம் சாபவிமோ சனமு மாகும்
தயாநிதியாம் சாம்பசிவன் எனக்குச் சொன்னார்
சுத்தமதாம் பலமைந்து தூக்கிக் கொண்டு
சுத்தித்த செம்பரப் பொடிதான் பத்து
வர்த்தமமாம் வாழையுடக் கிழங்குச் சாற்றை
வார்த்தரைத்து வில்லைதட்டிக் காயப் போடே. 865

காய்ந்தபின்பு அகலிலிட்டுக் கசபுட மாகக்
கண்காண நெற்பொரிபோல் கரித்து நீறும்
வாய்ந்தபின்பு சூதத்தைச் சமனாய்ச் சேர்த்து
மாட்டியரை வாழைப்பால் தன்னி னாலே
மூய்ந்தபின்பு வில்லைசெய்து மிடுக்காம் வெய்யில்
மூன்றுநாள்தாம் வைத்திடவே வெண்ணீ றாகும்
ஓய்ந்தபின்பு நவலோகத் தீந்தா யானால்
ஒன்பதரை தப்பாது வுண்டி டாயே. 866

தப்பாது மண்டலந்தான் தேனிற் கொள்ள
நான்குயுக மோர்நாளாம் தப்பா துண்மை
செப்பாத விக்குருவுத் திறமே மெத்த
தேசிகராம் காலாங்கி சொன்ன மார்க்கம்
மெப்பான மேதினியில் கரைகொள் ளாது
மென்மேலாம் சரக்கெல்லாம் விரைந்து கட்டும்
ஒப்பாதே வொருவர்வழி தனில்சே ராது
ஊமையைப்போ லிருந்துகொண்டு யோகம் பாரே. 867

## சூரியகாந்தக்கல் சத்து

பாரென்ற ரவிகாந்தம் பலமு மைந்து
பாங்கானப் பொடிசெய்து கிழியாய்க் கட்டி
ஆரென்ற அசுவத்தின் மூத்தி ரத்தில்
அழுந்தவுமே ஊறவைத்து மூன்று நாள்தான்
வேரென்ற வெந்நீரில் கழுவிப் போட்டு
வெங்காரம் பலமிரண்டு குடோரி கால்தான்
சூரென்ற வெடியுப்பு நீரா லாட்டி
சுப்பிரமாய் உருக்கிடவே சத்து மாமே. 868

(அ.பொ.) :—அசுவம்=குதிரை.

சத்தெடுத்து மித்திரனில் சாய்த்துக் கொண்டு
தாக்கான குளிகைக்குச் சாரணை ஈந்தால்
நத்தெடுத்து பரிதிக்குள் ஓடும் போது
நலங்கியுமே சூடொன்றுங் காணு தாகும்
பத்தெடுத்து பானோடு மதியுஞ் சத்து
பாங்கான குளிகைக்குச் சாரணை ஈந்து
சுத்தெடுத்து பரிதிமதி யிலோடி னுக்கால்
சூடில்லை குளிரில்லை சுத்த மாமே. 869

## சூரியகாந்தக்கல் செந்தூரம்

சுத்தமான சத்தெடுத்துத் தங்கங் கூட்டி
சூதமிட்டுச் செந்தூரம் செய்தே உண்டால்
அத்தமான அரன்சடையின் ஒளிபோ லுடலாம்
அமர்ந்துமது தானிருக்கும் எப்போ துந்தான்
முத்தமான புலன்தானும் சிவப்பு ரத்தினம்
முகந்தானும் செம்பரத்தன் பூப்போ லாகும்
மத்தந்தான் பொழியுமது வைரம் உடலே
மாணிக்க வொளிபோலே மருவுந் தானே. 870



## சந்திரகாந்தக்கல் பரிட்சை

மருவவேசந் திரகாந்தக் கல்லைத் தானும்
மாசற்ற சந்திரனின் கதிரின் முன்னே
தருகவுமே வைத்திட்டால் கிரகித் துத்தான்
தண்ணீர்தா னுண்டாகும் பரிட்சை கண்டு
உருவவுமே விருந்தாக்கால் உத்த மந்தான்
உயர்ந்தசந்தி ரகாந்தக்கல் லென்றும் பேரு
அருவவுமே பூமிதன்னில் அருப மெத்த
அரன்சொன்னார் தேவிக்கு துர்லப மாமே. 871

(அ.பொ.) :—அருபம்=(அபுருபம்) அரியது ; துர்லபம்=கிடைத்தற்கரிது.

துல்லபமாம் சந்திரகாந் தக்கல் லின்பேர்
சிவமணியாம் இந்துரத்தி னமுமா குந்தான்
தல்லபமாம் சந்திரகாந் தக்கல் லென்றும்
சந்திரப லம்மணித்தான் சிவகாந் தந்தான்
வல்லபமாம் சைவரத்தி னசீதாச் சுவமாம்
மதிப்பான சந்திரிகா சிராவித் திராவி
பல்லபமாம் பலமதியாய்க் குளிர்ச்சி யாகும்
பாங்கான சந்திரகாந் தக்கல்லுப் பேரே. 872

சந்திரகாந் தக்கல்லின் குணத்தைக் கேளு
சலவையாக குளிர்ச்சியான மழம முப்பாய்
தந்திரமாய்த் தானிருக்கும் தாகந் தன்னைச்
சர்த்தியான பித்தத்தைச் சாடிப் போகும்
மந்திரமாம் சிவப்பிரீதி யாயி ருக்கும்
மாளிகையில் கைதனிலே யிருந்த தாகில்
சுந்திரமாய் லட்சுமியும் என்னே ரந்தான்
துணையாயி ருப்பாள்வா சமாய்ச்சு முன்றே. 873

## நட்சத்திரக் காந்தக்கல்

சுழன்றதுவோர் நட்சத்தி ரகாந்தந் தானும்
சுயம்பான படிகக்கல் போல்வெ ளுப்பாம்
அழன்றதுவோர் அழுக்கடைச்ச லில்லா மற்றுன்
அழகாக நிர்மலமாய்த் திரட்சி யாகி
கழன்றதுவோர் தகடாகி சீவரத் தினமாம்
கனிந்தசிவப் பிரீதியாக அங்கமு மாகி
வழன்றதுவோர் வழவழப்பு மாயி ருக்கும்
மகிழ்ச்சியான நட்சத்தி ரகாந்தந் தானே. 874

## நட்சத்திரக்காந்தக் கல்லின் பெயரும் சத்தும் செந்தூரமும்

தானென்ற நட்சத்தி ரகாந்தப் பேரு
 தாராற்றின் தார்ப்பலம்தான் தாரா காந்தம்
வேனென்ற முன்போலே சத்து வாங்கி
 விடுவிப்பாய் சாரணையும் குளிகைக் குத்தான்
கோனென்ற குளிகைகட்டி இருளில் போயில்
 கூர்ந்தசூரி யனுதிக்கு மொளிபோல் காணும்
வேனென்ற செந்தூரம் செய்து வுண்ணு
 விருத்தரும்தான் இளைஞராவார் உண்மை காணே. 875

## வேதாந்த சித்தாந்த தத்துவம்

(புறச்சமய விளக்கம்)

காணவுமே புறச்சமயம் ஆறே தென்னில்
 கலந்ததுவோர் நியாயம்வை சேடி கந்தான்
மீணவுமே மீமாம்சம் சாங்கி யாங்கம்
 மிகுந்ததுவோர் வைணவம்பாட் டந்தா றுறு
ஆணவுமே அறிவுறுதல் அனேக வியாபி
 ஆகுமாமே அனேகமா மார்க்க மாகும்
நீணவுமே நிற்குணமே புத்தி வித்தாம்
 நிரைசரியாய் அந்தக்கரணம் சேர்த்த லாமே. 876

சேர்த்தலாகும் ஆகுமிது விரைவ னுண்மை
 செய்தவினை சத்துபெற்றால் ஏற்குங் காணும்
ஆத்தலால் ஆன்மாவொன் றனேகம் வியாபி
 ஆன்றதில்நின் றால்ஆண வமேயா குந்தான்
மாத்தமான குணமல்ல மாயைத் தாழ்வாம்
 மகாபுத்தி யானவொரு விகாரந் தாமே.
வேத்தமான வினைமீள சதசத் தாகும்
 மிக்கவுமே நியாயத்தின் விரிவு பாரே. 877

விரிவான முத்துசேரி டத்தில் தானும்
 வீதுயிரு மிக்ககுணத் தாகு மங்கு
தரிவான தாமதசாந் தீசாத் துவீக
 சாந்தமான பத்தியாலே முத்தி நல்கல்
பரிவான பாவத்தா லுறும வத்தை
 பவமகலு மன்னுயிரு சடம தாகும்
நிரிவான நிர்குணத்த தன்று முத்திதான்
 நித்தியமாம் முத்திபெற்றால் முக்குறி காணே. 878



காணவுமே பத்திபாவ னைக்குள் முத்தி
 கலந்திருத்த லால்பின்னும் சடசத் தாகும்
தோணவுமே சித்தமான பகுதிக் கீழே
 சிறந்தமூவை இருபத்தோர் தானம் தானே
வேணவுமே விகுதிதன்னின் விகுதி யான
 விருத்தமான வொன்பகுதி வைத்த தல்லால்
ஆணவுமே அவ்விகுதி பகுத்த தாலே
 அநித்தியமாம் நித்தியமும் முத்தி யாமே. 879

முத்தியாம்யோ கசாங்கியம் ஞானசாங் கியந்தான்
 முத்தவிழ்ச்சூர் சாங்கியமா தலாலே தானும்
நித்தியமாம் நிரீஸ்வரத்தில் ஞான மூன்றில்
 நிகழ்மூன்றி விரண்டதாம்தான் யோக சாங்கியம்
புத்தியாம்யோ கசாங்கியம்பு ருடார்த்த சாங்கியம்
 புகழ்ந்தயிது எட்டாகும் ஆத லாலுல்
பத்தியான பகுதிக்கு அஞ்சும் மாயை
 பகுத்திந்த சாங்கியத்தின் பண்பு தானே. 880

பண்புதானே நாராய ணனுக மாதி
 பாவிலகு நல்லாழி சங்கந் தன்னால்
கண்புதானே பொறியினால்தான் அர்ச்ச னாதி
 களினாலே யிசைந்ததிரு மால்ப தத்தை
வண்புதான்நல் வாழ்வான வைகுந்தம் பெற்று
 மருவுகின்ற மோட்சவீடே யாகு மென்பர்
திண்புதான்சி ரானநாமங் களது தானும்
 செயலாகும் வைணவத்தின் திறமை தானே. 881

திறமையான பாட்டத்தின் செய்தி கேளு
 சிறப்பான எட்டாம்ம றைதா னாதி
விறமையாவேள் விகளின்மிக் கான நூல்கள்
 விதிவழியே செய்திடுதல் தன்மை யாகும்
நறமையான நவசோம கமுறுதல் மோட்சம்
 நலமறிந்து நல்வினைதீ வினையொ ழித்து
உறமையாக வுயிர்விட்டால் வினைமேற் செல்லா
 உறுதலிவைப் புறச்சமய முண்மை தானே. 882

(அ.போ.):—நவசோமகம்=மீமாஞ்சகரில் முதன்மையான குமாரில பட்டர் கண்ட மதக் (பாட்டமதம்) கோட்பாட்டின்படி மேற்குறித்த யாகம் செய்தலே மோட்சம் என்று கருதுவர்.

### கெண்டகச்சிலைமுதல் சிலாவங்கக்கல் வரையிலுள்ள ஏழுவகைச் சத்து

உண்மையாம்கெண் டகச்சிலைசூ டாலைக் கல்தான்
உற்றதுவோர் மாக்கல்தேக் கல்லும் மஞ்சள்
தண்மையாம்த வளைக்கல்சி லாவங் கக்கல்
தனித்தனியே பலம்பத்து நிறுத்துக் கொண்டு
பண்மையான பருப்புப்போல் தானு டைத்து
பருத்ததுவோர் பூசினிக்காய்ச் சாற்றில் சுத்தி
வண்மையான வெடியுப்பு நீர்விட் டாட்டி
மூன்றுநாளா னபின்புநல்ல வீரம் போடே. 883

வீரந்தான் பலமொன்று கூடப் போட்டு
மிடுக்கான குடோரியது அரைப்ப லந்தான்
சாரந்தான் பலமரைகா ரமும்மப் படியே
தளரவரை வெடியுப்பு நீரி னாலே
வாரந்தான் கழித்தபின்பு மூசைக் கிட்டு
வரிசையாக வுருக்கிடவே சத்து மாகும்
தீரந்தான் நட்பதனில் சாய்த்துக் கொண்டு
சூதத்தில் சாரணைதான் செய்தி டாயே. 884

### ஏழுவகைச் சத்துச் செந்தூரம்

செய்திட்ட சத்துக்கு நாலத் தொன்று
சிறப்பாக தங்கமிட்டுச் செந்தூ ரித்துண்ணு
பொய்த்திட்ட காயமது வைரந் தானும்
மாசற்று உடலதுதான் வண்டு போலாம்
நய்த்திட்ட நவலோகம் ஆயிரத்துக் கோடும்
நாதாந்தப் பெருமையைநீ நாடி நில்லு
பெய்த்திட்ட சொர்ணமான மாரி யாகும்
பெரும்பாதை வுபரசத்தின் போக்கு தானே. 885

(அ.போ.) :—மாரி=மழை.

### நான்குவித அன்னபேதி

தானான அன்னபேதி அஸ்திபேதி
தனிச்சொர்ண பேதிமாங்கி சபேதி யாகும்
ஊனான வுவர்மண்ணும் கல்கிட் டந்தான்
ஓங்கியதோர் கருமணலும் செம்மணல் சுத்தமண்ணும்



மானான முடவாட்டுக் கல்தன் னோடு
மிக்கான கருவண்டு பன்றி முள்ளு
ஏனான எலிமுள்ளு வகையொன் றுக்கு
ஏற்றமான பலம்பத்து நிறுத்துக் கொள்ளே. 886

நிறுத்துமேதான் முன்போலே சுத்தி செய்து
நிகழவுமே வொவ்வொன்றாய் முன்போல் சத்து
விறுத்துமேதான் வாங்கியேமித் திரனில் சாய்த்து
விடுவிப்பாய் சாரணைதான் சூதத் திற்கு
மறுத்துமேமுன் போலேசெந் தூரம் பண்ணு
மண்டலமே பணவெடைதான் தேனில் கொள்ளு
ஒறுத்துமேதான் யுகாந்தவரை இருத்தும் தேகம்
ஒருநூற்றுக் கொன்றிடவே வேதை யாகும். 887

### அன்னபேதி தோற்றம்

வேதையான அன்னமென்ற பேதி தானும்
விளங்கியதோர் உற்பத்தி சொல்லக் கேளு
மாதையான மலையினுட ருதுவு பொங்கி
மாசற்ற கிரணத்தால் பொங்கி நீரும்
பாதையான மலைச்சவுடு என்று பேரு
பாங்கான மூன்றுவித வண்ண மாகும்
காதையான காசீச மென்று பேரு
கருப்புமஞ்சள் வெள்ளைநிற மாகுங் காணே. 888

### மாங்கிச பேதி

காணவேமாங் கிசபேதி யிவிரண்டு உண்டு
கனத்ததோர் புட்பகாசீ சமென்றும் வேறு
பேணவேமா காசீச மென்றும் தானும்
பேராக விரண்டுண்டு இதிலே மஞ்சள்
தோணவுமே கருப்போடு சிவப்பு வெள்ளை
திட்டமான நான்குவண்ணம் தானு முண்டு
ஊணவுமெ வெப்பத்தொ டுசார காரம்
உறுகின்ற கியாழமொடு கசப்பு மாமே. 889

கசப்பான அன்னபேதி யின்கு ணந்தான்
கரும்புளிப்பாய் துவர்ப்புமாய்நல் கார மாகும்
மசப்பான வாதந்தான் கபமது தன்னை
மதிப்பான நேத்திரத்தின் நோய்கள் தன்னை

நிசப்பான நீரடைப்பு நீரரு கலோடு
நீங்கான கல்வினைதல் தினவு குட்டம்
தசப்பான தலைப்போடு அவிழ்தப் புண்கள்
தரியாதே போக்குமன்ன பேதி தானே. 890

### மாங்கிசபேதியின் இயல்பும் திறமும்

பேதியென்ற மாங்கிசத்தின் பேதி குணந்தான்
போந்தவெங்க லக்களிம்பு வண்ணங் காணும்
மாதியுமே மழமழத்துச் சம்மிய முமாகி
மதிப்பான நீலமண்போல் தானி ருக்கும்
பூதியென்ற புட்பகாசீ சமென்று சொல்லும்
பேரான கசப்புமாய்ச யித்திய முமாகும்
சாதியென்ற சலத்திராவ ணியாயி ருக்கும்
சகலகுட்ட தோடத்தைப் போக்குந் தானே. 891

### உபரசங்களின் பெயரும் அதன் சத்தும்

தானென்றக் கடல்நுரைமீ னென்பு முட்சங்
கனித்தபேரோ சனையும்தான் நாகப் பச்சை
மானென்ற மரகதமாம் பச்சை யோடு
மகாப்புத்தான் பழத்தோடு கழுதை வண்டு
வேனென்ற வெண்சுக்கான் கீதக் கதண்டு
மிக்கான காகசிலை காண்டா மிருகம்
தானென்ற கருமாசி கத்தூரி யெலும்பு
கரியமந்தா ரசிலைக்கல் பாசி யாமே. 892

பாசியென்ற மாங்கிசமாம் சிலையி னோடு
பண்பான சாலீக்கி ராமந் தானும்
மாசியென்ற மாந்தளிர்கா சுமீரப் படிகம்
மதிப்பான கற்காவி செம்பு மணலோடு
நாசியென்ற நாகமணல் வங்கம ணல்தான்
நல்லீய மணலோடு வெள்ளி மணலாம்
ஏசியென்ற வேமமணல் லோக மணலோடு
எளிதான மயிலிறகு திருக்கை முள்ளே. 893

(அ.போ.):—திருக்கைமுள்—திருக்கைவாலி யென்னு மீன்முள்.

முள்ளோடு வெண்சிலையும் கானகக் கல்குரு
முனையாய்ர சிதசிலையே மசிலை விந்தம்
நள்ளோடு நாகசிலை வங்கசி லைதானும்
நலமான வீயசிலை அயச்சிலை யுமாகும்



தெள்ளோடு திராச்சிலையும் வெங்கலச் சிலையும்
சேர்ந்தபித்த ளைச்சிலைச்செம் புச்சிலை தானும்
பள்ளோடு வகைவகைக்குப் பலந்தான் பத்து
பாங்காக முன்போலே தூய்மை பண்ணே. 894

### உபரசச் செந்தூரம்

பண்ணியுமே வெவ்வேருய்ச் சத்து வாங்கி
பாங்காகக் குளிகைக்குச் சுருக்குப் போடு
தண்ணியேதங் கமிட்டுச்செந் தூரித் துண்ணு
சஞ்சலத்தை யெண்ணுதே மவுன முன்னு
வெண்ணியேதான் ஐம்புலனை வீசிப் போட்டு
விடுக்காதே மூலத்தை அணைத்துச் சேர்க்க
எண்ணியேயெவ் வுயிரும்தன் னுயிரைப் போலே
இருந்தகமாய் குருபதத்தை என்றும் காரே. 895

### கடல்நுரை தோன்றும்விதம்

காக்கவேக டல்நுரையின் தோற்றங் கேளு
கடல்கடைந்தார் பூருவத்தில் அசுரா ளோடு
ஆர்க்கவுமே தேவரனை வோருங் கூடி
அமுதந்தான் கடையயிலே பாம்ப ரசன்தான்
தேர்க்கவுமே சோகமுற்று வியர்வை யாகி
சுழன்றவிடந் தனிவிருந்து வெள்ளை நீராய்
வேர்க்கவுமே வியர்வையுட திவலை சிந்தி
விள்ளுந்தீ வாந்தரத்தில் வீழ்ந்த தாமே. 896

### கடல்நுரையின் வண்ணங்கள்

வீழ்ந்தவிடம் அங்கங்கே தோற்ற முற்று
மிக்கான கடல்நுரையும் தோற்ற மாச்சு
ஆழ்ந்தகடல் தனில்வீழ்ந்து கரையொ துங்கி
அலைந்துமதே கடல்நுரையும் மாச்சு தாமே
தாழ்ந்துமதே நால்வருணத் தோடுங் கூடி
நலத்ததோர் பொன்வண்ணம் வெளுப்பு மாகி
காழ்ந்துமேதான் கருப்புமாகி சிவப்பு மாகி
காணவுமே வண்ணமது நான்கு மாச்சே. 897

## கடல்நுரை வேறுபாட்டின் குணம்

நான்குமது விதந்தன்னில் கருப்பு கேளு
நலமில்லை மத்திபமாங் குணமு மாகும்
மூன்றுமேதான் மற்றமூன்றும் உத்த மந்தான்
மிக்கான உடலுக்கு கந்த தாகும்
வேங்குமேதான் வெளுப்பான கடல்நு ரைக்கு
விடுக்கவுமே மாரணமா மென்று பேராம்
வாங்குமேக ருப்புக்குச் சம்மா மாரணம்
வருமேம வண்ணவாம் நுரையைக் கேளே. 898

கடல்நுரையின் வண்ணம் பாரணமென் றும்பேர்
கெடியான சிவப்புநுரை சாரண மென்றுபேர்
தோளுமேசா ரணந்தான்சூ தபந்தன மேசெயும்
துடியான மாரணந்தான் மிருத்துவை விலக்கும்
காளுமேதான் காயசித்திச் செய்து வைக்கும்
கடிசான பாரணந்தான் வாயுத் தம்பம்
தாளுமேமா ரணமாங்க டல்நுரைக் குத்தான்
தளுக்கான ரசதோடம் சாடிப் போமே. 899

(அ.பொ.) :—சூதபந்தம் = இரசக்கட்டு ; மிருத்து = இயமன் ; இரசதோடம்=இரசத்தின் நஞ்சு தோடம் ; சாடி=அடிபட்டு.

போமேதான் சன்னிபாதங் களெல்லாந் தானும்
புகழ்ந்துமேதா துவிருத்தி பலமுண் டாகும்
வேமேதான் மேகத்தை விரைந்து போக்கும்
மிகுந்ததோர் வாதபித்தங் கள்தாம் போகும்
தேமேதான் உடலெரிவொ டுகபமும் போகும்
செப்பறிய காசத்தைப் போக்கு விக்கும்
காமேதான் கடல்நுரையின் பண்பு தன்னைக்
கண் ந்திக் கிரிகைதனைக் கருதிப் பாரே. 900

(அ.பொ.) :—தாதுவிருத்தி=வீரியவிருத்தி.

கருதியுமே வுபரசங்கள் நூற்றிரண்டு பத்தும்
கண்டறிந்து காலாங்கி நாதன் சொல்ல
பருதியுமே பாட்டனென்ற மூல நாதன்
பரிந்துரைத்த நூல்பார்த்து வடமொழி பார்த்துத்
திருதியேசி வயோகமுனி சொன்ன படிக்கு
சிறுபாட்டர் பதஞ்சலிவி யாக்கிர மர்சொல்
அருதியுமே ஆத்தாளும் சொல்லக் கேட்டு
ஆராய்ந்து வுபரசத்தை விரித்திட் டேனே. 901



விரித்திட்டேன் ஏழாயி ரத்தி னுள்ளே
மிக்கான சித்தருரைச் சொல்லைக் கேட்டு
பிரித்திட்டேன் சத்துவகை செந்தூ ரங்கள்
பேரான குளிகைக்கு லூட்டும் வழிதான்
கரித்திட்டேன் உற்பத்தி யாகும் தானம்
கண்டுமேதான் நூல்தனிலே கணக்காய்ச் சொன்னேன்
உரித்திட்ட வுபரசத்தை விரிக்க வென்றால்
ஒருவராலும் முடியாதே வுண்மை தானே. 902

உண்மையான வுபரசந்தான் முற்று மாகும்
உலகத்தோர் பிழைக்கவென்று வெளியாய்ச் சொன்னேன்
வெண்மையான பாவமென்றே எண்ணி டாதே
வினையங்கள் மெத்தவுண்டு மேவிப் பாரு
தண்மையான சாந்தமுற்றுக் கருவைப் பாரு
தவறில்லை யொன்றிலுந்தான் மறைப்போ யில்லை
அண்மையாக வாத்தாள்தான் சொன்ன வழிதான்
ஆராய்ந்து யான்தானும் சொன்ன வாறே. 903

வானுன வுபரசங்கள் நூற்றிரண்டு பத்தும்
வகையெல்லாம் பார்த்தறிந்து வரிசை யாக
தாரான வுற்பத்தி சத்து மார்க்கம்
தாக்கான குளிகைக்கு லூட்டும் வழிதான்
மாரான செந்தூரம் குருசுண் ணங்கள்
மேன்மையான வுதகமொடு தைலம் தீநீர்
தேரான செயநீரில் கட்டும் மார்க்கம்
செப்பினேன்வு பரசங்கள் முற்று மாச்சே. 904

ஆச்சென்ற நவலோகத் தோற்றந் தன்னை
அறிந்தமட்டும் ஆராய்ந்தன் னைசொல்லக் கேட்டுப்
போச்சென்ற பாட்டர்தி ருமூலர் சொல்ல
போன்றெடுத்த காலாங்கி அய்யர் சொல்லத்
தேச்சென்ற சிறுபாட்டர் சிவயோ கமுனி
சிவமான பதஞ்சலிவி யாக்கிர மர்சொல்
ஏச்சென்ற வெழுகண்டந் தன்னில் தானும்
எழுதினேன்யான் நவலோகம் இயற்கை தானே. 905

## ஏமத் தோற்றம்

இயற்கையான வேமதோற்ற மதைத்தான் கேளு
ஏற்றமான மகாவிஷ்ணு தானும் ஆதி
பியற்கையான வராகமாகிப் பூமி யைத்தான்
பிளந்ததைக் கொம்பாலே கீறி னதினுல்
வியற்கையான பூமிதேவி யான வள்தான்
விட்டுணுவைப் பார்த்துவிண் ணப் பம்செய் தாளால்
செயற்கையான என்னிடத்தில் பொன்வி ளைந்த
சேதியான விவரந்தான் சொல்லென் றேதான். 906

## உலோகங்கள் பதினென்றின் பெயர்கள்

சொல்லென்று பூமாது தானுங் கேட்க
சுருதிமகா விட்டுணுவும் சொல்ல லுற்ருர்
புல்லென்ற பூருவத்தில் பொன்வெள் ளிசெம்பு
போரான காரீயம் வெள் ளீ யந்தான்
துல்லென்ற துத்தநாகத் தினேடு தானும்
துளுவான நல்லிரும்பு கருப்பி ரும்பு
எல்லென்ற எகுவோடு திராவுந் தானும்
ஏற்றமான வெங்கலமும் பித்தளை யுந்தானே. 907

தானுன பதினென்று லோகந் தானும்
தனித்தனியே உற்பத்திக் குணு குணமே
வேனுன லட்சணங்கள் குருச்செந் தூரம்
மிக்கான சத்துவகை களங்கு தானும்
பேனுன பிரித்துமேதான் ஒவ்வொன் ருக
பிசகாமல் சொல்லுகிறேன் பின்பு கேளு
பானுன பூருவத்தில் சிவபிரான் தானும்
பார்வதியும் இருவருமாய்ப் பகன்ருர் காணே. 908

காணவுமே ஆயிரந்தா னுண்டு காலம்
களிகூர்ந்தென் னேரமுமே ஆலிங் கனம்செய்து
தாணவேதான் சம்போகம் ஆகவே தானும்
சம்பிரமாய் ஏகீபா வமாயி ருக்க
ஆணவுமே அக்காலம் அசுரர்கள் தன்னுல்
அதிகதொல்லை கொடுத்ததாலே தேவர் கட்கு
தாணவுமே பொறுத்திருக்கக் கூடா மல்தான்
தனித்ததுவோர் இந்திரலோ கத்தே வர்தான். 909

(அ.பொ. :—ஆலிங்கனம்=தழுவுதல் ; சம்போகம்=உடலுறவு ; சம்பிரமாய்=சம்பிரமமாய்=முழுமையுமாய் ; ஏகீபாவம்=ஒரே குறிக்கோளோடு.



தேவர்கள்தாம் இந்திரனே டொன்ருய்க் கூடி
திசைமுகனும் பிரம்மாவன் டைக்குப் போய்தான்
யாவர்க ளுமபய மிட்டார் பிரம்மா
அடைந்தவர்த்த மானமெல்லாம் அறிந்து கொண்டு
மூவர்களிலே வொருவரான விஷ்ணு பக்கம்
முனிந்துமேதான் சமூகத்தில் வந்து சொன்னுர்
யாவருடை துன்பதொல்லைக் கேட்ட பின்பு
ஏகமாம்விட்டு ணுவும்பிரம்ம னையுமே தானே. 910

(அ.பொ.) :—வர்த்தமானம்=செய்திகளை.

பிரமனேடு அக்கினியாம் பகவான் தேவர்
பேரான பேர்களையும் தான ழைத்து
பிரமமான சிவன்தானும் எந்நே ரந்தான்
பிரியாமல் பார்வதியாள் தன்னைக் கூடி
திருமமான லீலையில்தன் விலாசத் தினுலே
நீங்காமல் நிற்பதால்க ருத்தோற் றமில்லை
அருவமான அதைத்தவிர்த்து முதல்மா தந்தான்
அனுபவிக்க அப்பால்தான் உடனே கேளே. 911

உடன்கேளு ஒன்பதுமா தந்தான் பிரிந்து
உபதேசம் சனகாதி யோர்க்குச் சொல்ல
அடன்கேளு அம்பாளைப் பிரிந்தி ருந்தால்
அப்போது பார்வதிக்குக் கர்ப்ப மாகும்
திடங்கேளு சுப்பிரம ணியர்தோன் றுவார்தான்
தோன்றுமுறை யவர்பிறக்கும் வகைதான் கேளு
படங்கேளு ஆறுமுகம் கைபன் னிரண்டு
பாங்குடனே வந்துதிப்பார் பார்வ திக்கே. 912

உற்பவித்த வுடன்சூரர் தம்மை யெல்லாம்
உறுக்கவுமே சம்மாரம் செய்கு வார்பார்
தற்பவித்த வுங்கள்ம னமகிழ்ச் சியாகும்
சார்ந்தவிதற் குபாயந்தான் பாரு மென்று
விற்பவித்த விஷ்ணுவுந்தான் சொல்லக் கேட்டு
வெகுதேவ தேவர்க ளும்சேர்ந் தாய்ந்து
கற்பவித்த சகலருந்தான் கூடிக் கொண்டு
கனலக்கி னிபகவானைக் கருதி னுரே. 913

(அ.பொ.) :—கனல்=எரிக்கும்.

அக்கினியாம் பகவானும் சம்ம தித்து
அப்பவேதான் சிவனண்டைப் போனூர் தானும்
அக்கினிதான் போந்தவேளை சிவனு முமையும்
அன்புடனே இருவருமே சையோ கமானூர்
கைக்கினிதாய் ஆலிங்கனம் செய்யும் போது
கனமுடனே விசையாக வக்கினி போனூர்
பக்கிதான்பார் வதியுமங்கி யைத்தான் பார்த்தாள்
பதறியேபார் வதியுமெ ழுந்தாள் தானே. 914

பதறியுமே எழுந்திருந்து உட்புறம் போனூர்
பரமசிவன் இந்திரியம் கலித மாச்சு
அதறியந்த இந்திரியம் தன்னைத் தானும்
அக்கினியாம் பகவானின் வாயில் விட்டார்
பதறியேதான் அக்கினியாம் பகவா னப்போ
புருடவாகு ருதியுமேதா னுன தாலே
பெதரியுமே யோசனையாய் பிரம்மா விஷ்ணு
பேராதி இந்திரனும் தேவாள் தானே. 915

தானுன பூருவவி ருத்தாந் தம்புகன்று
சகிக்கவுமே கூடாமல் விந்து வைத்தான்
ஏனுன வெல்லாரும் ஒன்று கூடி
ஏற்றமான வாகாய கங்கை யைத்தான்
மானுக வழைப்பித்து மந்தி ரத்தால்
வாயாலே அக்கினியாம் பகவான் கக்கி
கோனுன கங்கையிட மாக மாற்ற
கங்கையுந்தான் தரிக்கவவள் கூடா வாச்சே. 916

அவள்தரிக்கக் கூடாமல் கங்கை யுந்தான்
அழுத்தமாக பூமியிலே கொருக்கைக் காட்டில்
பவந்தரிக்க வைத்துவிட கொருக்கை நாணல்
பற்றிக்கொண்டு எரிந்துமேதான் சாம்ப லாக
உவந்தரிக்க விந்திலொரு துளியெ ழும்பி
ஓங்கியுமே மகாமேரு திருமலை தன்னில்
விவதரித்து விழ்ந்துவிட்ட படியி னுலே
விந்துருகி மகாமேரு வேம மாச்சே. 917

(அ.பொ.) :—கொருக்கை=நாணல்.

ஏமமான பொன்னதுவும் மகாமே ராச்சு
ஏமபரு வதமான படியி னுலே
வேமமான தேவர்கள் இருக்கத் தக்க
வீடுபண்ணிக் கொண்டார்கள் சித்தர் யோகி



சோமமான விந்துவேகத் தாலே தானும்
சுயம்பிரகா சம்போன்ற திருமலை தன்னில்
பூமமாய்பொற் பிரகாசம் போன்ற தாய்த்தான்
பொற்சாய்கை யாய்மகாபி ரபையுந் தானே. 918

பிரபையாக சம்புவென்ற மரம தொன்று
பெரிதான வொருநாவல் மரமுண் டாச்சு
அரபையாக அம்மரத்தில் பூவாய்க் காயாய்
அழுந்துகின்ற பழம்மகாபி ரசாதம் போலே
உரபையாக பழம்பழுத்து வீழ்ந்து டைந்து
உத்தரசம் வோடியுமே ஆரு கித்தான்
நரம்பையான நதியாகிச் சம்புநதி யென்று
நாட்டமாக மிகுதியும்பே ராச்சு தானே. 919

பேராச்சு நதியோடும் விடங்க ளெல்லாம்
பொற்பிரபை யாய்பொன்தான் விளைவு மாச்சு
வேராச்சுப் பொன்தானு மின்ன மொன்று
விளைவுப்பொன் தன்னுடைய விரிவைக் கேளு
சீராச்சு கயிலாய வாச ரான
சிவன்தானும் பார்வதியை விவாகம் பண்ண
ஏராச்சு பிரம்மவிஷ்ணு இந்திர தேவர்
ஏகமாகச் சகலருந்தான் வந்திட் டாரே. 920

(அ.பொ.) :—வாசரான=வாணரான.

## சிவன் மணக்கோலம்

வந்துமேதான் அவரவர்கள் வரிசை யாக
வகையாக அவரவர்கள் இருக்கத் தக்க
தந்துமேதான் இடத்திலுமே யிருந்திட் டார்கள்
தயாநிதியாம் சிவனுமணக் கோல மாகி
தந்துமேதான் நவரத்தி னபீடந் தன்னில்
நயந்துமதே சிவன்தானு மிருக்கும் போது
பிந்துமேகி பிரம்மாதான் எழுந்து வந்து
பேரான வேள்விதனை வளர்த்தார் தானே. 921

வளர்க்கவுமே பார்வதியும் வந்தி ருந்தாள்
மதிப்பான ரூபலாவண் ணியத்தைத் தானும்
பளர்க்கவுமே பார்த்துதானே மகிழ்ச்சி யாகி
பரவசத்தைத் தானடைந்தார் பிரம்மா தானும்

இளர்க்கவுமே இந்திரியம் கவித மாச்சு
ஏங்கியுமே இதைக்கண்டு பிரம்மா தானும்
களர்க்கவுமே யோசனையாய் பாதத்துள் மறைத்தார்
கனிந்துவந்த விந்துவிலே தோற்றங் கேளே. 922

## மரீசிரிஷி மருந்துகள் 15

## வாலகில்லியர் மற்றும் முனிகள் மருந்து (செய்கை)

கேளந்த விந்துவிலே மரீசி இருடி
கெடுவாக வுற்பவித்தார் விந்தில் தானும்
ஏளந்த பஞ்சசத்து மருந்து தானும்
இசைந்துமேநா னூற்றுத்தொண் ணூற்றெரன் பதுபேர்
பேளந்த விந்துவிலே பிறந்திட் டார்கள்
பின்புதான்வால் கில்லியரங் குட்டந் தானே
தாளந்த பிரமாண மாய்த்தோன் றலானூர்
நாற்பத்தெண் ணாயிரவர் முனிகள் தானே. 923

தானான பார்வதிக்கு திருப்பூட் டந்தான்
சதுரமான வோமகுண்டந் தனைவ ளர்க்க
வேனான விந்ததுவும் அதிலே தானும்
விடுபட்டு வொருதிவலை தெரித்துச் சிந்த
நானான நதிபோலே பெருகும் போது
நலத்துமேதான் அதுபரந்த தான மெல்லாம்
பூனான பொன்பிறந்து தோற்ற மாச்சு
பிரம்மவிந்து வக்கினிகுண் டத்தில் வீழ்ந்து
ஊனான வுற்பவித்த பொன்தா னென்று
உற்பனமாம் பூருவத்தில் சொன்ன பொன்னே. 924

பொன்தானும் உற்பத்தி ரெண்டு விதமாம்
பிறந்தபொன்தான் ஐந்துபிர கார மாச்சு
பொன்தானு மேதென்றால் சொல்லக் கேளு
பிராகிருதம் கச்சபம்வன் னிசம்பூ தந்தான்
பொன்தானும் கனிசம்ப வமென்று மாகும்
பொருந்தவேதான் வேதசமும் ஐந்து மாகும்
பொன்தானும் அஞ்சுவிதப் போக்கு மாச்சு
பூலோகந் தன்னிலேதான் பேசக் கேளே. 925



பேசவேபி ராகிருத மென்ற பொன்தான்
பிருதிவியின் கூறுச்சு பலமோ மெத்த
தாசவேபி ரம்மாவின் உடலது தன்னில்
சகலகூறுய் கூடியேஇ ருந்த விந்தில்
ஊசவேதான் உற்பவித்த பொன்த னக்கே
உறுகின்ற வாகாச மெனப்பே ராச்சு
ஆசவுமே இப்பொன்தான் அப்புவின் கூறு
ஆதியாம்மூன் றுலேயக் கினியும் வாய்வே. 926

அக்கினிதான் வாய்வினிலே சிவவிந் தேற்று
அங்கீக ரிக்கக்கூ டாத படியால்
தேக்கினிதான் தேவகங்கை தன்னின் பக்கல்
சிந்தாமல் விட்டுவிட அந்த சேடம்
அக்கினிதன் வயிற்றில்நின்று அபான வாய்வால்
அழிந்துமேதான் வெளிப்பட்டுற் பவித்த பொன்தான்
புக்கினிதான் வன்னிசம்ப வமென்று பேராம்
பொன்னுந்தான் தேயுவினுட கூறு மாச்சே. 927

## தங்க பேதம்

கூறுன மகாமேரு மலைமுடி தன்னில்
குறித்துமேதான் உற்பவித்தப் பொன்னுக் குத்தான்
காறுன கனிசம்ப வமென்று பேராம்
கனமான வாயுவினுட கூறும் பொன்தான்
பேறுன சூதத்தை பந்தனஞ் செய்து
பெலத்துமேதான் நவலோகம் வேதை யாக்கும்
வேறுன பேதித்த வேமத் திற்கு
வேதசமாம் பொன்னென்று பேரு மாச்சே. 928

ஆச்சென்ற சூதத்தைப் பந்தம் செய்து
அனுசரித்த பொன்னான படியி னாலே
கூச்சென்ற வாகசக் கூறு மாச்சு
குறித்தபடி சொல்வினதோர் ஏம மாகும்
மூச்சென்ற வுற்பத்தி தன்னில் சொன்ன
மூன்றான பொன்னாகும் யேதென் றுக்கால்
பேச்சென்ற பிராகிருதம் கச்சபத் தோடு
பேரான வன்னியும்சம் பூதந் தானே. 929

## தங்க பேதம்

பூதந்தான் மூன்று பொன்னும் பதினாறு மாற்று
பொன்னிதிலே ஆபரணம் செய்து வைத்து
நாதந்தான் தரித்தாக்கால் நரைதிரை மூப்பு
நலிந்தசாக்கா டின்றியேதான் இருக்க லாகும்
பாதந்தான் நாலான பொன்னுக் குத்தான்
பகர்ந்தகனி சம்பவமே வென்ப தாகும்
போதந்தான் சர்வரோகந் தன்னைப் போக்கும்
பொன்மாத்து பதினாறே யாகுந் தானே. 930

## தங்க பேதம்

காணவுமே வேதசமாம் பொன்னுக் குத்தான்
கற்பாந்த காலத்துக் கழிவில் லைதான்
தாணவேரு தக்கிரிகை தனக்குத் தானும்
தனித்தமகா வுத்தமமென் றறிந்து கொள்ளு
பூணவுமே வேதசமாம் என்று சொல்லும்
பொன்னுக்குக் காயசித்தி சுறுக்கி லாகும்
ஆணவுமே அட்டாங்க யோகந் தானும்
அறுபத்தி நான்குமேதான் சித்தி யாமே. 931

(அ.பொ.) :—அறுபத்துநான்கு=அறுபத்துநான்கு கலைகள்.

சித்தியான சொர்ணத்தை மழுங்கத் தட்டி
சிவக்கவுமே காய்ச்சினுல்தான் குருதி போலே
பெத்தியான பிரபையாக விருக்கு மாகில்
பேரான முதல்தரந்தான் ஏம மாகும்
நித்தியாக விரண்டான ஏமங் கேளு
நிறம்கொஞ்சம் கருப்பாகத் தானும் காணும்
வெற்றியாக காய்ச்சினலே வெள்ளை யாகும்
இதில்மூன்றுங் குணந்தன்னை விளம்பக் கேளே. 932

விளம்பவுமே வெட்டினுல்தான் அடுக்கில் லாமல்
மெழுகூர்ந்து மழமழப்பாய்த் தானி ருக்கும்
தளம்பவுமே நான்காம்பொன் சொல்லக் கேளு
தளினமான மிருதுவாக மழம ழப்பாய்
அளம்பவுமே ஐந்தாவது மஞ்சள் வண்ணம்
அதைக்காய்ச்சில் சிவப்புவண்ண மாயி ருக்கும்
தளம்பவுமே ஐந்தாவ தான பொன்தான்
சாற்றரிது அதிகபலம் சூதத் தாலே. 933



## தங்க பேதம்

சூதத்தால் வந்தபொன்னில் மத்தி பந்தான்
சூட்சமான விகரமாக கெட்டி யாகி
பேதத்தால் குடிலமாக பெரும ருகி
பூஞ்சலான மெதுவாகி கனமில் லாதாய்
காதத்தால் காய்ச்சினலே கம்பிக் குத்தான்
கடிசாகி வாராமல் அடிக்குத் தானும்
வேதத்தால் கடினமாய்மி கவொளி யுளதாய்
மிக்ககுணம் பத்தும்தான் மத்திப மாமே. 934

## தங்கத்தின் பண்புகள்

ஆமென்ற வுத்தமமாம் பொன்கு ணந்தான்
அயனுக்குச் சரியொக்கும் பிரம்ம ரூபம்
வாமென்ற மகாரூபம் மதுர மாகும்
மார்க்கமான சூதமது பந்தனி யுமாகும்
தாமென்ற நஞ்சுகுற்றங் களையும் தானும்
சயித்தியத்தைப் போக்கிவைக்கும் ரசபா கத்தில்
காமென்ற கியாழபாகந் தானு மாகும்
கண்டிந்த குணமெல்லாம் கருதிப் பாரே. 935

(அ.பொ.) :—மதுரம்=இனிமை.

## தங்கத்தின்பண்பும் பற்பமும்

கருதியுமே பொன்தன்னைத் தகடாய்த் தட்டி
கானகத்துச் செம்மண்ணைப் பழச்சாற் றுலே
அருதியுமே அரைத்தும்தான் மேலே பூசி
அதட்டியேதான் கரியோட்டில் காய்ச்சிக் கொண்டு
பருதியுமே பழச்சாற்றில் தோய்த்திட் டாக்கால்
பழுப்பற்றுப் பொன்னதுவும் சித்தி யாகும்
எழுதியுமே ஏழுதரம் செம்மண் பூசி
எலுமிச்சம் பழச்சாற்றில் தோய்த்தி டாயே. 936

தோய்த்திட்ட தகட்டின்மேல் பூசக் கேளு
சுளுக்கான நாவிலொன்று மாட்சி கந்தான்
பாய்த்திட்ட பழச்சாற்றி லரைத்துப் பூசி
பருப்புடமாய்ப் போட்டெடுக்கப் பற்ப மாகும்

நாட்டிட்ட நவலோகம் நூற்றுக் கீய
 நாலாறு மாற்றுகும் நவந்து பாரு
ஏய்த்திட்ட சித்தரெல்லாம் எளிதில் செய்வார்
 ஏமமென்ற மாட்சிகத்தின் இயற்கை தானே. 937

இயற்கையான ஏமமாட்சி கங்கிட் டாட்டால்
 ஏற்றமான கஞ்சமென்ற நிமிளை யாகும்
புயற்கையான பொன்னிமிளை தன்னில் செய்தால்
 போற்றியேதான் வாதங்கை கட்டி நிற்கும்
கயற்கையான கஞ்சமென்ற நிமிளை தானும்
 கற்பமான நோய்க்காக வென்பீர் காணும்
செயற்கையான வேமாட்சி கம்படத் தங்கம்
 கணத்தினிலே நீறியேதான் ஏம மாமே. 938

## வேறு தங்கக் குரு

ஏமமான கணத்திலேதான் சூதங் கட்டும்
 எளிதிலேதான் பின்னொன்றி யம்பக் கேளு
தாமமான தங்கத்தை ராவிக் கொண்டு
 தனிமையாக விராகனெடை நான்கு தூக்கி
வாமமான சாதிலிங்கம் தூய்மை செய்து
 வராகனெடை ஒன்றரைதான் தூக்கிக் கொண்டு
தாமமான தங்கத்தின் பொடிதா னென்றில்
 சாதிலிங்கம் ஒன்றரையாய்த் தகர்த்துப் போடே. 939

போட்டுமேதான் கற்றுழைப் பாலில் தானும்
 பிறளவரை யொருசாமம் மெழுகு போலாம்
ஓட்டுமேதான் உருண்டையாகக் காய வைத்து
 ஊமையென்ற கோழிமுட்டை வெண்கருத் தோய்த்து
மாட்டுமேதா கப்பொடியு ருண்டை மேலே
 மறுபடியும் வெண்கருவில் தோய்த்துத் தோய்த்து
ஆட்டுமேதான் மூன்றுயெடை பொடிமே லப்பி
 அடர்ந்ததோர் ரவிதனிலே காயப் போடே. 940

காய்ந்தபின்பு குகைமண்ணை நெகிழ வரைத்து
 கனத்ததோர் சீலைமண்தான் ஏழும் செய்து
ஒய்ந்தபின்பு வுமிக்குவித்த தற்குள் வைத்து
 ஒருபடியாம் உமிக்குள்ளே புடத்தைப் போடு



பாய்ந்தபின்பு நூற்றிரண்டு பத்தும் போடு
 பருவமாக மண்தன்னை வாங்கிப் போடு
ஆய்ந்தபின்பு கனகத்தின் கவசம் தன்னை
 அசையாமல் எடுத்தப்பால் வைத்துக் கொள்ளே. 941

வைத்துமேதான் முன்லிங்கம் தங்கம் ரெண்டும்
 வளமாகக் குருவாகும் வெள்ளி தன்னில்
ஐந்துமேதான் ஐம்பதற்கொன் றீய்ந்தால் தானே
 ஆண்மையான கருங்காலி வைரம் போலாம்
தேய்த்துமேசெம் புதனில்ஐம் பதற்கொன் றுமட்டும்
 தீர்க்கமாக வீந்திடவே யேம மாகும்
கைத்துமேதான் கருப்பான வெள்ளி தன்னைக்
 கருப்புவிட்டு வீசமெடை தேனி லுண்ணே. 942

## கருப்பு தாரத்தால் சூதவெண்ணையும் வேதையும்

உண்ணவுமே மண்டலந்தான் உடலந் தானும்
 உறுதியான கருங்காலி வைரம் போலாம்
பண்ணவுமே உடல்தானும் கற்ப காலம்
 பதினாறு வயதுபோலி ருக்க லாகும்
எண்ணவுமே யித்தொழில்தான் எளிதி லாக
 ஏற்றமான கோசபீசத் தினது தாரம்
கண்ணவுமே கருப்பான தாரந் தன்னை
 கணக்காக பலமரைதான் தூக்கிக் கொள்ளே. 943

தூக்கிடுவாய்ச் சூதமது பலந்தா னைந்து
 சுத்தித்துக் காசியென்ற மேருவில் வார்த்து
ஆக்கிடுவாய் கருப்பான தாரந் தன்னை
 அதிலிட்டுப் பொடியாக வடுப்பில் வைத்து
பாக்கிடுவாய் மணலில்வைத்து நான்கு சாமம்
 பதறாமல் தீயில்வைத்து வெரித்திட் டாக்கால்
ஏக்கிடுவாய் ஆறவிட்டு டைத்துப் பார்த்தால்
 இறுகியுமே வெண்ணைபோல்தா னுதந் தானே. 944

வெண்ணைபோலி ருக்கின்ற சூதந் தன்னை
 வில்லைசெய்து அயச்சட்டிக் குள்ளே போட்டு
மெண்ணையான மேனிச்சாறு சுருக்குப் போடு
 முருக்கிலையின் சாறுசாமம் சுருக்குப் போடு

கொன்னையான கோவைச்சாறு சுருக்குப் போடு
குறிப்பான கருவூமத்தன் சாறு போடு
நன்னையான வெற்றிலையின் கொடிச் சாற்றால்
நலங்காமல் சாமந்தான் சுருக்குப் போடே. 945

சுருக்கிட்டுத் தங்கமிட்டுச் செந்தூரித் துண்ணு
சூரியன்போல் நிறமாகும் சூட்ச மெத்த
நறுக்கிட்டு நவலோகத் தீர்த்தா யானால்
நாடியேதான் திசைமாற்றங் கண்டு கொள்ளு
ஒருக்கிட்டு ஒருவருடன் பேச லாகா
ஊமைபோலி ருந்துகொண்டு யோகம் பாரு
கருக்கிட்ட வெள்ளியுட வித்தை தன்னில்
கனகமது கண்கொள்ளா வேதை யாமே. 946

## சூதங் கட்ட

வேதையான சூதத்தைக் கட்டக் கேளு
முன்போலே தங்கத்தை யுராவிக் கொண்டு
பாதையான பலமொன்று நிறுத்துக் கொண்டு
பாங்கான கல்வத்தில் போட்ட ரைத்து
சோதியாக சுத்தித்த சூதந் தானும்
சுத்தமாக நான்குபலம் கூடப் போட்டு
காதையான கற்றாழைப் பாலி லாட்டி
கசகாமல் நால்சாமம் அரைத்தி டாயே. 947

அரைத்திட்டு வில்லைதட்டி அயத்தி விட்டு
அழகான வெள்ளைத்தா மரையின் சாறு
திரைத்திட்டு செவரொட்டித் தாமரை யிலையும்
சேர்ச்சமனுய்ச் சிறுகவேதான் நறுக்கிக் கொண்டு
உரைத்திட்டு வுரலிலிட்டி டித்து நய்ய
ஓங்கியுமே சாறுரெண்டு படியும் வாங்கி
நுரைத்திட்டுச் சூதத்தில் சுருக்கு போடு
துப்புரவாம் கழுவியுமே வாங்கி டாயே. 948

வாங்கியெல்லா முருட்டியேதான் உருண்டை செய்து
வரிசையாக பலமைந்து வைத்துக் கேளு
வேங்கியுமே வெள்ளியது பலமூ வைந்து
மிடுக்காக உராவியேதான் எடுத்துக் கொண்டு



தூங்கியேசூ தத்தைவெண்க ருவில்தான் தோய்த்துத்
துப்புரவாம் வெள்ளியுட பொடிபி ரட்டி
மூங்கியுமே பொடியெல்லாம் பிடித்த பின்பு
பேரான ரவிதனிலே காயப் போடே. 949

காய்ந்தபின்பு மண்ணரைத்து சீலை செய்து
காய்ந்தபின்பு வுமிப்புடந்தான் நூற்றிரண்டு பத்து
பேய்ந்தபின்பு புடம்போட்டெ டுத்துக் கொண்டு
பிசகாமல் வெள்ளியென்ற கவசம் வாங்கி
கோய்ந்தபின்பு குளிகையைத்தா னெடுத்துக் கொண்டு
கொடுத்திடவே நவலோக மேம மாகும்
தேய்ந்தபின்பு செந்தூரம் செய்துண் டாக்கால்
சிறுகதிர்போல் மேனியுமாம் தெளிந்து பாரே. 950

## ஏமபற்பமும் குணமும்

தெளிந்திட்ட வேமத்தின் குருவைக் கேளு
சீரான தங்கத்தைத் தகடு தட்டி
கெளிந்திட்ட செந்தூரம் தங்கத்தெ டைதான்
கேண்மையான கற்றாழைப் பாலி லாட்டி
தளிந்திட்ட தங்கமென்ற தகட்டில் பூசி
சரியாமல் காயவைத்து மீண்டும் பூசி
புளிந்திட்ட ஏழுமுறைப் பூசிப் பூசி
பெரும்புடமாய்ப் போட்டெடுக்க பற்ப மாமே. 951

பற்பத்தைக் கற்றாழைப் பாலி லாட்டி
பருப்புடமாய்ப் போட்டெடுக்க பற்ப மாகும்
அற்பத்தை அரையாமப ணவெடை தானுண்ணு
அழிம்பான குட்டமெல்லாம் அகன்று போகும்
சிற்பத்தைச் சன்னிபாத முதற்றோ டங்கள்
சீதசுரம் வாதசுரம் செரிந்து போகும்
கற்பத்தைப் பத்தியமாய் உண்டிட் டாக்கால்
காயமுமே வெகுநாள்தா னழியா தாமே. 952

## வெள்ளி தோற்றம்

தாமென்ற வெள்ளியின்தன் தோற்றங் கேளு
தண்மையான பூருவகா லத்திற் றுனும்
தீமூன்று கண்ணுடைய சிவனுர் தாமும்
தீர்க்கமாக மண்டிபோட்டி ருந்து கொண்டு

மூமென்ற முப்புராதி கணைச்செ யிக்க
மிக்கான மகாமேரு கிரியைத் தானும்
வாமென்ற வில்லாக வளைத்துக் கொண்டு
வாசுகியை நாணாகப் பூட்டி னாரே. 953

பூட்டியுமே சர்வமய மாயி ருந்த
போரான விஷ்ணுவைத்தான் கருவி யாக
ஆட்டியுமே அக்கினியால் திறமா கத்தான்
அதிரவேதான் தொடுக்கநிமைக் கொட்டா மல்தான்
வீட்டியுமே நெற்றிக்கண் விழித்துப் பார்த்தார்
விகுதியதோர் பார்வையினால் கண்ணில் நின்று
தீட்டியேதான் திவலையது ததும்பித் தானும்
சிந்தியேதான் பூமிதனில் விழுந்த வாறே. 954

வாரான திவலையது விழுந்த தானம்
வகையான நல்மரமாய் ஆதா ரமாகி
வேரான பலக்கொம்பாய் வித்தீ ரணமாய்
விதமான மரமாயுற் பத்தி யாச்சு
தேரான மறுபடியும் சூரி யாங்கி
செழுமையாங் கண்ணில்நின்று திவலை சிந்த
பேரான பூமியிலே திவலை வீழ
பெருகியதில் ரசிதமுற்பத் தியாச்சு தானே. 955

## வெள்ளியின் வேறுபாடுகள்

ஆச்சென்ற வெள்ளிபிதுர் கன்மா வுக்கு
அதிகபோக்கி யமென்றுதானே சொல்ல லாகும்
வேச்சென்ற வெள்ளியதில் மூன்று பேதம்
விரைந்ததோர்ச கசமென்றும் கனிசஞ் சாதம்
கேச்சென்ற கிரித்துருமம் மூன்று மாகும்
கிளர்ந்தெழுந்த விதனுடைய விவரங் கேளு
ஓச்சென்ற முதலதுதா னுயர்ந்த தாகும்
உயர்ந்தரெண்டாம் வெள்ளியது யர்த்தி யாமே. 956

## வெள்ளி குணம்

உயர்த்திமூன்றுந் தரந்தானும் மேலு மாகும்
உறுகின்ற சகசமெனும் வெள்ளி தானும்
வியர்த்தியான வெள்ளியநல் கிரியு மாகும்
விச்சயமாம் வெள்ளியதை அணிந்தா ராகில்



நயர்த்தியான நரைதிரை பிணிகள் மூப்பு
நலிந்தசாக் காடில்லை கனிசஞ் சாதம்
இயர்த்தியான மலைதன்னின் முடியு மாகும்
இசைந்தவெள் ளிரசத்திற் கேற்ற தாமே. 957

ஏற்றரச பந்தனையாஞ் சூதத் தோடு
ஏகமாக வுறவாகித் தானி ருக்கும்
மாற்றமான கிரித்துரும மென்ற வெள்ளி
வங்கத்தில் நீர்வாங்கில் மருந்தி னாலே
வேற்றமான இந்தவெள்ளி சர்வ நோய்கள்
விடுவிக்கும் பிரத்தியமாம் வந்த தாலே
பாற்றமாம்பா தருப்பியந்தா னென்று பேரு
பகர்மூன்று வெள்ளியதின் பருவங் கேளே. 958

## வெள்ளி வேறுபாடு

பருவமாக வுத்தமமாய் வெளுப்பு மாகி
பாரமாய் மழுங்கலாகச் சிவக்கக் காய்ச்சில்
அருவமாய டிக்கவெளுப்பு மெதுவு மாகி
அழகான மல்லிகைப்பூப் போலே தானும்
விருவமாக விரியாமல் இருப்ப தாகி
மெதுவாக தேக்கடையால் இருந்த தாகில்
உருவமான விக்குணந்தா னுத்தம மாகும்
உறுகின்ற மத்திபத்தை வுரைக்கக் கேளே. 959

மத்திபந்தான் லேசாகிக் கடின மாகி
மகத்தான மிருதியுதான் ஒளியு மாகி
கத்திபந்தான் கருப்மாகி காய்ச்சி னுக்கால்
கண்சிவப்பாய் மஞ்சளாகப் பெரும னாகி
குத்திபந்தான் குரூரமாக விந்த யெட்டும்
குணங்களுமே வுண்டான வெள்ளி தானும்
மத்திபந்தான் ஆகாத குணமு மாகும்
மடவான வெள்ளியுட ஆண்மை கேளே. 960

## வெள்ளி குணம்

ஆண்மையான வெள்ளியது கனமு மாகும்
அடர்ந்ததுவோர் துவர்ப்புமாக புளிப்பு மாகும்
விண்மையான வியாபகமான மதுர மாகும்
மிக்கதுவோர் ரசாயனமு மாயி ருக்கும்

தாண்மையான சயித்தியமான காரியு மாகும்
சாப்பிட்டால் பாத்திரத்தில் சுசியு மாகும்
வாண்மையான வாதங்கள் சயசேத் துமமும்
மதிப்பான வுப்பிசத்தைப் போக்குந் தானே. 961

(அ.போ.) :—ரசாயனம்=உடல்தேற்றி ; சுசி=தூய்மை.

போக்குமேகி தீபனந்தான் சாப்பிட் டவத்து
புறம்பாமல் செரித்தல்தான் செய்து வைக்கும்
தாக்குமேப லமுமட்ட மாசித் தியுண்டு
சர்வநோய்கள் தனைப்போக்கும் சகல ருக்கும்
வாக்குமதே கின்னரம்போல் கீத மீறும்
மாசற்றுக் கண்களுமே ஒளியு மாகும்
தேக்குமேதான் சிவசிந்தை என்னே ரந்தான்
சிறியாரைப் போலிருக்கக் கற்ப முண்ணே. 962

(அ.போ.) :—கின்னரம்=இசைப்பறவை.

## வெள்ளிக்களங்கு—வெள்ளி வேதை

உண்ணவுமே வெள்ளிதனை தகடு தட்டி
ஓங்கியதோர் பழுபாகல் கிழங்குச் சாற்றில்
எண்ணவுமே வேழமுறைக் காய்ச்சித் துவைக்க
ஏற்றமான வெள்ளியது சுத்தி யாகும்
பண்ணவுமே அரப்பொடியாய் உராவிக் கொண்டு
பலம்நான்கு நிறுத்தப்பால் வைத்துக் கொண்டு
தண்ணவுமே சாதிலிங்கம் பலமொன் றரைதான்
தனுக்குவெள்ளி யரப்பொடிதான் பலமு மொன்றே. 963

பலமான ரெண்டையுந்தான் கல்வத் திட்டு
பதியவே கற்றுழம் பாலி லாட்டி
நலமான நாற்சாமம் ஆன பின்பு
நலமாக வழித்துமேதான் உருண்டை செய்து
பிலமான ரவிதனிலே காய வைத்து
பின்புதானே வெண்கருவில் துவைத்துக் கொண்டு
குலமான அரப்பொடியை மேலே கட்டி
கொடுஞ்சுறுக்காம் ரவிதனிலே காயப் போடே. 964

காயவுமே நாழியுமி தனிலே வைத்து
கணக்காக முன்போலே புடத்தைப் போடு
நேயவுமே நூற்றிரண்டு பத்து தானும்
நேர்மையுடன் கனபுடம்போட் டெடுத்துக் கொள்ளு



மாயவுமே வாதியொரு புடத்தைப் போட்டால்
மண்ணுகி மருந்தெல்லாம் கரியாய்ப் போகும்
பாயவுமே பஞ்சிட்டுப் பார மேற்றில்
பாரமாய்த் தானிருக்கும் பண்பாய்ப் பாரே. 965

பண்பாக புடந்தீர்த்தா யினபின் பதனைப்
பத்தியுமே மேல்கவசம் வாங்கிப் போடு
அன்பாகக் கவசித்த ரசித வேமம்
அடுத்துமேதான் மறுத்தொன் றில் கவசம் போடு
உண்பாக லிங்கத்தோ டொக்க ரைத்த
உறுகின்ற பொடியதுவும் உன்னிப் போகும்
மண்பாக மேல்பொடிதான் வெள்ளி பொன்னும்
மானாது மறுபடியும் பாச்ச லாமே. 966

பாச்சவுமே லிங்கத்தை வாங்கிக் கொண்டு
பண்பான சீனவெள்ளி பலந்தா னஞ்சில்
வாச்சவுமே வராகனெடை களங்கு மீந்தால்
மதிப்பான ஈச்சங்காய் போல்க றுப்பாம்
சாச்சவுமே கருப்பான காரந் தன்னில்
சரிசேர்த்தே மத்தைத்தா னுருக்கிக் கொண்டு
தேச்சவுமே செம்பதுவும் செம்படைச் சேர்த்துச்
சீராகத் தகடுதட்டி இறங்கப் போடே. 967

இறங்கவுமே வுப்பதனை வறுத்துக் கொண்டு
இதற்குரெட்டி காவிக்கல் தூளாய்ச் செய்து
கறங்கவேதான் தகடுக்குக் கீழ்மே லிட்டுத்
தாக்கியுமே புடம்போடு இறங்கு மட்டும்
புறங்கவுமே புடம்போட்டு வுருக்கிப் பார்த்தால்
பேரான செம்புதங்க மிரண்டெ டைநிற்கும்
கறங்கவுமே இதைவைத்துச் செலவு செய்து
கற்பத்தை யுண்டுமேக டைத்தே றிடாயே. 968

## யோகங் கூறல்

தேறியுமே துவாதசத்தில் ஏற்றம் பாரு
திறமாக மூலத்தை இறுத்துக் கும்பி
மாறியுமே யிடையோடு பிங்கலை தானும்
மாசற்ற முப்பாழில் குதிரை போட்டு

சீறியுமே அதில்நின்று தீர்க்க மாகி
சிற்றரையாள் தன்பாதம் தன்னில் சொக்கி
ஆறியேயி ஊப்பாறு சந்திரக் கோளில்
அமிர்தத்தை யுண்டுமேதான் அழுந்தி டாயே. 969

(அ.பொ.) :—குதிரை=வாசி ; கோளில்=கிருகத்தில்.

அழுந்தவுமே வெள்ளிதனைத் தகடு தட்டி
அந்தெடைக்குக் கந்தகத்தை யரைத்துப் பூசி
தழுந்தவேதான் கற்றாழைப் பாலைப் பூசி
தாக்கியுமே கசபுடமாய்ப் போட்டிட் டாக்கால்
விழுந்துமேதான் வெண்மையான நீறு மாகும்
விடுக்காகப் பணவெடைதான் தேனி லுண்ணு
குழுந்தவுமே வெண்குட்டம் கருங்குட் டங்கள்
கொடிதான குன்மங்கள் விரைந்து போமே. 970

## செம்புத் தோற்றம்

போமென்ற செம்பினது தோற்றங் கேளு
பூருவத்தில் ராட்சசனும் குடகே சன்தான்
தேமென்ற சிவந்தநிற மாகத் தானும்
செழுமையான தாமிரத்தின் உருவ மானுன்
வேமென்ற விஷ்ணுவைத்தா னுத்தே சித்து
மிடுக்கான மழைக்காலந் தன்னில் தானும்
ஆமென்ற அருந்தவசு வெகுநாள் செய்ய
அப்போது விஷ்ணுவிற்க நிக்கை யாச்சே. 971

அறிக்கையான மிகுதியுந்தான் மகிழ்ச்சி யாகி
அடைந்தந்த ராட்சதனைத் தான ழைத்து
உறிக்கையாய் உனக்கென்ன வரந்தான் வேணும்
உகந்துமேதான் கேட்டாக்கால் தருவோ மென்ன
நறிக்கையான ராட்சசனும் சொன்ன வார்த்தை
நம்மைத்தான் தேவரீர்சக் கிரத்தி னுலே
தறிக்கையாக சங்காரம் செய்த பின்பு
சர்வகால மும்என்மேல் தயவு தானே. 972

தயவாகி யென்னுடைய சடலந் தானும்
தாம்பிரந்தா னுகவென்று கேட்டுக் கொண்டான்
வியவாகி விஷ்ணுவுந்தா னப்படி யீந்தார்
மிடுக்கான ராட்சசனும் அப்படி யானுன்
வயவாகி வரத்தில்வந் தபடியால் செம்பு



மாசற்ற பொன்வெள்ளிக் கதிக மாச்சு
நயவாகி யவனுடல்தான் செம்பு மாச்சு
நல்லெலும்பு ரசிதமென்ற வெள்ளி யாச்சு
தியவாகி யவனுடலின் மயின மெல்லாம்
திரண்டுமதே வெங்கலந்தா னுச்சு தானே. 973

## இருவித செம்பு

ஆச்சென்ற செம்புதனி விரண்டு பேதம்
அதன்விரிவு யேதென்ருல் சொல்லக் கேளு
ஓச்சென்ற நேர்பாளம் என்னும் செம்பு
உத்தமந்தான் மிகுதியுமென் றறிந்து கொள்ளு
ரேச்சென்ற மிலேச்சன்தான் என்னும் செம்பு
மிகுதியுந்தான் மத்திபமென் றறிந்து கொள்ளே. 974

## உத்தமச் செம்பு மத்திபச் செம்பு

அறிந்துமேதான் உத்தமத்தின் குணத்தைக் கேளு
அழுத்தமான மழுங்கலாக பார மாகி
செறிந்துமேதான் சிவப்பாகி அடிக்க டிக்க
தீர்க்கமாக மிருதுவாய்த்தான் காய்ச்சி னுக்கால்
வெறிந்துமேதான் விகாரகுண மில்லா தானுல்
மிகுதியுமே வுத்தமந்தான் இந்தச் செம்பு
மறிந்துமேதான் மத்திபத்தின் குணத்தைக் கேளு
மகாவெளுப்புக் கருப்போடு சிவப்பு மாமே. 975

(அ.பொ.) :—செறிந்து=அடர்த்தியாகி.

## மத்திபச் செம்பு

சிவப்பாகிக் கடினமாகி வுத்தமத் துக்குச்
சிதைந்துமேதான் பெரிதாக விருப்ப தாகி
இவப்பாகி கழுவவேக ழுவவே தானும்
ஏற்றமான கருப்பதாக இருப்ப தானுல்
மிவப்பாகி மிலேச்சமென்ற செம்ப தாகும்
மிகுதியுமே மத்திபந்தா னின்னங் கேளு
துவர்ப்பாகிச் சுரோணிதவண் ணமிக வெளுப்பு
சுத்தமான கருங்கருப்பு கனமில் லாதே. 976

(அ.பொ.) :—சிதைந்து=மாறுபட்டு.

### மத்திபச் செம்பும் செம்பின் குணமும்

இல்லாது டல்விரிசல் குடிலந் தானும்
எளிதாக அடிக்கடிக்கச் சிதறல் வீழ்தல்
வல்லாது இதுவெல்லாம் வாதத் துக்கு
மாசுந்தர்ன் ரசகர்மம் தனக்கா காது
தெல்லாது செம்பேதான் துவர்ப்பு மாகும்
சிறந்தரச பாகமாக மதுர மாகி
உல்லாது வெப்பமாக இருக்கும் பாரு
ஓங்கியதோர் திரிதோடம் சுரங்கள் வீக்கம்
அல்லாது அமரங்கள் துற்பட லங்கள்
அழிபாண்டு குட்டம்பி ரமேகம் போமே. 977

### செம்பின் குணம்

மேகம்போம் விருத்தியுண்டாம் புத்தி யுண்டாம்
மிடுக்கான நேத்திரநோய் களுக்கு மாகும்
ஆகமாமூத் திரகிரிச்ச ரங்கள் போகும்
அடுக்கான பவுத்திரம்குன் மங்கள் போகும்
சோகம்போம் சூதத்தில் சேர்ந்திட் டாக்கால்
துடுக்கான சத்துவமக் கினியு முண்டாம்
நாகம்போம் ரசாயனந்த னக்கெல் லாந்தான்
நற்செம்பு நேபாள முத்தமு மாமே. 978

### தாம்பிர பற்பம்

உத்தமமாம் செம்புபலம் திருத்துக் கொண்டு
உறுகின்ற வெள்ளாட்டுக் கோமி யத்தில்
பத்தமாம் குகையிலிட்டு வுருக்கிச் சாய்க்க
பளிச்சென்று ஊறலறும் தகடு லேசாய்ப்
புத்தமமாம் புளியிலைபோல் நறுக்கிக் கொண்டு
பெரியதான வெள்ளாட்டெ லும்பு மாத்தான்
ஒத்தமமாம் ஒருபடிமா கீழ்மே லிட்டு
உறுகவேதான் கசபுடமாய்ப் போட்டி டாயே. 799

போடுவது ஐந்தடுக்குக் கோணியை வைத்து
புகழான எலும்புமாவ தன்மேல் வைத்துப்
பாடுவது பரப்பிமேலே தகடு வைத்துப்
பரப்பியேதான் மேலுமந்த எலும்பு மாவால்



மூடுவது ஐந்தடுக்குக் கோணி தன்னால்
மிரளாமல் கட்டியேயெ ருக்கீ ழிட்டு
ஆடுவது ஐந்நூறு எருவு மேலே
அதன்மேலே புளியம்பு றணிகூ டைகொட்டே. 980

கொட்டியேதான் அதன்மேலே தகடு வைத்துக்
கூசாதே புளிப்புறணி கூடை கொட்டி
அதட்டியுமே வைந்நூறு எருமேல் கொட்டி
அதுங்காமல் நெறிப்பிட்டா றிற்ரு ணுக்கால்
எட்டியுமே வெடுத்துப்பார் நீறு மாகும்
எனையாண்ட ஐயர்காலாங் கிசொன்ன சொல்தான்
வெட்டியுமே செம்மையிது மிரள வேண்டாம்
வேதையிது கோடிகவர் ஆட லாமே. 981

### தாமிர பற்ப குணம்

ஆடலாமே இக்கருவால் சூதங் கட்டும்
அனுகினாலே சாதிலிங்கம் கட்டிப் போகும்
வீடலாமே வீரமது மெழுகு மாகும்
வெள்ளியந் தன்னில்நூற் றுக்கொன் றிட்டால்
பாடலாமே ரசிதமது நூறு மாற்று
பணவெடைதான் தேனிலுண்ண பால னுவான்
சாடலாமே பாடாண மறுபத் தினுன்கும்
தனித்தனியே கட்டிடவே வேதை யாமே. 982

(அ.போ.) :—ரசதம்=வெள்ளி.

### நாகமுற்பத்தி

வேதையான நாகத்தின் விரிவு கேளு
விருத்தாந்தம் பூருவத்தில் பாம்புக் கெல்லாம்
நாதையான ராசாவாய் இருக்கப் பட்ட
நல்லாதி சேடனோடு வாயு ராஜன்
ஏதையான இருவருமே யடித்துக் கொண்டு
ஏத்தமான நான்பெரியோன் நான்பெரி யோனென்று
ஆதையான ஆங்கார மாயாக் கிருசித்து
அடித்துகொண்டி ருவருந்தான் பலம்பார்த் தாரே. 983

பலத்திலேநான் பலவான்தான் பலவா னென்று
பலம்பார்ப்போ மென்றுசொல்லி யடித்துக் கொண்டு
தலத்திலேம காமேரு மலையின் கிட்டே
அண்மையிலே போயுமேபேர் இருவ ருந்தான்

கலத்தினிலே கயிறுபோலி ருக்கு கின்ற
    கனமான உடலதனை யுடையான் தானும்
நலத்தினிலே நாகமகா வரச னானேன்
    நலமான மகாமேரு கிரியைத் தானே. 984

மேருகிரி அடிதொடுத்து நுனிமட் டிற்கும்
    மிடுக்கான வலமெல்லாம் சுற்றிக் கொண்டு
ஆருகிரி வாயிரமாம் கொடிமு டிமேல்தான்
    ஆயிரமாம் பணாமகுடந் தான்வி ரித்து
பேருகிரி வளைத்தழுந்தப் பிடித்துக் கொண்டு
    பெலத்துமேவி ருக்கின்ற வேளை யில்தான்
வாருகிரி வாயுராசன் தானப் போது
    மதிப்பான வுக்கிரமாய்க் கோப மாச்சே. 985

உக்கிரமமாய் மாருதம்போல் அறையும் போது
    உகந்தவேழு கடல்கள்தாம் சுவரிப் போக
அக்கிரமமாம் அட்டகுல மலைகள் தானும்
    அலையவேதான் கம்பங்கள் போலத் தானும்
பக்கிரமாய் சர்வலோகா லோகங்க ளெல்லாம்
    பரிந்துமுமே அமளியில்தான் பட்டுப் போக
தக்கிரமாய் பிரம்மாதி சர்வ தேவர்
    சந்தித்துக் காரணமு மேதென் றாரே. 986

(அ.பொ.) :—அமளி=ஆரவாரம்.

ஏதுவேதான் காரணமும் விசாரிக் கத்தான்
    இயல்பான வாயுவிற்கும் சேடனுக்கும்
வாதுவேதான் மதங்கொண்ட கர்வத் தாலே
    மகத்தான பேரியோனான் பலவா னென்று
சாதுவைதான் அடித்திட்டு சர்ப்ப ராசன்
    தன்னுடைய பலத்தினாலே மேரு மலையை
வேதுதான்வேர் தொடுத்துநுனி மட்டுக் குந்தான்
    விடுகயிறு போல்சுற்றிக் கொண்டார் காணே. 987

கொண்டுமேதான் கொடுமுடியா யிரத்தி லுந்தான்
    கூர்மையான பணாமகுட மாயி ரத்தை
திண்டுமேதான் சிரசாலே வழுத்திக் கொண்டு
    திறமாக யிருந்திடவே வாயு ராசன்



அண்டுமேதான் ஆங்காரத் தோள்ப லந்தான்
    அனைத்தையுமே மந்தமாரு தமாய்த்தான் மோத
உண்டுமேதான் லோகாதி லோக மெல்லாம்
    வுபத்திரவம் அதிகமாகப் போச்சு தானே. 988

போச்சுதென்று பிரம்மாதி முதலாந் தேவர்
    பெருக்கவுமே யோசனைதான் பண்ணிப் பார்த்து
ஆச்சுதென்று சர்ப்பத்துக் குபகாரம் பண்ணில்
    அமளிபட்டுப் போயிடுவான் வாயு ராசன்
வாச்சுதென்று வாயுராச னைத்தொட்டு தானும்
    மதிப்பான வெண்பத்தி னான்கு நூறு
தேச்சுதென்ற லட்சம்சீ வான்மா விற்குத்
    திடமான வுபகார மாகுங் காணே. 989

காணவுமே ரெண்டுபேரின் வழிக்கு நாம்தாம்
    கருதியேதான் போகவுமே தேவை யில்லை
நாணவுமே நாரதமு னிதன்னைத் தானே
    நாமழைத்து நீர்தாம்போய் சண்டை தன்னைத்
தாணவேசொல் விடவுமஞ் சேலென நாரதர்
    தம்முடைய மகுடியான குழல்தா னெடுத்து
வாணவுமே பலப்பலவாம் ராக மூத
    மதிப்பான கீதத்தைப் பாம்பு ராசன்
தோணவுமே ஒருதலையை நீக்கித் தானும்
    செவிகொடுத்துக் கொண்டிருந்தார் சேடன் தானே. 990

சேடந்தான் செவிகொடுத்த ராகங் கேட்கக்
    கணச்சுறுக்கா சியந்தவுயர் வாயு ராசன்
பேடந்தான் பலங்கொண்டொ ருமிக்க மோதி
    பெயர்த்தந்த கொடிமுடியோர் சிகரந் தானும்
ஏடந்தான் எடுத்துகொண்டு கீழே வீழ
    இறங்கியந்த சிகரங்கீழ் வீழ்ந்த போது
தாடந்தான் பாம்புராசன் சேட னுடைய
    தாடையுரி பட்டுமேதான் சருமம் போச்சே. 991

(அ.பொ.) :—சருமம்=தோல்.

## பஞ்சலோகத் தோற்றம்

சருமந்தான் பெயர்த்தும்தோல் காற்றி னாலே
    தரியாமல் பறந்துமேதான் பூமியில் வீழ
புருமந்தான் பூமியின்தன் னிடத்தில் நின்று
    புகழான பஞ்சலோகத் தோற்ற மாச்சு

தெருமந்தான் சேடனுட வுடலில் நின்று
சிறந்துமேதான் பிறந்தபடி யாயே லோகம்
அருமந்தான் அந்தந்த பேராச்சு லோகம்
ஆகையினுல் லோகத்தின் அடைவு பாரே. 992

## காரியத் தோற்றம்

பாரென்ற பாம்புகளின் குணத்தைப் போலே
பாரினிலே கோமளமாய் வழவ ழுப்பாய்
காரென்ற வுறைபட்ட கன்னத் தில்தான்
கடுந்திவலை வுண்டாகி மாருதத் தினுலே
ஏறென்ற திவலையைத்தான் எடுத்துக் கொண்டு
ஏற்றமான வங்கபதி யான பூமி
நேரென்ற வதில்வீழக் காரீ யமாச்சு
நேர்பான கருநாக மென்று பேரே. 993

## வெள்ளீயத் தோற்றம்

பேரான சேடனுட வுடலில் தானும்
புழுக்கமாக மிகவெழும்பும் வியர்வை தானும்
காரான காற்றினுலே நிலத்தில் வீழ
கடிந்துமேதான் வெள்ளீயம் தோற்ற மாச்சு
தாரான பாம்புராச னுக்குத் தானும்
தளர்ந்தும்தான் ஆயாசம் வந்த தாலே
கூரான முகம்வாடி பெருமூச் சுண்டாய்
கோழைதானே மிகுதியாக வாயி லாச்சே. 994

(அ.பொ.) :—ஆயாசம்=களைப்பு.

## நாகத் தோற்றம்

மிகுதியாய்கோ ழையதுபூ மியிலே வீழ்ந்து
வெள்ளையென்ற பாடாணம் எலிப்பா டாணம்
தகுதியான தாதுக்கள் மிகவுண் டாச்சு
பாம்புராச னுக்குமுக தாடை தானும்
உகுதியான முறிவுபட்ட ததனில் நின்று
உருகிரத்தம் பெருகியேதான் நிலத்தில் வீழத்
திகுதியான திவலைசிந்த வதிலே நின்று
சீறுகின்ற நாகந்தான் தோற்ற மாச்சே, 995



## நாகத்தின் வேறுபாடுகள்

ஆச்சென்ற நாகமது ரெண்டு மாகும்
அமர்ந்தத்தூ ரமொடுகார லெல்லாந் தானும்
தாச்சென்ற தத்தூரத் தைப்பா லுப்பொறி
தனிலெரிக்கச் சத்துவந்தான் வண்மை யாகும்
தேச்சென்ற காரவெல்லம் தன்னைத் தானும்
தீயெரிக்கக் குங்குமத்தின் வண்ண மாகும்
பாச்சென்ற இரண்டுக்கும் பருவ மாகும்
பாங்கான சுரோணிதத்தின் பருவங் கேளே. 996

## மிருதார்சிங்கித் தோற்றம்

பருவமாக வெள்ளியங்கி ரிதனில் வீழ்ந்த
பாங்கான சுரோணிதத்தைக் காற்று வாரி
தருவமாக வீயசத்துத் தான்பி றந்தே
தாக்கான பூமியிலே வந்து வீழ
துருவமாகச் சுடக்கியேதான் மிருதார் சிங்கி
செனித்துமேதான் தோற்றமது வாச்சு தானும்
விருவமான மதாந்தரந்தான் வேறென் றுண்டு
மிக்கான சிவனுடைய சரீர மாமே. 997

## வேறு காரீயப் பிறப்பு

சரீரத்தின் மலங்களது பூமி தன்னில்
நானுதிர வதில்நின்று வியாபித் துத்தான்
கரீரத்தில் காரீயம் பிறப்புண் டாச்சு
கம்பில்லம் என்கின்ற நாமப் பேராம்
அரீரத்தில் தயிலபாடா ணமுமாச்சு தானும்
அடைவான வங்கத்தின் பேதங் கேளு
இரீரத்தில் ரெண்டுவித பேத மாகும்
எப்படிதா னென்ருக்கால் இயம்பக் கேளே. 998

## வெள்ளீய பேதம்

இயம்பவேகு ரமென்றும்மி சிரக மென்றும்
இரண்டுவகை பேதமாக இருக்குங் காணும்
குயம்பவுமே குரமென்ற வெள்ளீ யந்தான்
குளிர்ந்துமேதான் உத்தமமாய் தானி ருக்கும்

இயம்பவுமே இரண்டான மிசிர கந்தான்
எளிதான மத்திபமாங் குணம தாகும்
தயம்பவுமே குரவங்க மென்ற வீயம்
தளுக்கான வெண்மைநிறம் ஆகும் பாரே. 999

வெண்மையான சண்பகப்பூ வண்ணங் காணும்
மிகக்கனமாய்ப் பொட்டெனவே வுருக லாகும்
தண்மையான மெழுகூர்ந்து சத்த மின்றித்
தானிருக்கும் குரவங்க மென்ற வீயம்
பண்மையான மிசிரகமே வென்ற வங்கம்
பச்சைநிறம் வெளுப்பாயுந் தானி ருக்கும்
எண்மையான இருவங்கத் தியல்பு தன்னை
இயம்பினோமே வெள்ளீயக் குணத்தைக் கேளே. 1000

## வெள்ளீய இயல்புகள்

கேளுமேதான் கசப்புமான வெப்ப மாகி
கெடியான மதுரமாகத் தானி ருக்கும்
வாளுமேவா தபித்தகற்ப வுற்பனி யாகும்
மதிப்பான கோழைசேத்து மமேகத் தைத்தான்
போளுமேவ யிற்றில்நின் றபூச்சி யைத்தான்
போக்குமேப லமாக்கும்ர சத்துக்கு றுதியாம்
தாளுமேதான் சர்வலோகந் தனைப்பே திக்கும்
தகர்த்துமேதான் பொடியாக்கும் தூளு மாமே. 1001

(அ.பொ.):—கசப்பு=கைப்பு; போளும்=போழும்=துண்டித்து விடும்; லோகம்=உலோகம்.

## வெள்வங்க பற்பம்

தூளாகும் காளிகச கிதமா நீக்கி
துப்புரவாய் நீர்வாங்கில் ரசித மாகும்
தாளாகும் சகலருக்கும் சுகமு மாகும்
சக்குமிங்கி தத்தால்தான் ஆண்மை யாகும்
வாளாகும் ஈயத்தைத் தகடு தட்டி
வகையான நீர்ப்பூலா விலையி டித்து
போளாகும் புண்ணாக்குச் சமனாய்ச் சேர்த்துப்
புளித்துள்ள காடியைவிட் டிடித்தி டாயே. 1002

(அ.பொ.):—ரசிதம்=ரசதம்=வெள்ளி.



இடித்திட்டு அடைபோலே ரெண்டு தட்டி
ஏத்தமான வங்கமென்ற தகடு வைத்து
அடித்திட்டு அடைமூடி கோணிக்குள் வைத்து
அழுந்தநன்றாய்க் கட்டியுந்தான் மண்ணைப் பூசி
கடித்திட்டுக் காயவைத்து புளிப்புற ணிகீழ்மேல்
கனபுடமாய்ப் போட்டெடுத்தா றவிட்டுத் தானும்
பிடித்திட்டுப் பார்த்திட்டாக் கால்பூப் போலாம்
பேசரிய வங்கத்தின் பெருமை தானே. 1003

## வெடியுப்புச் செய்நீர்

பெருமையான வெடியுப்பு பலமும் நூறு
புளிக்கின்ற புதுப்புளிதான் எழுபத் தைந்து
அருமையான சாரமது பலமும் பத்து
அழுத்தமான சீனமது பலமும் பத்து
தருமையான கல்லுரலில் இடித்து நய்ய
நாள்மூன்று சென்றபின்பு சட்டி யிட்டு
இருமையான தீபம்போல் எரித்த பின்பு
எரிந்தவுடன் சீக்கிரத்தில் இறக்கிப் போடே. 1004

## கறியுப்புக் கட்டு

இறக்கியுமே இளகத்தில் சுரண்டி வாங்கி
எடுத்தெல்லாம் பீங்கானில் பரப்பி வைத்து
பறக்கியுமே பளிதனிலே வைத்திட் டாக்கால்
பளிச்சென்று நீராகும் பண்பாய் வாங்கு
கறக்கியுமே கடல்தண்ணீர் கொண்டு வந்து
காய்ச்சியுமே படியுப்பு வாங்கிக் கொண்டு
மறுக்கியுமே மறுபடிமோர் சட்டி யிட்டு
மறுக்காலும் கடல்தண்ணீர் சுருக்குப் போடே. 1005

சுருக்கிட்டே யானபின்பு சொல்லக் கேளு
சுத்தமான பச்சைநெல்லு பலந்தான் நான்கு
கருக்கிட்ட கரிதானும் பலந்தா னொன்று
கடிந்தரைத்து கடல்தண்ணீர் தன்னி னாலே
முருக்கிட்ட குகைகட்டு அதற்குள் பூசி
மூசைபோல்தான் சொப்பிவிட்டவ் வுப்பை வைத்து
விருக்கிட்டு நெல்கரியை மேலே பூசி
விருத்தமான மூசைமண்ணால் சில்லு போடே. 1006

சில்லிட்டு சீலைசெய்து வலைக்குள் வைத்து
சிதக்கவுமே குகையழுகு மட்டு மூதி
அல்லிட்டு ஆறவைத்து டைத்துப் பார்க்கில்
அடுக்காக வைரம்போ லுப்புக் காணும்
வில்லிட்டுப் பெடுத்துப்பின் வெடியுப்பு நீரில்
முழுகவுமே தோய்த்திட்டி ரவியில் போடு
எல்லிட்டு நாளொன்றுக் கேழுமு றைதோய்த்து
ஏற்றமாக ஏழுநாள் ரவியில் போடே. 1007

## வெள்ளி சேர்ந்த வெள்ளைப்பாடாண வேதை

போட்டுமேதான் புதுக்கலசந் தன்னில் போட்டு
பிரளாமல் சில்லிட்டுச் சீலை செய்து
காட்டுமேதான் கனபுடமாய்ப் போட்டெடுத்து
கரியில்வைத்து வுருக்கிடவே பொன்போ லாடும்
வேட்டுமேதான் வெடியுப்புச் செய்நீர் தன்னை
மிரளாமல் பீங்கானி லிருத்து விட்டு
பூட்டுமேதான் பூநீறு நாலுக் கொன்று
போட்டுமேதான் கலக்கிநீயே வைத்தி டாயே. 1008

குறிப்பு :—வெடியுப்புச் செய்நீர் செய்முறையை 1005, 1006 பாடல்களில் காண்க.

வைத்திட்டு நான்காம்நாள் தெளிவி றுத்து
வகையான வெள்ளைப்பா டாணந் தன்னை
மைத்திட்ட மனிதருட மூத்தி ரத்தில்
வண்மையான கற்சுண்ணம் கரைத்துக் கொண்டு
பைத்திட்ட பாடாணம் கிழியும் கட்டி
பாங்காக வெரித்திடவே சுத்தி யாகும்
எய்த்திட்ட பாடாண மெடுத்துக் கொண்டு
ஏற்றமான வெடியுப்பு நீர்ச்சு றுக்கே. 1009

குறிப்பு :—வெடியுப்புநீர்=வெடியுப்புச் செய்நீர் : முன்பாட்டின் குறிப்பைக் காண்க.

வெடியுப்பு நீர்ச்சுருக்கு நான்கு சாமம்
விதமாகப் போட்டபின்பு வெங்கா ரத்தை
அடியான ஆவெருதின் சாணியாற் கழுவி
அரைத்திடுவாய் நான்குசாமம் வெடியுப்பு நீரில்



பிடியாக வில்லைசெய்து பரிதியில் போடு
பிசகாமல் அகலிலிட்டு மண்சீலைசெய்து
கடியாக காடையென்ற புடத்தைப் போட்டு
கட்டுவாய்நீ வெள்ளைக்குக் கவசந் தானே. 1010

(அ.பொ.) :—வெள்ளை=வெள்ளைப் பாடாணம்.

வெள்ளையென்ற பாடாணந் தனக்குத் தானும்
மேல்கவசம் கட்டிடுவாய் வெங்கா ரத்தை
தள்ளையென்ற பாடாணந் தனக்குத் தானும்
சரியெடையாய்க் காரத்தைக் கவசங் கட்டு
கள்ளையென்ற காரத்தின் மேலே தானும்
காரமெடை வெள்ளிய நீற்றைத் தானும்
எள்ளையென்ற எருக்கம்பால் தன்னு லாட்டி
எங்குமேதான் சரியாகக் கவசம் போடே. 1011

குறிப்பு :—வெள்ளியநீறு செய்முறையை பா. எண் 1003, 1004ல் காண்க.

கவசத்தோ டேதானும் காடைப் புடந்தான்
கணக்காகப் பத்துவிசைப் போட் டெடுத்து
புவசத்தோ டேயெல்லாம் பாலா லாட்டி
பெருமிளகு போலுருண்டை செய்து கொண்டு
குவசத்தோடு வெள்ளிதனை மூசை யிட்டு
கொடுத்துருக்கு ஒவ்வொன்றாய் உருண்டை தன்னை
விவசத்தோ டேவெள்ளி யெடைக்குப் போடு
மீண்டுமேதான் எடுத்தெல்லாம் பொடியாய் பண்ணே. 1012

(அ.பொ.) :—பால்=(வெள்) எருக்கம்பால்.

எல்லாந்தான் ஏகமாகப் பொடியாய்ச் செய்து
எடைக்கெடையாய் சூதமிட்டெ ருக்கம் பாலால்
நல்லாதான் அரைத்திட்டு நான்கு சாமம்
நலமாக வில்லைதட்டிக் காய வைத்து
கல்லாந்தான் சிறுகலயம் அடியிற் றானும்
கதிப்பாகப் பொரித்தெடுத்த அண்ட வோட்டை
புல்லாந்தான் பொடிபண்ணிக் கலயத் திட்டுப்
பிசகாமல் வில்லைவைத்துப் பொடிமேல் போடே. 1013

பொடிபோட்டுச் சில்லுவைத்துச் சீலை செய்து
புகழாக மணல்மறைவில் புடந்தான் பத்து
வெடிபோட்டு வெளிப்புடந்தான் ஒன்று போட்டு
விரியாமல் வில்லைதனை வாங்கிப் பாரு

தடிபோட்டுத் தவளம்போல் நீறு மாகும்
தணியெடுத்து நூற்றுக்கு வொன்று தானும்
திடிபோட்டு வெள்ளீயம் குடவன் செம்பில்
சேர்த்திடவே வெள்ளியது பத்து மாற்றே. 1014

பத்தான குருதன்னைச் சூதத் தூட்ட
பளிச்சென்று பால்வெள்ளித் தானு மாகும்
சத்தான குருவாலே சாரங் கட்டும்
சமுசயங்க ளெண்ணாதே துருசு நீரும்
முத்தான துருசுகுரு சூதங் கட்டும்
மூவுலகுங் கொள்ளாது ரசித வேமம்
பித்தான சிவன்வந்து காட்டி னாற்போல்
பேர்பெரிய வித்தையெல்லா மாட லாமே. 1015

காரிய பற்பம்

ஆடவுமே கருநாக வித்தை கேளு
அண்டபகி ரண்டமெல்லாம் துணைத்தே ஆட
பாடவுமே பலம்பத்து நிறுத்துக் கொண்டு
பதக்குத்தான் வெள்ளாட்டுக் கோம யத்தை
ஊடவுமே வுருகையிலே சுருக்குப் போடு
ஊறெல்லாம் கக்கியுமே தூய்மை யாகும்
வீடவுமே வில்லைபோல் சாய்த்துக் கொண்டு
மேற்பூச்சு மருந்துடைய விவரங் கேளே. 1016

விவரந்தான் தாளகமும் பலமு மைந்து
மெல்லியதாய் இதழாக்கி வுரித்துக் கொண்டு
அவரந்தான் வெள்ளாட்டுக் கோமி யத்தில்
ஐந்துநாள்தாம் ஊறவைத்தப் பாலே கேளு
தவரந்தான் தாளகத்தை வாரிக் கொண்டு
தளரவுமே கிழிபோலே துலையைக் கட்டி
புவரந்தான் வெள்ளாட்டுக் கோமி யந்தான்
புதியதிலே அறுசாமம் எரித்தி டாயே. 1017

எரித்திட்டே அப்பாலே வைத்துக் கொண்டும்
ஏற்றமான துருசுபலம் ஒன்றே முக்கால்
திரித்திட்டு நாகமொன்ற ரைப்ப லந்தான்
தூய்மைசெய்த சூதமது ஒன்றே கால்தான்



தரித்திட்ட நாகத்தை வுருக்கிக் கொண்டு
தவறாமல் சூதத்தைத் தொந்தித்துக் கொண்டு
புரித்திட்டுப் பொடிசெய்து துருசு போட்டு
பொடியாக வரைத்திட்டுப் பீங்கான் வையே 1018

பீங்கானில் வைத்துமேதான் பழச்சாறு குத்த
பொங்கியேதான் புகைந்துமதே நீறு மாகும்
தீங்கானும் பரிதியில்வைத்து நாள்தா னேழு
சிந்தாமல் மர்த்தித்துப் பொடியாய் வைக்க
தாங்கானில் சவ்வீரம் நாலுக் கொன்று
தாக்கியுமே பொடியோடே அரைத்துக் கொண்டு
பீங்கானில் மூன்றுநாள்தாம் ரவியில் போட்டு
புயன்றுமேதான் நான்காம்நாள் நிறுத்துக் கொள்ளே. 1019

நிறுத்துமேஎ லுமிச்சம்ப ழச்சாற் றுலாட்டு
நின்றுமேதான் துருசுகட்டி யொன்று வாங்கி
குறுத்துமேதான் குழம்பாகச் செய்து கொண்டு
குழம்பிலேதான் துருசுதனைத் தோய்த்துத் தோய்த்து
எறுத்துமேதான் ஏழுநாளே போன பின்பு
எடுத்துமேதான் பூநீற்றுக் குள்ளே வைத்து
பொறுத்துமேதான் இருசாமம் எரித்திட் டாக்கால்
பொங்கியுமே துருசதுவும் குருவு மாமே. 1020

குருவிலொரு காசெடைதான் நிறுத்துக் கொண்டு
குமரியதன் சோறெடுத்தே யதிலே தூவு
திருவினிலே தூயநீரைப் போலே யாகும்
சுருக்கிடுவாய்த் தாளகத்தைக் கல்வத் திட்டு
கருவிலேதான் தாளகத்தைக் கல்வத் திட்டு
கடிந்தரைப்பாய் இருசாமம் நீரி னாலே
அருவிலேதான் அகலிவிட்டுப் பரிதியில் வைத்து
அழுந்தியபின் மேல்மூடிச் சீலை செய்யே. 1021

(அ.போ.):—நீர்=கற்றாழை நீர்.

சீலைசெய்து காடையென்ற புடந்தா னென்று
தீர்க்கமாகப் போட்டெடுத்துக் கல்வத் திட்டு
மூலைசெய்து முன்தண்ணீர் தனில ரைத்து
முன்போலே சீலைசெய்து புடத்தைப் போட

கோலைசெய்த குருவாகும் எடுத்துக் கொண்டு
குறித்தபின்பு காரீயம் தனக்குப் பாதி
காலைசெய்து கற்றாழை நீரி லாட்டி
காரீயத் தகடடித்துப் பூசி டாயே. 1022

பூசியுமே அகலிலிட்டுச் சீலை செய்து
பெரும்புடமாய்ப் போட்டெடுக்க நீறு மாகும்
வாசியுமே மறுபடியும் நீரி லாட்டி
மதிப்பான கசபுடமாய்ப் போட்டெ டுத்து
காசியுமே கற்றாழை நீரி லாட்டி
கனபுடமாய்ப் போட்டெடுத்துக் காரீ யத்தை
வேசியேநா லிலொன்றுவெங் காரங் குன்றி
வெண்ணையொடு குக்கில்வெல் லம்கூட் டிடாயே. 1023

கூட்டியெல்லாம் அரைத்துமேதான் குகையி லிட்டு
குமுறவுமே வுலையிலிட்டு வுருக்கிச் சாய்ப்பாய்
நீட்டியுமே மாசகற்றி யெடுத்துக் கொண்டு
நிறுத்துமேதான் பதினாறுக் கொன்று சூதம்
மாட்டியுமே துருசிட்ட கற்றாழை நீரில்
மர்த்தித்துச் சூதந்தான் மாளு மட்டும்
மேட்டியுமே வில்லைசெய்து காய வைத்து
மேன்மையான அகலிலிட்டு மண்ணைப் பூசே. 1024

(அ.பொ.) :—மாளும்=மடியும்.

மண்பூசிக் காயவைத்துப் புடத்தைப் போடு
மணல்மறைவில் ரெண்டுபுடம் வெளியில் ரெண்டு
எண்பூசி எருவேத்தி ஐந்து புடந்தான்
ஏத்தமாகப் போட்டெடுத்து மித்திரம் வெருவி
குண்பூசிக் குகையிலிட்டு வுருக்கிக் கொண்டு
கொட்டிடுவாய் முன்னிறையாஞ் சூதம் போட்டு
நிண்பூசிப் பொடிபண்ணி நீரி லாட்டி
நீக்கான மண்மறைவில் புடந்தான் ரெண்டே. 1025

குறிப்பு :—மித்திரம் செய்முறையை பா. எண் 305, 306, 307இல் காண்க. நீர்=வெடியுப்புச் செய்நீர் 1005, 1006 பாடல்களில் காண்க.

புடம்ரெண்டு வெளிப்புடந்தான் கனபுட மொன்று
போட்டபின்பு இம்முறையே மூதரம் செய்து
குடமான நட்பதனால் குகையிலிட் டுருக்கிக்
கூட்டிடுவாய்ச் சமனாகத் தங்கந் தன்னைத்



திடமான சூதத்தைத் தூய்மை செய்து
சேர்க்கவுமே காரீயம் எடைதான் தூக்கி
கடமான கல்வத்தில் சூதந் தான்விட்டு
கற்றாழை நீராலே அரைத்தி டாயே. 1026

(அ.பொ.) :—நட்பதனால்=மித்திரம் முன்பாட்டின் குறிப்பைக் காண்க.

நீராலே அரைத்திட்டு சூதத் தெடையாம்
நேர்பாக முன்சொன்ன துருசகுரு கூட்டு
நாராலே அரைக்கவுமே மெழுகு மாகும்
நலமான காரீயந் தங்கந் தன்னைக்
கூராலே தூள்செய்து கூடச் சேர்த்து
குமுறவே தானரைத்து நீரி னாலே
வேராலே வில்லைபண்ணிக் காய வைத்து
முன்னரைத்த தாளகத்தை மேலே பூசே. 1027

(அ.பொ.) :—நீர்=வெடியுப்புச் செய்நீர் : பா. எண் : 1005, 1006இல் முறையைக் காண்க.

பூசியுமே சூதமெடை தாள கத்தைப்
போதுமான அகலிலிட்டுச் சீலை செய்து
மாசியுமே மணல்மறைவில் புடந்தான் ரெண்டு
மறுதரந்தான் வெளிப்புடமாய் ரெண்டு போடு
காசியுமே கனபுடந்தான் ஒன்று போட்டுக்
கணத்தநவ லோகத்தில் நூற்றுக் கொன்று
ஏசியுமே எட்டரைதான் மாற்றுக் காணும்
ஈன்றெடுத்த காலாங்கி நாதர் சொல்லே. 1028

## காரீயக்களங்கு செந்தூரம்

சொன்னதொரு களங்கிற்கு நாலி லொன்று
சூட்டியுமே கத்தகத்தைக் குப்பிக் கேற்றி
வன்னதொரு வாலுகையில் செந்தூ ரித்தால்
மாதுளம்பூ நிறமான காந்தி யாகும்
அன்னதொரு ஆயிரத்திற் கொன்றே யீய
ஆணிக்குப் பத்தரையா மறிந்து கொள்ளு
பன்னதொரு செந்தூரம் பணவெடை யுண்ணு
பாலனைப்போ லென்னாளு மிருக்க லாமே. 1029

## அண்டக் குரு

இருக்கவுமே நாகமது பலமும் பத்து
இலுப்பைநெய்யில் ஏழுமுறை உருக்கி உருக்கிப்
பருக்கவுமே சாய்த்திடுவாய் தூய்மை யாகும்
பத்தண்டம் புதிதாகப் பார்த் தெடுத்து
முறுக்கவுமே பூநீறு தெளிவி றுத்து
முனையான கல்லுப்புப் பலந்தா னைந்து
அறுக்கவுமே பொடிபண்ணி யதிலே போட்டு
அண்டத்தை யமிழ்த்திநன்றாய் வைத்தி டாயே. 1080

அமிழ்த்தியுமே நாளைந்தும் ஆன பின்பு
அனலில்வைத் தெரித்திடுவாய் பொங்கா மற்றுன்
திமிழ்த்தியுமே நீர்வற்றி யான பின்பு
நெகிழவைத்து வண்டத்தை யெடுத்துக் கொண்டு
சுமிழ்த்தியுமே மருதாணி வேர்ப்பட் டைதன்னைத்
தூளாக்கி யிடித்துமேதான் கழுதைப் பாலை
தமிழ்த்தியுமே சாறுவிட்ட ரைத்து மைபோல்
தசவண்டம் மேல்கவசம் தாக்கி டாயே. 1081

(அ.போ.) :—மருதாணி—ஐவனம்.

தாக்கியுமே ஏழுநாள்தாம் பரிதியில் போடு
தனித்தபின்பு வச்சிரமாம் சீலை செய்து
தேக்கியுமே கசபுடமாய்ப் போட்டெ டுத்தால்
சிந்துகின்ற மாப்போலே குருவு மாகும்
சாக்கியுமே இக்குருதான் ஏதுக் கொப்பு
சாம்பசிவன் தனக்கொப்பு சாற்ற மாட்டேன்
பாக்கியமாம் வாதிக்கிக் குருதான் கிட்டும்
பகரரிது முழுவண்ட நீறு தானே. 1082

## அண்டச் செய்நீர்

நீறான குருவதனில் சாரம் ரெட்டி
நீட்டியரை நெட்டங்கு மட்டும் நன்றாய்
ஆறான நீராகும் வீரத் தைப்போட்டு
ஆண்மையான நாகத்தில் சுருக்குப் போடு
தாறான நாற்சாமம் சுருக்குப் போட்டு
சதுரமாக லேசாக வில்லை வார்த்து
மூறான முன்கட்டு முப்புத் தானும்
மூட்டியரை நாகத்தினெடை தானும் காணே. 1083



## நாக வேதை

அரைத்திட்டு வெடியுப்பு நீரி னாலே
அழுந்தவுமே நாகத்தில் கவசங் கட்டி
புரைத்திட்டுப் பூநீறு கீழ்மே லிட்டு
பெரும்புடமாய் மூன்றுபுடம் போட்ட பின்பு
கரைத்திட்டுக் கல்லுப்புக் கவசம் நீக்கி
கவசத்தின் கல்லுப்புப் பின்னு மாகும்
நரைத்திட்டு நாகத்தை யெடுத்துக் கொண்டு
நாற்சதுரம் லேசாக வில்லை வாரே. 1084

வில்லைதனை யெடுத்தப்பால் வைத்துக் கொண்டு
மின்னலான மனோசிலையும் பலமு மெட்டு
அல்லைதனை வெள்ளாட்டுக் கோமி யத்தில்
ஐந்துநாள்தாம் ஊறவைப்பாய் பருப்பு போலே
எல்லைதனை மனோசிலையை யெடுத்துக் கொண்டு
ஏகமாகக் கிழிதனிலே தளரக் கட்டி
நல்லதனை வெள்ளாட்டுக் கோமி யத்தில்
நாற்சாமம் எரித்திட்டு நலமாய் வாங்கே. 1085

வாங்கியுமே முன்குமரி நீரி னாலே
வளமாகச் சுருக்கிடுவாய் நான்கு சாமம்
நீங்கியுமே கல்வத்தி லெடுத்துக் கொட்டி
நீரினால ரைத்திடுவாய் நான்கு சாமம்
தேங்கியுமே வில்லைசெய்து பரிதியில் வைத்து
செப்புக்கு ளிட்டுமேதான் மண்ணைப் பூசி
பூங்கியுமே மண்மறைவில் புடந்தான் ரெண்டு
பின்புதானே வெளிப்புடமாம் குக்கிட முமாமே. 1086

(அ.போ.) :—குமரி—சோற்றுக்கற்றாழை.

குக்கிடத்தின் புடம்போட்டெ டுத்துக் கொண்டு
குழப்பியுமே கற்றாழை நீரி னாலே
நக்கிடத்தின் நாகத்தின் மேலே பூசி
நலங்காமல் செப்பில்வைத்துப் புடத்தைப் போடு
புக்குடத்தின் பொடியாக அதராய் வீழும்
பின்னையுமோ குழம்புதனில் பிசறிக் கொண்டு
அக்கிடத்தின் ஐந்துபுடம் போட்டெ டுக்க
அதரதராய்ப் போய்விடுமே யெல்லாந் தானே. 1087

தானென்ற நாகமெடை சிலையு மாகும்
தாக்கான அதருக்கு நான்கிற் கொன்று
வேனென்ற வெங்காரம் குன்றி வித்து
வெல்லமொடு குக்கிலொடு எருமை வெண்ணெய்
ஆமென்ற அதரதனில் பிசறிக் கொண்டு
அதட்டியுமே வுருக்கித்தான் லேசாய் வில்லை
வாமென்று வார்க்கையிலே பதினாறுக் கொன்று
வரிசையாகச் சூதமது சுத்தித்துக் கூட்டே. 1038

கூட்டுவது மெப்படிதா னென்றால் கேளு
குறிப்பாக இரும்பாலே தகடு செய்து
நாட்டுவது நாற்சதுரம் விரலு யர்த்தி
நல்லிரும்பு தனில்செய்வா யச்சு போலே
தூட்டுவது சூதத்தை யதிலே விட்டு
துப்புறவாய் நாகத்தை யுருக்கி யூற்று
நீட்டுவதி லேசாகத் தகடு வீழ
நேரான தகட்டினிறை பாதி தானே. 1039

பாதியேதான் முன்சிலையைக் குழப்பிக் கொண்டு
பக்குவமாய்ப் பூசியுமே புடத்தைப் போடு
ஆதிதானே அதரெல்லாம் வாங்கிக் கொண்டு
அப்பால்தான் நட்பதனை வெருவி யூதி
சாதிதானே முன்னிறைக்கு ரெட்டி சூதம்
சதுரமான இரும்புக்கு ளிட்டு வைத்து
நாதிதானே நாகத்தை அதிலே யூற்றி
நல்லிரும்பு தன்னிலே நிரவி டாயே. 1040

நிரவியுமே ஆறவிட்டு வில்லை தன்னை
நேர்பாகக் கால்வாசி சிலைய ரைத்து
தரவியுமே தகட்டின்மேல் பூசிப் பூசி
சாரவேதான் காயவைத்து செப்பி விட்டு
மரவியுமே மண்செய்து மண்மறை புடந்தான்
மாண்டபின்பு வெளிப்புடம் குக்குடந் தான்ரெண்டு
பரவியுமே ஐந்துபுடம் போட்ட பின்பு
பாச்சிடுவாய் நட்பதனில் வெருவித் தானே. 1041

வெருவியுமே வுருக்கிட்டு முன்சூ தம்போல்
மூன்றுநிறை விட்டுந்தான் அதிலே சாய்ப்பாய்
தருவியுமே கால்வாசி சிலைதா னரைத்து
தாக்கியுமே புடம்போடு முன்போல் தானும்



அருவியுமே ஐந்துமுறை யுருக்கிக் கொண்டு
ஆதியான சூதமுமே வோரோர் பங்கு
எருவியுமே யேற்றியுமே முன்போல் விட்டு
இருக்காமல் சாய்த்திடுவாய் நாகந் தானே. 1042

நாகந்தான் ஆனபின்பு சொல்லக் கேளு
நலிவில்லா துருக்கியுமே வைத்துக் கொண்டு
தாகந்தான் தங்கத்தில் சரியெடை யீந்தால்
தவளைபோல்தான் விழுங்கியுமே ஊணைக் கொள்ளும்
பாகந்தான் தூள்செய்து சூதந் தன்னைப்
பாங்காக வீழ்ந்திடவே வுருண்டு தானும்
பூகந்தான் தூள்தனக்குக் கற்றாழை நீரில்
புளிகிதமாய் ஆட்டவேறா தமாயழைக் கும்பாரே. 1043

(அ.பொ.) :—ஊணை=ஆகாரத்தை.

அழைக்குமதே சூதத்தை யிருவர் கூடி
அஞ்சலிதான் செய்துமதே பத்துப் பேரை
தழைக்குமதே கற்றாழை நீரி லாட்ட
சந்தித்து எல்லாந்தா னென்றாய்ப் போகும்
பிழைக்கவுமே புடமைந்து முன்போல் போடு
பேரானக் களங்காகும் நூற்றுக் கொன்று
உழைக்கவுமே செய்துவைக்கும் பத்து மாகும்
உறுதியான செந்தூரம் செய்தி டாயே. 1044

செந்தூரம் செய்துந்தான் உண்பா யானால்
சிறுகதிர்போல் மேனியாமா யிரத்திற் கோடும்
எந்தூரம் போனாலும் கால்நோகா காது
எளிதாக மும்மூலம் சித்தி யாகும்
கந்தூரம் ஆறுதலங் கண்ணில் தோன்றும்
களங்கமற்ற பூரணமு மடுக்காய்க் காணும்
பந்தூரம் வயதுபதி னாறு மாகும்
பழுத்தவுடல் இளைஞனைப்போ லாகுங் காணே. 1045

(அ.பொ.) :—பழுத்த உடல்=முதுமை எய்திய உடல்.

## நாகத்தின் இயல்பு

காணவுமே நாகத்தின் குணத்தைக் கேளு
கருத்ததொரு குணமுண்டாய்த் தானிருக்கும்
சீணமர்க சீக்கிரத்தி லுருகிப் போகும்
தேய்த்திதை முகர்ந்தாக்கால் நாற்றம் காணும்

மூணவுமே மிருதுவுமாய்த் தானி ருக்கும்
　　மேனிகொஞ்ச மாயிருந்து நிறுத்துப் பார்த்தால்
பாணவுமே பாரமெத்த வாயி ருக்கும்
　　பரஞ்சுடராம் சோதிபிர காச மாமே. 1046

பிரகாச மதிகவெப்ப மாயி ருக்கும்
　　பித்தத்தை வாதத்தைச் சிலேத்து மத்தைச்
சிரகாச மேகத்தை மூர்ச்சை தன்னைச்
　　சீரணுக்கி ஙிமந்தத்தைத் தாபத் தைத்தான்
நரகாசச் சூதரசம் சமூக மாகும்
　　நவிந்தபஞ்ச குற்றத்தை நீக்கிப் போடும்
விரகாசம் வேதைக்குப் பொன்னி லுந்தான்
　　வெள்ளிக்கு சூதத்துச் சூதம் இனமே. 1047

ஆமென்ற சூதத்திற்கு மித்துரு வாகும்
　　அடுத்தரச லோகங்கள் குற்றம் நீங்கும்
வேமென்ற அட்டமாசித் தியியும் தானும்
　　வித்தையறிந்து கட்டிச்செந் தூரஞ் செய்வாய்
நாமென்ற நாகார்ச்சு னர்நா கத்தால்
　　நயந்தாயிரத் தெட்டுமாற்று செய்தார் தாமே
தேமென்ற சித்தியிதில் செப்பக் கூடா
　　சிறியன்தான் அறிந்தமட்டும் சொன்னேன் பாரே. 1048

சொன்னதுவோர் காரியங் குணத்தைக் கேளு
　　சுத்தபிர மேகத்தைப் போக்கி வைக்கும்
கன்னமான வாதத்தில் கவட்டை நீக்கிக்
　　கல்மிசங்கள் தள்ளியேக ழற்றிப் போடும்
பென்னதுவோர் பெருவயிறு வுப்பு சங்கள்
　　பேரான பாண்டோடு புண்கள் போக்கும்
நின்னதுவோர் நேத்திரத்தின் நோய்க ளெல்லாம்
　　நீக்கிவிடும் காரியம் நிசந்தான் காணே. 1049

## இரும்பு தோற்றம்

காணவுமே காந்தத்தின் தோற்றம் குணங்கள்
　　கண்டுமேதான் உபரசங்கள் முன்னே சொன்னேன்
ஈணவுமே இரும்பினது தோற்றங் கேளு
　　ஏற்றதிருப் பாற்கடலில் பூரு வத்தில்



ஆணவுமே அமிர்தந்தான் கடையும் போது
　　அசைமந்தி ரகிரியைமத் தாக நாட்டி
வாணவுமே வாசுகியைக் கயிருப் பூட்டி
　　விட்டுணுவும் கூர்மமாக அடியா னுரே. 1050

அடியானுர் மத்துக்கா தார மாக
　　அமர்ந்தார்கள் தேவர்களும் ஒருபு றந்தான்
பிடியான ராட்சசர்கள் ஒருபக் கந்தான்
　　பெருங்கூட்ட மமிர்தந்தான் கடையும் போது
துடியான திவலையது கரையோ ரத்தில்
　　தெறிக்கவுமே பரிதியதின் கதிரி னுலே
கடியாகக் காய்ந்துமேதான் பூமி யில்தான்
　　கட்டியாக கனமுமாக இரும்புண் டாச்சே. 1051

## இரும்பின் வேறுபாடுகள்

உண்டான தீட்சணமா மிரும்பு தானும்
　　உற்றதோ ராறுவித மேதென் ருக்கால்
கண்டான கரமென்றும் கரஞ்ச மென்றும்
　　கடியதோர் ஓநாளம் தாரா பட்டம்
பண்டான பரசுவுந்தான் காளலோகம்
　　பாங்கான கரலோகக் குணத்தைக் கேளு
முண்டான பேருறையக் கனமாய்க் காணும்
　　மொத்தமாய்த்தான் தகடாகும் உடைந்தால் கேளே. 1052

(அ.பொ.) :—தீட்சணம்=சூடு.

## இரும்பின் குணங்கள்

கேளுமேதான் சூதம்போல் மினுப்புங் காணல்
　　கெட்டியாக வளைத்தால்தான் வளையா தொடியும்
ஏளுமேதான் இக்குண முண்டான யிரும்பு
　　இசைந்ததோர் கரலோக மென்று பேராம்
வேளுமேதான் வெளுப்பாகி அழுக்க டைந்தால்
　　வங்கமிக்க கனம்போலே பூமி யில்தான்
நாளுமேதான் பூமாதே வியின்நா தத்தில்
　　நலத்துமேதான் தோற்றமதே யாகுந் தானே. 1053

உற்பத்தி யதையொடித்தால் சீக்கி ரத்தில்
உடையுமதன் பேர்கரஞ்ச மென்ப தென்க
விற்பத்தி வெளுப்போடு கருப்பு மாகி
மிகவளைச்சல் ஈயம்போல் வளைத லாகி
கற்பத்தி மெத்தவுமே கனமாய்க் காணல்
காய்ச்சினல் குண்டுமணி நிறம்போ லாதல்
தற்பத்தி ஓநாள மென்ற லோகம்
தாராபட் டமென்கின்ற லோகந் தானே. 1054

கேழ்க்கவுமே ஓநாளக் குணமு மாகும்
கெட்டியான பாசரமென் றலோகந் தானும்
வாழ்க்கவுமே வச்சிரத்தின் சமனுய்க் காணும்
மயிர்போலே கீற்றுவிழும் மெழுகூர்ந் ததாகும்
பாழ்க்கவுமே பச்சைநிற மாயி ருக்கும்
பாரமான காளமென்ற லோகந் தானும்
காழ்க்கவுமே கருப்புமாக நீல வர்ணம்
காய்ச்சினலே மழமழப்பாய்க் கனமு மாமே. 1055

(அ.போ.) :—பாசரம்=பரசு என்னும் பெயர் பா. எண் 1058ல் காணப்படுகிறது. இது ஏழுவகை இரும்பில் ஒன்றும்.

கனமுமாக இரும்புடைய லட்சணங்கள்
கனத்துமேதான் மெழுகூர்ந்து சூட்ச மாகி
அனமுமான வக்கினிதான் தோற்ற மாகி
அதிகவெப்பஞ் சீதளமு மாகக் காணும்
பனமுமான சோபையொடு பாண்டு தானும்
படர்கின்ற வாதபித்த சேத்து மத்தை
மினமுமான குட்டத்தை ஆமத் தைத்தான்
மேகத்தைப் பெருவயிற்றைப் போக்கும் பாரே. 1056

போக்குமதே மாரடைப்பை மூலங் குன்மம்
பேரெலும்பைப் பற்றினமா சுரத்தை நீக்கும்
நீக்குமதே பவுத்திரத்தை நீர்க்கட் டைத்தான்
நெளிகின்ற கிருமிநேத் திரநோ யைத்தான்



ஆக்குமதே காயசித்தி லோக சித்தி
ஆதியான ரசக்கிரியை தனக்கு மாகும்
பூக்குமேதான் கரடுலோகந் தொட்டுத் தானும்
பிரித்தொன்றுக் கொன்றதிகம் நூறு மட்டே. 1057

நூறுமட்டுக் கொவ்வொன்று யர்த்தி நூறு
நுட்பமான குணமதிகஞ் சொல்ல லாகும்
ஏறுமட்டுக் கைக்குவண்ணஞ் சொல்லக் கேளு
ஏற்றமான மூன்றுவித நேர்புத மாகும்
மீறுமட்டும் மெதுவென்றல் மிருது மூன்றும்
மிடுக்கான தாரோக்கி யமிதின் மூன்றும்
தாறுமட்டும் மூன்றுதனில் முதலாம் தன்னை
தாக்கியுமே வுருக்கினலே வுருகும் பாரே. 1058

உருக்குமதே முதல்தரந்தான் உத்தம மாகும்
உகந்தரெண்டாந் தரந்தான்க னமில்லா தாகி
புருகுமதே பிரகாச மில்லை காணும்
பிரித்திதை மத்திபமென் றறிந்து கொள்ளு
முருகுமூன்றாந் தரத்தையுடைத் தாலே பாரும்
மிக்ககருப் பாயிருக்கும் கடிது மெத்த
அருகுமதே விதுதானும் அதம மாகும்
ஆதியான முதற்றரமுத் தமந்தா னென்னே. 1059

உத்தமந்தான் விகாரமில்லை இலைபோ லிருக்கும்
உருகுகின்ற விதுதானும் வாதம் போக்கும்
சித்தான சிலேத்துமமொ டுகுன்மம் மூலம்
தீராத சூலையொடு மேகம் போக்கும்
வத்தமந்தான் காமாலைப் பாண்டு சோகை
வயிறுகட்டி தனைப்போக்கும் குருதி யூறும்
பத்தமந்தான் தீபனமும் மிகுதி யுண்டாம்
பச்சையரோ சிகம்பித்தம் தானும் போமே. 1060

(அ.போ.) :—பத்தமம்=(போக்குகளைக்) கட்டக்கூடிய.

போம்வயிற்றில் நாக்குபூச்சி களெல்லாம் தானும்
பொடிபண்ணும் அரப்பொடிதான் உயர்ந்த லோகம்
பாம்பத்து பலம்நிறுத்துக் கிழி கட்டி
பாங்கான வாழையுட கிழங்குச் சாற்றில்
நாம்கண்டு சாமந்தான் யெரியிட்டு வாங்கி
நலமான பரிதியில்வைத் துலர்த்திக் கொண்டு
காம்காக்கைச் சிப்பியதைத் தூய்மை செய்து
கனபுடமாய்ப் போட்டெடுத்து நீறு வாங்கே. 1061

நீறுதானே சட்டியினில் பாதி வைத்து
நேர்ந்துமேதான் கறியுப்பை அமுரியில் கரைத்து
காறுதானே உப்பாக காய்ச்சிக் கொண்டு
கலக்கவுமே தூளாக்கிப் பலந்தா னுறு
ஆறுதானே நீறதனை மேலழுத் திவைத்து
அதன்மேலே பொட்டிலுப்பும் பலந்தான் மூன்று
வேறுதானே பொடியாக்கி யதன்மேல் வைத்து
வெண்சீனப் பொடிரெண்ட தன்மேல் வையே. 1062

வைத்திடுவாய் அதன்மேலே சாரந் தானும்
வரிசையாக அண்டம்போல் பலந்தா னென்று
தேத்திடுவாய் சீனத்தின் பொடிதான் முன்போல்
திறமான வெடியுப்புப் பொடிதான் முன்போல்
ஐத்திடுவாய் கல்லுப்புப் பொடிதான் முன்போல்
அமிழ்த்தியபின் மேலேதான் சிப்பி நீறு
ஏத்திடுவாய் அடுப்பேற்றி தீபம் போலே
இருசாமம் எரித்திடவே சாரம் கட்டே. 1063

## அயச் சத்து

கட்டியதோர் சாரமது பலந்தா னென்று
கல்லுப்புக் கட்டினது பலமு மொன்று
வெட்டியதோர் வெங்காரம் பலமு மொன்று
முனிந்ததொரு லிங்கமது பலமு மொன்று



தெட்டியதோர் வெடியுப்புச் செய்நீ ராலே
சேர்த்தரைப்பாய் நாள்மூன்ற ரப்பொடி பிசறி
மூட்டியதோர் மூன்றுபங்காய்ப் பிரித்துக் கொண்டு
முதல்பங்கை அரப்பொடியில் சேர்த்தி டாயே. 1064

சேர்த்துமேதான் குகையிலிட்டுச் சில்லு போட்டு
சிதையாமல் உருக்கியுமே ஓட்டில் கொட்டி
பேர்த்துமேதான் பின்னுமொரு பங்கு கூட்டி
பிரளவுமே மணியெல்லாம் பொறுக்கிக் கொண்டு
மார்த்துமேதான் முக்காலு முருக்கிக் கொண்டு
மணியெடுத்து பஞ்சமித்தி ரத்தைக் கூட்டி
பார்த்துமேதான் மறுக்காலும் உருக்கிக் கொண்டு
பக்குவமாய் எடுத்துமேதான் பதனம் பண்ணே. 1065

(அ.போ.) :—மறுக்காலும்=மறுபடியும்.

பக்குவமாம் சத்தெடுத்து உடைத்துப் பார்த்தால்
பளிச்சென்று நாகம்போல் வெளுப்பு மாகும்
தக்குவமாம் சத்திலரைப் பலமு ருக்கித்
தாக்கிடுவாய் தங்கத்தை ரெண்டுக் கொன்று
இக்குவமாம் தங்கமெடைக் கட்டு நாகம்
ஈந்திடவே எடுத்துள்ளே யெட்டி வீழ்ங்கும்
தக்குவமாம் சாதிலிங்கக் கம்பி வாங்கி
தளும்புகின்ற பழச்சாறு சுருக்குப் போடே. 1066

சுருக்கிடுவாய் முலைப்பாலால் சாமந் தானும்
சீறுகின்ற ஐவிரலிச் சாறு வாங்கி
நறுக்கிடுவாய் நால்சாமம் சுருக்குப் போடு
நளுத்தபழங் காயோடு நருக்கித் தூளாய்
புறுக்கிடுவாய் ரவியிலேதான் காய வைத்து
புடத்தயிலம் வாங்கியுமே சுருக்குப் போடு
முருக்கிடுவாய் முன்குருதான் துருசு தன்னை
முலைப்பாலா லரைத்துமேதான் கவசங் கட்டே. 1067

(அ.போ.) :—ஐவிரலி=இது கோவையினம்; ''ஐவிரலிக் கோவை''
என்பர்.

கட்டியுமே சிப்பிநீற்றுக் குள்ளே வைத்து
கவுதாரிப் புடம்போடு ஐந்து தானும்
அட்டியுமே அயமும்நின் றுருகும் போது
ஆடகத்தில் ரெட்டிப்பி லிங்கம் போடு
குட்டியுமே போட்டெடுத்த குரங்கு போலே
குழைந்தொன்றாய்ச் சேர்ந்துமேதான் களங்கு மாகும்
எட்டியுமே இல்லையினி ஏம வித்தை
ஆடலாம்தான் நூற்றுக்கொன் றேம மாமே. 1068

(அ.பொ.) :—எட்டியுமே=வெகுதொலைவில்.

## அயக்களங்கு செந்தூரம்

ஏமமான செந்தூரம் பண்ண லாகும்
எண்பதுக்கு மேல்தானும் இந்தக் கற்பம்
கோமமான கொள்ளையிலே அழுந்தும் தேகம்
கொப்பளித்துச் சட்டையொன்று கக்கிப் போடும்
பாமமான பதினாறு வயது மாகும்
பருதியுள்ள மட்டுக்கு மிருக்க லாகும்
ஆமமான அயத்தினுட கற்பந் தானும்
யாவருமே தின்னலாமே யறிந்து பாரே. 1069

## வெங்கலத் தோற்றம்

அறிந்திடவே முன்சொன்ன நவகண் டத்தில்
அகோரமான காளிகாவின் கண்டத் தில்தான்
வெறிந்திடவே வெங்கலமுற் பத்தி யாகும்
மிக்கவுமே சவுராட்டி ரதேச மான
கறிந்திடவே காளிகாவின் கண்டத் தில்தான்
கனத்ததோர் ஆச்சிரமம் உண்டத னில்தான்
எறிந்திடவே யாதொருவ ரிருந்தா ராகில்
எள்ளளவும் சலனமின்றி யிருப்பார் தானே. 1070

இருப்பார்கள் ஆச்சிரமம் தன்னில் தானும்
இராமலட்சு மணபரத சத்துருக் கன்போல்
நருப்பார்கள் நான்குபேர்தாம் அண்ணன் தம்பி
நயந்தந்த ஆசிரமந் தன்னில் வந்தார்



வருப்பார்கள் வந்திடத்தி லதிலோர் சத்தன்
வகையான தம்பியவன் தரும பாலன்
அருப்பார்கள் அந்நாளில் நான்கு பேரும்
அலைந்துமேதான் கூடிவிளை யாடி னாரே. 1071

ஆடினவர் விசுவபிரம் மாவங் கிசந்தான்
அமர்ந்தவாச்சி ரமத்திலோர் மலையுண் டன்றே
பூடியந்த மலையின்கீழ்ப் பூமி யில்தான்
பொன்னின்பி ரகாசத்திற் கொக்கத் தானும்
தேடினவர் சிலையொன்று கண்ணில் கண்டார்
சிலைதனையே தருமபுரி பாலன் பார்த்து
மாடிமகா மகிழ்ச்சிதனை யடைந்தோ னாக
மதிப்பான சிலாப்பட்டந் தன்னைத் தானே. 1072

குறிப்பு :—தருமபுரிபாலன்=தருமபாலன் என்று பா. எண் 1072ல் கண்டுள்ளது. சிலாப்பட்டம்=வெண்கலம்.

தன்னையான சிலைதனையே யாயுதத் தாற்பிளந்து
தனித்தபிர காசமான விருத்த மாக
நின்னையான மெழுகூர்ந்த தாகந் தானும்
நிர்மலமாய்க் கண்ணாடி போல்சமைத்தான்
சின்னையுமே சிலையினுட சுற்றுச் சீவல்
சிதைந்தபொடி யெல்லாந்தான் மற்ற மூவர்
அன்னையான கருக்கட்டி யுருக்கிக் கொண்டு
அனேகமான பாத்திரங்கள் உண்டாக் கினாரே. 1073

(அ.பொ.) :—கருக்கட்டி=உருக்கி வார்க்கும் அச்சுகள்.

## வெங்கல பேதம்

ஆக்கியுமே சகலருந்தான் உண்ணத் தக்க
அனேகவித பாத்திரங்கள் உண்டாக்கி னார்கள்
வேக்கியுமே வெங்கலந்தா னிரண்டு பேதம்
மிக்கதுவோர் புசங்கமென்ற வெங்க லந்தான்

தாக்கியுமே காளிகாவின் கண்டந் தன்னில்
சவுராட்டி ரநாட்டில்தான் தோற்ற மாச்சு
மீக்கியுமே ரசகர்மம் தனக்குத் தானும்
மிகுதியுமே வுத்தமமென் றறிந்து கொள்ளே. 1074

(அ.பொ.) :—ரசகர்மம்=இரசவேதைத் தொழில்.

அறிந்துமதே கிரித்துரும வெங்க லந்தான்
அடைவுதானே செம்போடு வெள்ளீ யம்ரெண்டும்
குறித்துமேதான் குகையிவிட்டு வுருக்கிச் சாய்க்க
கிரித்துரும மென்றவெங்க லமுமே யாச்சே
தறித்துமதே யிதைத்தானும் சர்வ நோய்கள்
தணிப்போக்கும் வெங்கலந்தான் உரத்த சத்தம்
கறிந்துமதே கனமிகுதி யாயி ருக்கும்
காய்ச்சினுல்தான் சிவந்தநிற மாகும் பாரே. 1075

பாரென்ற நிர்மலமாய்க் கொஞ்சந் தானும்
பசந்தநிற மாய்வெளுப்பாய் மெதுவாய்க் காணும்
வேரென்ற யிதுமிகுதி வுத்த மந்தான்
மிகுத்தானும் சிறிதுமஞ்சள் நிறமாய்க் காணும்
தேரென்று சிவக்கவுமே காய்ச்சி ருக்கால்
செம்புநிற மாகியுமே மிகவூ றலாகி
காரென்ற கனமில்லை தொனிமத் திபந்தான்
கருப்பாக மாசடைந்தா லிதைவாங் காதே. 1076

(அ.பொ.) :—பசந்தநிறம்=பச்சைநிறம் ; தொனி=ஒலி.

## வெங்கலத்தின் குணம்

இதுவாகா தொன்றுக்கும் எறிந்து போடு
ஏற்றமான வெங்கலந்தான் கருபி தன்னை
வதுவாகா வாதத்தைப் பித்தத் தைத்தான்
மாசான கோழையைத்தான் போக்கி வைக்கும்
உதுவாக சிறுகசப்பாய் வெப்ப மாகும்
உற்றதுவோர் பெரும்பாடு சிவப்பு வெள்ளை
ததுவாக சோமரோகந் தன்னைப் போக்கும்
சாப்பிட்டால் பாத்திரத்தில் சுகமு மாமே. 1077



சுகமாகும் நெய்புளிப்புச் சரக்கு கள்தான்
சேர்த்துவைத்தி துகளிலே புசிக்க லாகா
மகமாகும் மற்றமற்ற பதார்த்த மெல்லாம்
மருவவேயி தில்வைத்து புசித்திட் டாக்கால்
அகமாகும் தேவாமிர் தத்திற் குமேலாம்
அறிந்திருந்த வெங்கலத்தைத் தெரிந்தெ டுத்து
பகமாகும் பலமைந்து நிறுத்துக் கொண்டு
பாங்காக வுருக்கியுமே வில்லை வாரே. 1078

## வெங்கல அதரு

வில்லைமேலே பூசுதற்கு மருந்து கேளு
வீரந்தான் நான்கிற் கொன் றுகக்கொண்டு
கல்லைமேல்தான் கற்றுழை நீரா லாட்டி
கஞ்சமான தகட்டிற்கு மேலே பூசி
தெல்லைமேல்தான் செப்பில்வைத்துச் சீலை செய்து
சிறப்புடனே புடம்போட அதரு மாகும்
அல்லைமேல்தான் அதரெடுத்து வைத்துக் கொண்டு
அப்படியே பூசியுமே புடத்தைப் போடே. 1079

(அ.பொ.) :—கல்லைமேல்=கல்வத்திலிட்டு ; கஞ்சம்=வெங்கலம் ; அதர்=வெட்டை.

புடம்போட வைந்துதரம் அதராய்ப் போகும்
பெருமையான அதரெல்லா மெடுத்துக் கொண்டு
விடம்போட வெண்ணெயொடு காரங் குன்றி
விருத்தமான குக்கிலொடு வெல்லந் தானும்
அடம்போட அதருதனில் விரவிக் கொண்டு
அழுத்தமான குகையிவிட் டுருக்கிக் கொண்டு
கடம்போட வார்த்துமேதான் லேசாய்த் தானும்
கடிந்தரைத்து வீரத்தை மேலே பூசே. 1080

## வெங்கலச்சத்துக் களங்கு

மேல்பூசிப் புடம்போட அதரு வீழும்
மிக்கவுமே முன்முறைபோ லைந்து முறைதான்
கால்பூசி சத்தெடுத்து வைத்துக் கொண்டு
கனமான குகையிவிடு பலந்தான் சத்து

வேல்பூசி வுருகையிலே அந்தெடை வெள்ளி
மிக்கவுமே காரமிட்டு வுருக்கிக் கொண்டு
சீல்பூசிச் சூதத்தைச் சுத்தி செய்து
செறிந்த வெடைக்கொக்க துருசு நீரே. 1081

துருசுவென்ற முன்குருதான் பலமு மொன்று
சூதந்தான் பலமொன்று கல்வத் திட்டு
கருசியென்ற கற்றுழை நீரி லாட்டி
கனக்கவுமே நால்சாமம் அரைத்து வில்லை
தெருசியென்ற பரிதியிலே காய்ந்த பின்பு
சூடனுட தீயதனில் சிவக்க வாட்டி
பருசியென்ற வெங்கலத்தை வெள்ளி தன்னில்
பாச்சியுமே நான்குமொன்றுய் அரைத்தி டாயே. 1082

அரைத்திடுவாய் கற்றுழை நீரி னுலே
அடைபோலே தட்டியுமே ரவியில் போடு
உரைத்ததுவோர் ஊமையென்ற சிப்பி நீரில்
உருகவைத்து வெளிப்புடந்தான் போட்டா யானுல்
கரைத்ததுவோர் களங்காகும் வெள்ளி செம்பில்
கருதியுமே நூற்றுக்கொன் றிட்டா யானுல்
விரைத்திடுவாய் வெள்ளியதி ருபத்தைந் துக்கு
மிடுக்கான மாற்றுகும் ரசிதந் தானே. 1088

## பஞ்சலோகத் தோற்றம்

தான்பஞ்ச லோகத்தின் தோற்றங் கேளு
தனித்ததுவோர் பூருவத்தில் அசுரன் தானும்
மான்பஞ்ச தேவர்கட் கிடுக்கண் பண்ணும்
மகத்தான பலசாலி யாயி ருந்தான்
தேன்பஞ்ச தேவரோடு யுத்தம் பண்ணி
திடுக்கிடவே பண்ணுகிற வேளை யில்தான்
ஆன்பஞ்ச தேவர்கள் ஒன்றுய்க் கூடி
அவனையேதான் கொன்றுர்கள் தேவர் தானே. 1084

(அ.பொ.):—இடுக்கண் = தீங்குகள்; உயுத்தம் பண்ணி = போரிட்டு.



கொன்றதுவோர் அசுரன்தன் எலும்பெல் லாந்தான்
கூர்மையான பஞ்சலோகங் களாச்சு தானே
உன்றதுவோர் அவனுடைய வுதிர மெல்லாம்
உலர்ந்துமேதான் கிரணத்தால் லோக மாச்சு
கன்றதுவோர் வெங்கலமும் வர்த்த லோகம்
காகதுண்டி யென்றும்பித் தளை தா னென்றும்
வென்றதுவோர் சருகுபித்த ளைதானென் றுந்தான்
மிக்கபஞ்ச லோகமுற்பத் திதானு மாச்சே. 1085

உற்பத்தி வர்த்தலோகக் குணத்தைக் கேளு
உறும்கசப்பு புளிப்புமாகத் தானி ருக்கும்
பிற்பத்தி பித்தத்தைச் சிலேத்து மத்தைப்
பேரானக் கிருமிகளை யரோசி கத்தை
நிற்பத்தி நேத்திரநோய் தனைத்தான் போக்கும்
நேரான அசுரனுட நாம தேயம்
கற்பத்தி லோகாசு ரனென்று பேரு
கசிந்தரெத்தம் பூமியிலே விழுந்த வாறே. 1086

(அ.பொ.):—அரோசிகம் = அரோசகம் = சுவையின்மை.

வீழ்ந்தவிடம் சுடக்கியுமே காய்ந்த வாறு
மிகுந்ததோர் காகதுண்டம் தோற்ற மாச்சு
வாழ்ந்தவெங்க லம்போலே அதரு செய்து
மார்க்கமாக புடம்போட்டுக் களங்கு செய்து
ஆழ்ந்ததுவோர் செந்தூரம் செய்து வுண்ணு
ஆயுளென்றும் அழிவில்லை யுகாந்தம் நிற்கும்
தாழ்ந்ததுவோர் வாதமெல்லா முயர்த்தி யாகும்
தனித்தவர்த்த லோகத்தின் தன்மை தானே. 1087

தன்மையான முன்சொன்ன பஞ்ச லோகம்
தனித்துமேதான் உற்பத்தி சொல்லுங் காலை
கண்மையான காகதுண்ட மாகி நின்ற
கடுந்தார பித்தளைதான் ரெண்டு மாச்சு

துண்மையான பரிதிகதிர் பட்ட தாலே
 சூட்டினாலே இரண்டுவிதக் குணமு மாச்சு
உண்மையாக முந்தினது உத்த மந்தான்
 உத்தமத்தில் மத்திபந்தான் ரெண்டாந் தானே. 1088

இரண்டிலேதான் முன்சொன்ன காகதுண் டந்தான்
 ஏற்றமான பூமியிலுற் பத்தி யாச்சு
பிரண்டிலேபித் தனைகிரித் தும மாகும்
 பேரான நாகம்ரெண் டெட்டு செம்பு
குரண்டிலுமே கூடிதான்பித் தனையு மாச்சு
 கூர்மையான நெருப்பிலேதான் காய்ச்சி னுக்கால்
மிரண்டினிலே கருப்புமெத முத்த மாகி
 வெடிப்பில்லை மெழுகூர்ந் திருக்கும் பாரே. 1089

இருக்குமேதான் காகதுண்டி தன்னைக் கேளு
 எங்குமேபி ரகாசமாகத் தானி ருக்கும்
துருக்குமேதான் சூத்திரமாம் பதுமைக் குத்தான்
 துணையான வாபரண மாயி ருக்கும்
கெருக்குமேதான் கௌரிவண்ண மழுத்த மாகும்
 கெடியான மேலூற வில்லா தாகும்
உருக்குமேதான் உள்ளுந்தான் புறமுந் தானே
 ஒருதிறமாய்த் தானிருக்கும் மெதுவு மாமே. 1090

மெதுவாகிப் பொன்னிறமாய்த் தானி ருக்கும்
 மிருதிரச கன்மத்துக் குத்த மந்தான்
மதுவாகி வெளுப்பாகி மஞ்ச ளாகி
 மதிப்பான வெட்டையாகக் குடில மாகி
இதுவாகி விரிசலாகிப் பிண்ட மாகி
 எளிதான லேசாகி நாற்ற மாகில்
அதுவாகில் மத்திபமென் றறிந்து கொள்ளு
 ஆகாது ரசகன்மந் தனக்குத் தானே. 1091

தானான நாகம்ரெண்டு செம்போ எட்டு
 தனிக்கூட்டுப் பித்தனையின் குணமுந் தானும்
கானான கசப்புமாகக் கடின ஊறல்
 கனமானக் குடிலமாக வெப்ப மாகி



தேனான விருத்திமிக வாயி ருக்கும்
 சீதளமாய்த் தானிருக்கும் இதன்கு ணந்தான்
கூறான சந்துகளின் குடைச்சல் பித்தம்
 கூர்ந்தவக்கி னிமந்தம்குட் டந்தான் போமே. 1092

(அ,பொ.) :—சந்து=மூட்டுகள்.

## சருகு பித்தனையின் குணம்

போகுமேச ருகுபித்த னையின்கு ணந்தான்
 பெருத்தரச பந்தனியாய்த் தானி ருக்கும்
காகுமேதான் கசப்புமாக வெப்ப மாகிக்
 கனமான சீதளகா ரியுந்தா னாகும்
வேகுமேவீ ரியவிருத்தி தானுண் டாகும்
 மிகுந்ததோர் பித்தத்தைச் சிலேத்து மத்தை
மாகுமேமூத் திரகிரிச்ச ரம்தன் னோடு
 மகோதரங்கள் மூலங்கள் போக்கும் பாரே. 1093

பாரபஞ்ச லோகங்கள் தன்னைத் தானும்
 பாரமாக வீரத்தால் அதரு செய்து
நேரபஞ்ச மித்திரத்தால் உருக்கிக் கொண்டு
 நீட்டியுமே வைந்துமுறை யான பின்பு
காரபஞ்ச வுபரசத்தால் உபச ரிப்பு
 காரணந்தான் ஏதென்றால் சொல்லக் கேளு
தாரபஞ்ச தங்கமொடு சூதம் நாகம்
 சாற்றறிய கந்திமனோ வசியங் காணே. 1094

காணவுமே விதுவைந்தால் உபச ரித்து
 கற்றாழை நீர்நான்கு சாம மாட்டி
பூணவுமே தூள்செய்து குப்பிக் கேற்றி
 போரான மணற்பானை மீது வைத்து
ஆணவுமே அறுசாமம் தீயை மூட்டி
 அமர்ந்திருப்பார் வீட்டுக்குள் எல்லா ருந்தான்
தோணவுமே நூறுபேர்க்கொ ருவர்தூ தாள்தான்
 சென்றிடவே,சொர்ணமய மான வாறே. 1095

(அ.பொ.) :—மணற்பானை=வாலுகை.

வாரான நவலோகம் வளப்பம் சுத்தி
மாட்டுகிற கருவோடு வயண மெல்லாம்
தாரான நடுக்காண்டந் தன்னில் தானும்
சமரசமாய்ச் சொல்லிவைப்பேன் சார்ந்து பாரு
ஈரான விக்காண்டந் தன்னில் யாவும்
இசைந்தாயி ரத்தின்மேல் சொச்ச மாச்சு
பேரான இக்காண்டந் தன்னில் தானும்
பிரித்துவுப ரசத்தைத்தான் சொல்லிட் டேனே. 1096

சொல்லிவிட்டேன் பாடாணம் சொச்சந் தன்னைச்
சூட்சமாக வுபரசத்தோற் றமது வெல்லாம்
சொல்லிவிட்டேன் குளிகைக்குச் சத்து ஆட்டும்
சூட்சங்கள் செந்தூரம் களங்கு சுண்ணம்
சொல்லிவிட்டேன் கைமுறைகள் எரிப்பு பாகம்
சூட்சாதி சூட்சங்கள் சுளுவு தானும்
சொல்லிவிட்டேன் நவலோகப் பிறப்பு வைப்பே
சுருதிமுறை சொன்னதுபோல் சொன்னேன் காணே. 1097

காணவுமே பாட்டர்சொன் னநூலைப் பார்த்து
கயிலையுறை நந்தீசர் தன்னூ லுந்தான்
தோணவுமே சிவயோக முனிதன் நூலும்
சிறுபாட்டர் பதஞ்சலிவி யாக்கிர மர்நூலும்
ஈணவுமே எனையீன்ற காலாங் கிநூலும்
ஏற்றமாம்பு சுண்டர்மா முனிதன் நூலும்
வேணவுமே மேருவினில் சிவன்தன் நூலும்
விளங்கியுமே யான்பார்த்துக் களிகூர்ந் தேனே. 1098

களிகூர்ந்து காண்டங்கள் ஏழுக் குள்ளும்
கருவெல்லாம் மூன்றுன காண்டத் துள்ளே
அளிகூர்ந்து வடக்கங்கள் கருக்கள் பாகம்
அணைவருந்தா னறியவென்று வெழுதிப் போட்டேன்



தெளிகூர்ந்து தேரான முறைக ளெல்லாம்
நினைவழிந்து போகாமல் சிறியோ ரேனும்
தளிகூர்ந்து பிழைப்பதற்கு ஞானம் சொன்னேன்
நாயகமாய் வாதத்தை நாட்டி னேனே. 1099

நாட்டினேனே வெடியுப்புச் செய்நீர் சாரம்
நளினமான புகைநீரில் உதகம் தயிலம்
ஓட்டினேனே கட்டுவகை குருசெந் தூரம்
வுண்மையான சத்துவகை யூத்து மார்க்கம்
ஆட்டினேனே வாலுகையின் வரிசை மண்கள்
அடர்த்தியான தீயெரிப்பு மூசை மித்திரம்
வாட்டினேனே வொவ்வொன்றாய் வரிசை யாக
வகையாக வுருக்கிமித்தி ரங்கள் தானே. 1100

மித்திரங்கள் ஆடகந்தான் பிறந்த மார்க்கம்
வெள்ளையுற்பத் திவிளையுமார்க் கந்தா னுமாம்
சித்திரங்கள் செம்பினுட குணகு ணங்கள்
திரிவங்க வுற்பத்தி செனித்த மார்க்கம்
பத்திரங்கள் பஞ்சலோகத் தினது மார்க்கம்
பாரமாக அதரெடுக்கும் பண்பு தானும்
குத்திரங்கள் சூதகுரு குருவின் மார்க்கம்
குணமாகும் வேதையினின் குணங்கள் தானே. 1101

குணங்களெல்லாம் வெளியாகச் சொல்லிப் போட்டேன்
குறித்தமூன்றுங் காண்டங்கள் தன்னில் தானும்
மணங்களென்ற வாதத்தை வரிசை யாக
வகைகண்டு அடிதொடுத்து நுனிமட் டிற்கும்
கணங்களென்ற கருவகைக ளெல்லாஞ் சொன்னேன்
காசினியெ லாமதிக்கும் குருவைச் சொன்னேன்
பணங்கண்டு பார்ப்பதற்குப் பாடா ணத்தைப்
படிப்படியாய் வைப்புமுறைப் பாடி னேனே. 1102

பாடினேனே பலமொழியும் பிரித்துப் பார்த்துப்
பாட்டர்சொன் னமந்திரத்தை மனதி லுன்னி
ஓடினேனே நூற்றறுப தாமண் டத்தில்
உயர்குருவாம் நந்திபக்கம் தொழுதி றைஞ்சி
வாடினேனே வாதத்தின் வண்மை கேட்டு
வகைகண்டு முக்காண்டம் வளப்ப மாக
காடினேனே ஆயிரத்து நூறு தன்னில்
கைகண்ட படிசொன்னேன் கடைசி முத்தே. 1103

முத்தான பராபரத்தாய் பாதம் போற்றி
முப்பாட்ட நாதனுர்தம் பாதம் போற்றி
சித்தான சிறுபாட்டர் சிவயோ கமுனி
செழுமையான மலர்ப்பாதம் சிரசில் வைத்து
பத்தான பதஞ்சலியார் வியாக்கிர மபாதர்
பாதந்தான் பணிந்துமேதான் நெஞ்சில் வைத்து
பித்தான வெணியீன்ற வய்யர் பாதம்
போற்றியுமே எழுகாண்டம் வரிசை முற்றே. 1104

## போகர் ஏழாயிரம்

மூன்றுமாயிரம் முற்றும்.



